# அறந்தாங்கித் தொண்டைமான்கள்

புலவர் செ.இராசு, எம்.ஏ., பிஎச்.டி.,
(முன்னாள் தலைவர், கல்வெட்டு-தொல்லியல் துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்)

**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**
**INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES**
இரண்டாம் முதன்மைச் சாலை, சி.ஐ.டி. வளாகம்
தரமணி, சென்னை - **600 113**

தினமலர் நாளிதழ் நிறுவுநர் திரு. டி.வி. இராமசுப்பையர்
அறக்கட்டளைச் சொற்பொழிவு
(அறக்கட்டளை நிறுவியவர்: தினமலர் ஆசிரியர்
திரு. இரா. கிருட்டிணமூர்த்தி அவர்கள்)

வரிசை எண் : 4 நாள் : 26-09-08

## BIBLIOGRAPHICAL DATA



| | | |
|---|---|---|
| Title of the Book | : | aṟantāṅkit toṇṭaimāṉkaḷ |
| Author | : | Pulavar C. Racu<br>Professor (Retd.)<br>Tamil University, Thanjavur |
| General Editor | : | Dr. K. Bhagavathi<br>Professor<br>International Institute of Tamil Studies<br>Tharamani, Chennai-600 113 |
| Publisher & © | : | International Institute of Tamil Studies<br>II Main Road, C.I.T. Campus<br>Chennai-600 113<br>Ph: 22542992 |
| Publication No. | : | 602 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Year of Publication | : | 2008 |
| Paper Used | : | 18.6 Kg TNPL Maplitho |
| Size of the Book | : | 1/8 Demy |
| Printing type used | : | 10 Point |
| No. of Pages | : | x+150 |
| No. of Copies | : | 1200 |
| Price | : | Rs.45/- (Rupees Forty Five Only) |
| Printed by | : | Abna Traders<br>13, II Cross Street, Ranganathapuram<br>Tambaram West<br>Chennai - 600 045<br>Ph. 044-22410735 |
| Subject | : | History |

பேரா. முனைவர் கரு.அழ. குணசேகரன்
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை-600 113

## அணிந்துரை

**அறந்தாங்கித் தொண்டைமான்கள்** எனும் இச் சொற் பொழிவு நூல் செய்துள்ள புலவர் செ. இராசு அவர்கள் கல்வெட்டு-தொல்லியல் துறைத் தலைவராகத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தில் பணியாற்றிய காலத்திலிருந்து இவரது கல்வித்திறனை அருகிலிருந்து கவனித்துள்ளேன். 'பலி ஆடுகள்' எனும் எனது நாடக ஆக்கத்துக்கான மூலகாரணம் பேராசிரியர் அவர்கள் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின்வழிப் பதிப்புச் செய்து வெளியிட்ட **தஞ்சை மராட்டியர் செப்பேடுகள்** எனும் நூலாகும்.

தொடர்ந்து இவரது நூல்களைப் படித்து வரும் பல்லாயிரக் கணக்கான தமிழர்களுள் நானும் ஒருவன். **அறந்தாங்கித் தொண்டைமான்கள்** எனும் இவரது இந்த நூலில் 20க்கும் மேற்பட்ட தொண்டைமான்கள் குறித்து விளக்கியுள்ளார். சோழர் காலத்தை நினைவுபடுத்தும் ஆவுடைநயினார் தொண்டைமான், பாண்டியர் ஆட்சியில் விளங்கிய உய்யவந்தான் திருநோக்கழகிய தொண்டைமான், சுந்தரபாண்டியத் தொண்டைமான் போன்றவர் களின் சிறப்புகளை விளக்கியுள்ளார். அச்சுதப்ப நாயக்கர் தொண்டைமான், இரகுநாத நாயக்கத் தொண்டைமான், ஆளுடைநயினார் தொர்ண்டைமான் போன்றவர்களின்வழி நாயக்கர் காலத்தை நாம் நினைவுகொள்ளச் செய்யும் வகையில் புலவர் இராசு அவர்களது விளக்கங்கள் அமைந்துள்ளன.

'அரையர்' எனச் சிறப்புப்பெற்றவர்களே 'பாடி காவல்' உரிமை பெற்றவர்களாக விளங்கினர் என்று (ப. 25) விளக்கியுள்ளவரின் விளக்கத்தைக் கீழ்க்காணுமாறு அறிவோம்.

> **.....கிளிப் பயிற்றூர் நாட்டுப்பாலைக்குடி, களங்குடி, கிளிநல்லூர் இந்த ஊரவர்களும் இம்மூன்று ஊர்க்கும் பாடி காவல்உடையோம் ஆன வல்ல நாட்டு அரையர்களும்**

இந்த அரையர்கள் நாடாண்டுள்ளனர் என்பதை (ப. 25),

> பாடிகாவல் உரிமை உடையவர்களாக நாடாழ்வார், அரையர், சார் அரையர் ஆகப் பெயர் பெற்ற சிலர் ஆளும் தகுதியாய் 'அரசு' நிலைக்கு உயர்ந்துள்ளனர்

என்று மிக நுட்பமான விளக்கங்களை இந்நூலின் பக்கங்கள் தோறும் தந்துள்ளார் இந்நூலாசிரியர்.

அரச பரம்பரை தமிழ்ச் சூழலில் அன்று எவ்வாறு உருவாக்கப் பெற்றுள்ளது என்பதற்கான விளக்கத்தை (ப.33) இந்நூலாசிரியர் விளக்கியிருப்பதன்வழியே அறியமுடிகிறது.

> தன் மகனுக்குத் தன் காலத்திலேயே இளவரசுப் பட்டம் சூட்டி ஆட்சியில் பயிற்சி கொடுப்பது பேரரசர்களின் வழக்கம். அதுபோலவே அறந்தாங்கித் தொண்டைமானார் அரசர்கள் தம் மக்களுக்குச் சில ஊர்களோ நிலமோ அளித்து அங்கு வீடும் அளித்துப் பயிரிட்டு விளைச்சலில் ஒரு பகுதியைக் கோயிலுக்குக் கொடுக்குமாறு செய்தனர்.

இந்த நூல் நெடுகிலும் இவ்வாறான இவரது விளக்கங்கள் வழியே மக்களுக்குக் காணியாட்சி அளித்தல், மெய்க்கீர்த்தி, தொண்டை மண்டலத் தொடர்பு, திருமெய்யம்தொடர்பு, சிறந்த தலங்கள், சைவத் தொடர்பு, நீர்ப்பாசனம், ஆவணங்கள், வரிமுறை எனப் பல நிலைகளில் பல்வேறு உட்தலைப்புகள் வழியே தொண்டைமான் மரபைச் சேர்ந்த அறந்தாங்கி அரசு தொண்டைமான் மரபு அறந்தாங்கியிலிருந்து! அரசு செலுத்தியுள்ளது என்பது எவராலும் விரிவாக அறியப் பெறவில்லை எனும் குறையை இவர் ஈடுசெய்துள்ளார். இந்த நூல் வழியே நம் தமிழக வரலாற்றில் அறிந்து கொள்ளவேண்டிய பல அரிய செய்திகளைப் பதிவு செய்துள்ளார்.

புலவர் பேராசிரியர் இராசு அவர்கள் இந்நூல் வழியாகத் தமிழக வரலாற்றில் ஒரு புதிய இயலினைப் புரட்டிப் பார்க்கச் செய்துள்ளார். இத்தகைய நூலினை எமது நிறுவனம் வெளியிடுவதில் பெருமிதம் கொள்கிறது. இதற்குக் காரணமாக இந் நிறுவனத்தில் அறக்கட்டளையை நிறுவியோரைப் பாராட்டுகிறேன்.

இந்நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதோடு தம் தனிப்பட்ட அக்கறையையும் காட்டிவரும்

நிறுவனத் தலைவரும் தமிழக அரசின் முதல்வருமான மாண்புமிகு டாக்டர் கலைஞர் அவர்களுக்கு என் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொள்கிறேன்.

மாண்புமிகு தமிழக முதல்வர் போன்று, தமிழின் சிறப்புகளைத் தரணி முழுதும் எடுத்தோதி, இந்நிறுவனச் செயல்பாட்டுக்கு மேன்மை ஏற்படுத்திவரும் தமிழக நிதியமைச்சர் மாண்புமிகு பேராசிரியர் அவர்களுக்கு நன்றி.

நிறுவனச் செயல்பாட்டுக்கு உறுதுணையாக இருந்துவரும் தமிழ் வளர்ச்சி, அறநிலையம், செய்தி மற்றும் விளம்பரத்துறை அரசுச் செயலர் திரு க. முத்துச்சாமி இ.ஆ.ப. அவர்களுக்கும் நன்றி.

இந்த அறக்கட்டளைச் சொற்பொழிவின் பொறுப்பாளரும் இந்நிறுவனத்தின் பேராசிரியருமான முனைவர் கு. பகவதி அவர்களுக்கும், இந்நூலின் மெய்ப்புத் திருத்தம் செய்த முனைவர் ஆ. தசரதன், கணிப்பொறியாளர் திருமதி பி. கௌசல்யா ஆகியோருக்கும் இந்நூலை அழகுற அச்சிட்டுத் தந்த அப்னா டிரேடர்ஸ் அச்சகத்தாருக்கும் பாராட்டுகள்.

**இயக்குநர்**

## ஆசிரியரைப் பற்றி



ஈரோடு மாவட்டம், பெருந்துறை வட்டம், வெள்ளமுத்துக் கவுண்டன் வலசில் ந. சென்னியப்ப கவுண்டர்-நல்லம்மாள் தம்பதியினர்க்கு 2.1.1938இல் பிறந்தார்.

சென்னைப் பல்கலைக் கழகத்தில் வித்துவான், பி.லிட்., முதுகலைப் (தமிழ்) பட்டமும், மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத்தில் முனைவர் பட்டமும் பெற்றார். தலைப்பு : "கொங்கு நாடும் சமணமும்".

ஈரோட்டில் 1959-1980 வரை தமிழாசிரியராகப் பணியாற்றியபின் இரண்டாண்டு தமிழக அரசு தொல்லியல் துறையில் பணிபுரிந்தார். தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகக் கல்வெட்டு - தொல்லியல் துறையில் விரிவுரையாளர், இணைப் பேராசிரியர், பேராசிரியர், துறைத் தலைவர் நிலைகளில் 1982 முதல் 1998 வரை பணிபுரிந்தார். ஓய்வுக்குப்பின் தமிழ்ப் பல்கலைக்கழக ஆட்சிக் குழு உறுப்பினராகத் தமிழக அரசால் மூன்றாண்டுகள் நியமிக்கப்பட்டார்.

தமிழகத்தின், இந்தியாவின் சிறந்த கல்வெட்டாய்வாளர் எனத் தேர்ந்தெடுக்கப்பட்டு, செப்பேடு அளிக்கப் பெற்றார். கல்வெட்டறிஞர், கலைச்செல்வர், ஆராய்ச்சித் திலகம் போன்ற பல பட்டங்கள் பெற்றார். இவருக்கு 2006இல் "கொங்கு மாமணி" விருது வழங்கப்பட்டது.

'கொங்கு' 'தேனோலை' 'கொங்கு மலர்' ஆகிய இதழ்களை நடத்தியவர். சென்னை, யாழ்ப்பாணம், கோலாலம்பூர், மதுரை, தஞ்சாவூர் உலகத் தமிழ் மாநாடுகளில் பங்கேற்றவர். அனைத்துலக

இஸ்லாமிய இலக்கிய மாநாடுகளில் பங்கேற்றதுடன், 2007 மே மாதம் சென்னையில் நடைபெற்ற இஸ்லாமிய இலக்கிய மாநாட்டில் "தமிழக இஸ்லாமிய வரலாற்று ஆவணங்கள்" என்னும் நூலை வெளியிட்டு, தமிழறிஞர் விருது பெற்றார். பாரதியார் பல்கலைக்கழகம் இவருக்குத் 'தமிழ்ச் சான்றோர்' விருது வழங்கியுள்ளது.

"தஞ்சை மராட்டியர் செப்பேடுகள்", "செந்தமிழ் வேளிர் எம்.ஜி.ஆர்." என்ற இரு நூல்கள் தமிழ்வளர்ச்சித் துறையின் பரிசு பெற்றவை. இவரது தஞ்சை மராட்டியர் செப்பேடுகள் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் முதல் வெளியீடாகும். வரலாறு, செப்பேடு, கல்வெட்டு, சுவடியியல் தொடர்பாக நூறு புத்தகங்களுக்கு மேல் எழுதியுள்ளார். இவர் 200க்கும் மேற்பட்ட ஆய்வுக் கட்டுரைகளையும் எழுதியுள்ளார்.

ஓய்விற்குப்பின் ஈரோட்டில் "கொங்கு ஆய்வு மையம்" என்ற அமைப்பை நிறுவி, செப்பேடு, கல்வெட்டு, வரலாற்று நூல்கள் பலவற்றை உருவாக்கி அவற்றை வெளியிட்டு வருகிறார்.

# பொருளடக்கம்

# முன்னுரை

வரலாறு என்பது கடந்த கால நிகழ்ச்சிகளின் தொகுப்பு என்றாலும் அக்காலத்தைக் காட்டும் கண்ணாடியாகத் திகழுகிறது. அவ்வரலாறு எதிர்காலத்துக்கு வழிகாட்டக் கூடியது. முன்னோர் பெருமை பின்னோர்களைப் பீடும் பெருமையுடனும் வாழச் செய்கிறது; பெருமிதம் கொள்ளச் செய்கிறது.

பேரரசர்கள் வரலாறு தொகுத்தளிக்கப்பட்டிருப்பது போலக் குறுநில மன்னர்கள், பாளையக்காரர்கள் வரலாறுகள் முழுமையாகத் தொகுக்கப்படவில்லை. புதுக்கோட்டை என்று கூறினாலே அனைவர் நினைவுக்கும் வருவது புதுக்கோட்டைத் தொண்டைமான் அரசர் வரலாறுதான். புதுக்கோட்டை அரச மரபு 1686இல் தோற்றுவிக்கப்பட்டது. ஆனால் புதுக்கோட்டைத் தொண்டைமான் அரச மரபு உருவாவதற்கு முன் 350 ஆண்டுகட்கு முன்னர்த் தோன்றி 18ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி வரை அரசு செலுத்திய அதே தொண்டைமான் மரபைச் சேர்ந்த அறந்தாங்கி அரசு தொண்டைமான் மரபு அறந்தாங்கியிலிருந்து அரசு செலுத்தியுள்ளது என்பது எவராலும் விரிவாக அறியப் பெறவில்லை. புதுக்கோட்டை வரலாற்றில் ஒரு சில பக்கங்களில் அறந்தாங்கித் தொண்டைமான்கள் செய்தியைக் கூறி முடித்து விடுகின்றனர்.

அறந்தாங்கித் தொண்டைமான்கள் கல்வெட்டுக்களாக, மத்தியத் தொல்லியல் துறைக் கல்வெட்டுப் பிரிவினரால் 1903, 1914, 1916, 1924, 1925, 1926, 1930, 1936, 1942ஆம் ஆண்டுகளில் 43 கல்வெட்டுக்கள் படி எடுக்கப்பட்டுள்ளன. ஆனால் தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதியில் ஒரே ஒரு கல்வெட்டு மட்டும் அச்சாகியுள்ளது. புதுக்கோட்டைக் கல்வெட்டுத் தொகுதியில் இவைகள் அன்றி அறந்தாங்கி அரசு தொண்டைமான் கல்வெட்டுக்கள் 15 காணப்பட்டாலும் அதை எவரும் பிரித்துப் பார்ப்பதில்லை.

ஒன்பது கல்வெட்டு ஆண்டறிக்கைகளில் ஒரே அறிக்கையில் மட்டும் அறந்தாங்கி அரச மரபைக் குறிக்கின்றனர். மற்ற இடங்களில் அறந்தாங்கி அரச மரபு எனத் தனியாகக் குறிக்கப்படுவதில்லை; அல்லது புதுக்கோட்டைத் தொண்டைமான் மரபோடு சேர்த்துவிடுகின்றனர். அறந்தாங்கி அரசு தொண்டைமான்களின் செப்பேடுகள் 24 இதுவரை கண்டறியப்பட்டுள்ளன. அண்மைக் காலத்தில் தான் அவை தொகுக்கப்பட்டு முழுவிளக்கத்துடன் வெளிவந்துள்ளன.

புதுக்கோட்டை வரலாறு எழுதியவர்கள் அனைவரும் அறந்தாங்கித் தொண்டைமான்கள் பற்றி விரிவாக ஆய்வு செய்து எழுதாததற்கு அறந்தாங்கியும் அதைச் சேர்ந்த தொண்டைமான்கள் ஆட்சிப் பகுதிகள் பலவும் 1974 வரை தஞ்சை மாவட்டத்துடன் இணைந்திருந்ததும் ஒரு காரணமாக இருக்கலாம்.

இடைக்காலப் பாண்டியர், சோழர் ஆட்சிக் காலத்தில் புதுக்கோட்டைப் பகுதியில் அரசு அலுவலர்களாகப் பொறுப்பு வகித்த தொண்டைமான் மரபினர் அறந்தாங்கி அரசு என்ற பெயரில் உருவான விவரம் இந்நூலில் கூறப்பட்டுள்ளது. அறந்தாங்கி அரசு ஆட்சிப் பகுதியை அடிப்படுத்தி ஆட்சி புரிந்த பேரரசர்கள் அல்லது ஆதிக்கம் புரிந்த சிற்றரசர்களோடு நட்புரிமை கொண்டமையால் இவர்கள் காலத்தில் போர் எதுவும் நடைபெறவில்லை.

அண்டை நாடுகளுடன் மிக நல்லுறவுடன் வாழ்ந்தனர் என்பது திருவாவடுதுறை மடம், திருப்பனந்தாள் காசிமடம், திருவாரூர்க் கோயில், சேதுநாட்டுப் பெருவயல் கோயில் ஆகியவற்றிற்கு இவர்கள் அளித்த பல கொடைகளால் நன்கு தெரிகிறது. இவர்கள் ஆவணங்கள் எதிலும் ஆட்சியாண்டு கூறப்பெறவில்லை. அரசியர் பற்றிய குறிப்பு எதுவும் இல்லை. தம் மக்களுக்குக் காணியாட்சி உரிமையுடன் ஊர்களும், நிலங்களும் அளித்திருப்பது இம்மரபின் தனித்தன்மையாகும்.

'புதுக்கோட்டை மாவட்ட வரலாறு' எழுதிய ஜெ. ராஜாமுகம்மது அவர்கள் அறந்தாங்கித் தொண்டைமான் மரபினர்க்கும், புதுக்கோட்டைத் தொண்டைமான் மரபினர்க்கும் தொடர்பில்லை என்றும், தொண்டைமான் மரபினர் தெலுங்கைத் தாய்மொழியாக உடையவர்கள் என்றும் எழுதியுள்ளார்.

இவ்விரண்டு கருத்துக்களுக்கும் மாறுபட்ட கருத்துக்கள் இந்நூலில் அளிக்கப்பட்டுள்ளன.

சிலர் மட்டும் தந்தை-மகன் ; அண்ணன்-தம்பி உறவோடு குறிக்கப்பட்டுள்ளனர். முழு வம்சாவளி காட்டப் போதுமான சான்றுகள் இன்னும் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும். ஏறக்குறைய 450 ஆண்டுக்காலம் ஆட்சி புரிந்த 25 அரசர்களின் செய்திகள் இங்கே கிடைத்த சான்றுகளைக் கொண்டு தொகுத்துக் கூறப்பட்டுள்ளன. ஏகப்பெருமாள் தொண்டைமான், பொன்னம்பலத் தொண்டைமான் இருவர் பற்றிய ஆவணங்கள் மிகுதியாகக் கிடைப்பதால் அவர்கள் வரலாற்றுச் செய்திகள் மிகுதியாகத் தொகுக்கப்பட்டுள்ளன.

இவர்கள் ஆட்சிப் பகுதியில் போதிய கள ஆய்வு மேற்கொண்டு விரிவானதோர் அறந்தாங்கி அரசு தொண்டைமான்கள் வரலாறு எழுத இந்நூல் ஒரு வாயிலாக அமையும் என்பதில் ஐயமில்லை.

புதுக்கோட்டைத் தொண்டைமான் மரபு, அவர்களின் கிளை மரபான குளத்தூர்த் தொண்டைமான் மரபு பற்றிய செய்திகள் சுருக்கமாகக் கொடுக்கப்பட்டுள்ளன. பின்னிணைப்பாக அறந்தாங்கி அரசு தொண்டைமான்களின் 17 கல்வெட்டுக்களும், 10 செப்பேடுகளும் கொடுக்கப்பட்டுள்ளன.

இந்த அறக்கட்டளைப் பொழிவை நிகழ்த்த எனக்கு வாய்ப்பளித்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் அவர்கட்கும், அறக்கட்டளைப் பொறுப்பாளர்கட்கும் என் மனமார்ந்த நன்றி உரியதாகுக. தம் தந்தை டிவி. இராமசுப்பையர் பெயரில் இந்த அறக்கட்டளையை நிறுவிய தினமலர் ஆசிரியர் டாக்டர் இரா.கிருஷ்ணமூர்த்தி அவர்கட்கு என் நன்றி உரியதாகுக. அறந்தாங்கி அரசு ஆட்சிப்பகுதி வரைபடம் வரைந்துதவிய முனைவர் எ. சுப்பராயலு அவர்கட்கும், தேவையான குறிப்புக்களை அவ்வப்போது தந்துதவிய முனைவர் ஜெ.ராஜாமுகம்மது ஆகியவர்களுக்கும் நன்றி உரியதாகுக.

# தொண்டைமான்கள் - ஓர் ஆய்வு

"தொண்டைமான்" என்ற சொல்லே அரசர், அதிகாரம் செய்பவர், தலைவர் என்று பொருள் கொள்ளும்வண்ணம் வழங்கி வருகிறது. "தோட்டி முதல் தொண்டைமான் வரை" என்ற பழமொழி வழங்கி வருவதைக் காணலாம்.

சங்க காலம் தொடங்கிப் பல்வேறு காலங்களிலும் தமிழகத்தின் பல்வேறு இடங்களிலும் "தொண்டைமான்" என்ற பெயர் நின்று நிலவிச் சிறப்புற்று விளங்கி வருகிறது. தமிழகத்தில் "ஆர்" விகுதி கொடுத்துச் சிறப்பித்துக் கூறும் மரபு தொண்டைமான் மரபேயாகும். பெரும்பாலும் அவர்கள் எல்லா இடங்களிலும் "தொண்டைமானார்" என்றே அழைக்கப்பட்டுள்ளனர். இது அம்மரபுக்குத் தமிழ்மக்கள் கொடுத்த மரியாதையும், சிறப்பும், பெருமையும் ஆகும்.

இலக்கியங்களிலும், இலக்கண உரை மேற்கோள் பாடல்களிலும், கல்வெட்டுகளிலும், செப்பேடுகளிலும் சிறப்புடன் குறிக்கப்பெறும் இம்மரபினர் தமிழகத்தில் பல்வேறு காலங்களில் பல்வேறு அரசர்களிடம் மதிப்புமிக்க உயர் பதவிகளில் அமர்ந்துள்ளனர். பலர் படைத்தலைவராகவும், அமைச்சர்களாகவும் இருந்துள்ளனர்.

## ஆற்றல்மிகு பழங்குடியினர்

தொண்டைமான்கள் எனப்படும் இம்மரபினர் மிகவும் தொன்மையானதொரு குடியினர். அவர்கள் தொன்றுதொட்டு வழிவழிவந்த அரசர் குடும்பத்தினர் அல்லர். ஆனால் அவர்கள் வலிமையாலும், பெருமையாலும் அரசு நிலைக்கு உயர்ந்தவர்கள்.

திருப்பதிப் பகுதியில் "தொண்டைமான் கோட்டை" என்ற இடம் அவர்கள் பூர்வீகம் என்று கருதப்படுகிறது. அங்கு வாழ்ந்த கள்ளர் மரபினர் வேளாண்மையில் ஈடுபட்டதோடு யானைகளைப் பிடிப்பதிலும், அவற்றைப்பழக்குவதிலும், அவைகளுக்கு ஏற்ற பயிற்சி அளிப்பதிலும் சிறந்து விளங்கினர். இராய

தொண்டைமான்மீது பாடப்பெற்ற தொண்டைமான் "அனுராகமாலை" என்னும் நூல் "இந்நிலமன் சீரங்கராயருக்கு ராயத்தொண்டை-மன்னன் பிடித்தனுப்பும் மால்யானை" என்று கூறுவதால் பிற்காலம் வரை அவர்களுக்கு யானைத் தொடர்பு இருந்தது புலப்படுகிறது. இவர்கள் திறமையை மூவேந்தரும், பல்லவர்களும், தமிழகத்தை ஆட்சிபுரிந்த பிறமன்னர்களும் நன்கு பயன்படுத்திக் கொண்டனர். பேரரசர்கள் பலரிடம் பணிபுரிந்த இத்தொண்டைமான்கள் புதுக்கோட்டைப் பகுதியில் அறந்தாங்கி, அன்பில், சூரைக்குடி போன்ற இடங்களிலும் குடியேறி வாழ்ந்தனர். பிற்காலச் சோழர் காலத்தில் அவர்கள் அங்குக் குடியேறியிருக்க வேண்டும்.

## சங்க இலக்கியமும் தொண்டைமான் மரபும்

சங்க காலத்தில் தொண்டைமான் மரபினர் வேங்கடமலைப் பகுதியை ஆட்சிபுரிந்தனர் என்பது

> **வினைநவில் யானை விறல்போர்த் தொண்டையர்**
> **இனமழை தவழும் ஏற்றரு நெடுங்கோட்டு**
> **ஓங்குவெள் அருவி வேங்கடம்**

என்ற அகநானூற்றுப் பாடலால் (213) விளங்குகிறது.

புறநானூற்றுப் பாடல் ஒன்றில் (95) தொண்டைமானின் ஆயுதக் கொட்டில் குறித்து அவ்வையார் அதியமானிடம் பாடிய நிகழ்ச்சி இடம்பெறுகிறது. நற்றிணையில் தொண்டைமான் இளந்திரையன் பாடிய பாடல்கள் மூன்று (94,99,106) இடம் பெற்றுள்ளன. புறநானூற்றில் ஒரு பாடல் (185) தொண்டைமான் பாடியதாக உள்ளது. பெரும்பாணாற்றுப்படைப் பாட்டுடைத் தலைவனாகத் தொண்டைமான் இளந்திரையன் விளங்குகிறான். "கொண்டியுண்டித் தொண்டையோர் மருக" (பெரும். 454) எனக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் தொண்டைமானை அழைக்கின்றார். "தொண்டையைச் சூடினோனது குடியில் உள்ளவன்" என்று உரையாசிரியர் நச்சினார்க்கினியர் அதற்கு விளக்கம் தருகிறார்.

"திரைதரு மரபின் உரவோன்" (பெரும்.31) என்னும் தொடருக்கு, உரை எழுதும் நச்சினார்க்கினியர் தொண்டைமான் மரபின் தோற்றச் செய்தியை விளங்குகிறார்.

> நாகபட்டினத்துச் சோழன் பிலத்துவாரத்தால் நாகலோகத்தே சென்று நாக கன்னியைப் புணர்ந்த காலத்து அவள் யான் பெற்ற புதல்வனை என்செய்வேன் என்ற பொழுது தொண்டையை அடையாளமாகக் கட்டிக் கடலிலே விட அவன் வந்து கரையேறின் அவற்கு யான் அரசுரிமையை எய்துவித்து நாடாட்சி கொடுப்பல் என்று அவன்கூற அவளும் புதல்வனை அங்ஙனம் வரவிடத் திரை தருதலின் திரையன் என்று பெயர் பெற்ற

வரலாறு நச்சினார்க்கினியர் உரையில் காணப்பெறுகிறது. இந்நாக கன்னிகை மணிமேகலையில் (24:57) கூறப்பெறும் பீலிவளை என்பார் உ.வே.சாமிநாதையர்.

மதுரைக்காஞ்சி உரைப்பகுதியில் (190) சோழமண்டலம் போலத் தொண்டைமண்டலம் ஒரு நாடு என்பதை நச்சினார்க்கினியர் சுட்டுகிறார்.

## இலக்கண நூல்களும் தொண்டைமான்களும்

'வில்லும் வேலும்' என்னும் தொல்காப்பியச் சூத்திர உரையில் (மரபியல் 83) "மன்னர் மரபின் பின்னோர் எனப்படுவார் அரசு பெறு மரபில் குறுநில மன்னர் எனக் கொள்க; அவை பெரும்பாணாற்றுள்ளும் பிறவற்றுள்ளும் காணப்படும்" என்று பேராசிரியர் எழுதியிருத்தலால் இம்மரபினரைக் குறுநில மன்னராகப் பண்டையோர் கொண்டிருந்தனர் என்பது தெரிகிறது. அகத்திணை இயல் (54) மேற்கோள் பாடல் ஒன்றில் "தொண்டைப் பல்லவன்" என்பான் ஒருவன் குறிக்கப்பெறுகின்றான்.

இறையனார் அகப்பொருள் உரையும், நன்னூல் மயிலைநாதர் உரையும் "இளந்திரையம்" என்ற ஒரு நூல் தொண்டைமான் இளந்திரையனால் செய்யப்பெற்றதை உணர்த்துகின்றன. நன்னூல் மயிலைநாதர் உரை (ப.245) திரையனூர் என்ற ஊருக்குத் திரையனால் செய்யப்பட்ட ஊர் அல்லது திரையனது ஊர் என்று பொருள் கூறுகிறது.

தொல்காப்பியச் செய்யுளியலிலும் (91), யாப்பருங்கல விருத்தியிலும் (51), நேமிநாதத்திலும் (74) மேற்கோள் பாடல் ஒன்று எடுத்துக்காட்டப் பெற்றுள்ளது.

பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ
பாவீற் றிருந்த புலவீர்காள் பாடுகோ
ஞாயிற் றொளியான் மதிநிழற்றே தொண்டையார்
கோவீற் றிருந்த குடை

என்பது அப்பாடலாகும். மற்றொரு இலக்கண உரை மேற்கோள் பாடல்

வஞ்சி எளிய குருகெல்லாம் ; பஞ்சவன்
நான்மாடக் கூடலில் கல்வலிது ;
சோழன் உறந்தைக் கரும்பினிது ; தொண்டைமான்
கச்சியுட் காக்கை கரிது

எனத் தொண்டைமானையும் தலைநகரையும் புகழ்கிறது.

வீரசோழியம் யாப்புப் படலத்தில் (11) "வெல்படைத் தொண்டைமான் விறற்சேனாபதி" என்பவர் பாராட்டப் பெறுகின்றார்.

அமிதசாகர முனிவரைக் கொண்டு யாப்பருங்கலக்காரிகை பாடுவித்த மரபினன் மிழலைநாட்டுவேள் காரிகைக் குளத்தூர்க் கண்டன் மாதவனைத் "தொண்டைக் காவலன்" என்று தஞ்சை மாவட்ட நீடூர்க் கல்வெட்டு குறிக்கிறது (Epigraphiya Indica XVIII. pp.64-69 ; ARE 534 of 1921). இரும்பல்காஞ்சி என்னும் நூலில்

கருங்கலி முந்நீரின் மூழ்காத முன்னம்
இருங்கடி மண்மகளை ஏந்தினவே யாயிற்
பெரும்பெய ரேனத் தெயிறனைய வன்றே
கரும்பறை தொண்டையான் தோள்

என்ற பாடல் காணப்படுகிறது. புறத்திரட்டில் (1476) இப்பாடல் எடுத்தாளப்பெற்றுள்ளது.

## கலிங்கத்துப்பரணி

கலிங்கத்துப் பரணிப் பாட்டுடைத் தலைவன் முதல் குலோத்துங்க சோழன் (1070 - 1118) ; அவனுடைய படைத்தலைவன் கருணாகரத் தொண்டைமான். அவன் தொண்டை நாட்டினன். ஆனால் சோழநாட்டில் குடியேறி வண்டுவாஞ்சேரி -

வண்டாழஞ்சேரி என்ற ஊரை இருப்பிடமாகக் கொண்டு வாழ்ந்தவன்.

*கடற்கலிங்கம் எறிந்துசயத் தம்பம் நாட்டிக்*
*கடகரியும் வயமாவும் தனமும் கொண்டு*
*சுடர்படைவான் அபயன் அடி அருளி னோடும்*
*சூடினான் வண்டையர்கோன் தொண்டை மானே*

என்ற கலிங்கத்துப்பரணிப் பாடல் மூலம் இது விளங்கும்.

## விக்கிரம சோழன் உலா

விக்கிரம சோழன் கி.பி. 1118இல் முடி சூடினான். ஆனால் கி.பி. 1096இல் முதல் குலோத்துங்க சோழன் காலத்தில் நடைபெற்ற முதல் கலிங்கப்போரில் விக்கிரம சோழன் பங்கேற்றான். கருணாகரத் தொண்டைமான் பன்னெடுநாள் உயிருடன் வாழ்ந்து விக்கிரம சோழன் காலத்திலும் வாழ்ந்திருக்க வேண்டும். விக்கிரம சோழன் அதிகாரிகளைக் கூறும் ஒட்டக்கூத்தரின் விக்கிரமசோழன் உலா,

*தென்னவரும் மாளவரும் சிங்களரும் தேற்றுதகை*
*மன்னவரும் தோற்க மலைநாடு – முன்னம்*
*குலையப் பொருதொருநாள் கொண்ட பரணி*
*மலையத் தரும்தொண்டை மானும்*

என்று கூறுகிறது.

## சேயூர் முருகன் பிள்ளைத்தமிழ்

திருக்கழுக்குன்றத்தில் திருத்தேர் செய்தளித்த செம்பிய வளவன் கழுக்குன்றன் தொண்டைமான் என்னும் சிறப்புப் பெயர் பெற்றான் என்று பிள்ளைத்தமிழ் சிறுதேர்ப் பருவப் பாடல் (6) விளக்குகிறது.

*வைவத் துரந்தாடும் உரகக் குலேசன்மகன்*
*மகனாகும் ஒருதொண்டைமான்*
*வாரித் திரைநல்கு மன்னன் பெரும்பேர்*
*வரம்பெற்று வெற்றி கொண்டான்*

என்பது அப்பாடல் பகுதியாகும்.

### கப்பற்கோவை

இந்நூலின் பாட்டுடைத் தலைவன் கருமாணிக்கன், பாண்டியர் அமைச்சனும் தளபதியும் ஆவான். இக்கருமாணிக்கன் அந்நூலில் 'தொண்டையர்கோன்' என்று பாராட்டப் பெறுகின்றான் (11).

### சேக்கிழார் புராணம்

பெரியபுராணம் பாடிய சேக்கிழார் இரண்டாம் குலோத்துங்க சோழனின் அமைச்சராகவும் (1133-50) விளங்கினார். அவருக்குப்பின் அவர் தம்பி சோழனின் அமைச்சர் ஆனார். அவர் பெயர் பாலறாவாயர். அவருக்குக் குலோத்துங்க சோழன் அளித்த பட்டங்களில் "தொண்டைமான்" என்பதும் ஒன்றாகும்.

என்று சொல்லஅவர் தமைஅழைத் தரசர்
இவரமைச் சிவர் பட்டமும்
மன்றல் மாலைபுனை தொண்டை மான்என
வகுத்தபின் தமது மண்டலம்
அன்று வறபம்வர வந்த டைந்தவரை
ஆற்றல்செய்து தொண்டை மண்டலம்
நின்று காத்த பெருமான் எனத்தமது
பெயரை எங்கணும் நிறுத்தினார்

என்பது சேக்கிழார் புராணப் பாடலாகும் (99).

### கல்வெட்டுப் பாடல்கள்

முதற் குலோத்துங்க சோழனின் (1070-1120) படைத்தலைவராக விளங்கியவர் . அரும்பாக்கிழான் மணவிற்கூத்தனான காலிங்கராயன் என்பவர். அவருக்குத் தொண்டையர்கோ, தொண்டையர்கோன், தொண்டையர்வேந்து, தொண்டையர்மன் என்றெல்லாம் பல சிறப்புப் பெயர்கள் விளங்கின. அவர் தில்லையிலும், திருவதிகையிலும் பல்வேறு திருப்பணிகள் செய்ததாக அத்தலப்பாடல் கல்வெட்டுகள் பல புகழுகின்றன.

ஆடும் தெளிதேனை ஆயிர நாழிநெய்யால்
ஆடும் படிகண்டான் அன்றினர்க–ளோடும்
திறங்கண்ட தாளன் சினக்களிற்றான் ஞாலம்
அறங்கண்ட தொண்டையர்கோன் ஆங்கு

ஈசன் அதிகையில்வா கீசன் எழுந்தருள
மாசில் பெருங்கோயில் வந்தமைத்தான்–பூசல்
விளைவித்த வேணாடும் வெற்பனைத்தும் செந்தீ
வளைவித்தான் தொண்டையார் மன்

என்பன முறையே தில்லை, திருவதிகைக் கல்வெட்டுப் பாடல்களாகும்.

## கல்வெட்டில் தொண்டைமான்கள்

தமிழகம் முழுவதும் கல்வெட்டுகளில் தொண்டைமான்கள் என்ற பெயரைப் பரவலாகக் காண்கின்றோம். அவற்றுள் சில இயற்பெயராகக் காணப்படுகின்றன. சில பெயர்கள் அரசியல் அலுவலர்கட்கு அரசன் அளித்த பட்டப்பெயர் போலத் தெரிகின்றன. பெரும்பாலும் கையெழுத்திடும் உரிமையுடைய அலுவலர்களாக அவர்கள் இருந்துள்ளனர்.

*கரூர் - பசுபதீசுவரர் கோயில் - இரண்டாம் இராசேந்திரன் காலம்: 1051 - 1063.*

இவை திருமந்திரஓலை நாயகன் தொண்டைமான் எழுத்து
*(தெ.இ.க. 3-22)*

*திருநள்ளாறு - இராசாதிராசன் காலம் : 1166 - 1188.*

நித்த விநோத வளநாட்டு ஆவூர்க் கூற்றத்து விழியூருடையான் செந்நாடுடையான் உடைய நம்பியாரான தொண்டைமானார் *(தெ.இ.க. 7-1026)*

*வேளூர் (செங்கம்) - இராசகேசரி காலம் : 10 ஆம் நூற்றாண்டு.*

மீய் கொன்றை நாட்டு மேல் வேளூருடைய
பொங்கல்த் தொண்டைமான் *(தெ.இ.க. 13-268)*

*திருப்புலிவனம் (செங்கல்பட்டு) - இரண்டாம் குலோத்துங்கன் காலம் : 1133 - 1150.*

ஓய்மா நாட்டு ஆழ்ச்சிபாக்கத்துக் குடிபள்ளி
சிங்கநாத தொண்டைமான் சோழப் பெரியரையர்
(தெ.இ.க. 6 - 327)

திருவோத்தூர் (செய்யாறு) - இரண்டாம் இராசராசன் காலம் : 1146 - 1163.

விளத்தூர் கிழவன் செந்தாமரைக் கண்ணன்
தொண்டைமானார் (தெ.இ.க. 6 - 327)

பனையவரம் (விழுப்புரம்) - முதற் குலோத்துங்கன் காலம் : 1070 - 1120.

ஜயங்கொண்டசோழ மண்டலத்து மனையில்
கோட்டத்து மனையில் நாட்டு அரும்பாக்கிழான்
அரையன் பொன்னம்பலக் கூத்தனான
தொண்டைமானார் (தெ.இ.க. 8 - 752)

திருவாரூர் - முதற் குலோத்துங்கன் காலம் : 1070 - 1120.

நங்கொல்லரில் தொண்டைமான் கொல்லன்
(தெ.இ.க. 6 - 327)

காளஹஸ்தி - முதலாம் இராசராசன் காலம் : 985 - 1014.

தொண்டைமாநார் ஆன கவிர பிடாரன் (தெ.இ.க. 17 - 328)

பெரியகுளம் - சடையவர்மன் குலசேகர பாண்டியன் காலம் : 1190 - 1218.

பாண்டி மண்டலத்து சீவல்லவன் திருநீல
கண்டனான தொண்டைமான் (தெ.இ.க. 6-23-445)

வீரபாண்டியன் காலம் : 1254 - 1263.

அளநாட்டுப் புலிநல்லூர்த் தொண்டைமான்
(தெ.அ.க. 23-425)

கல்லிடைக்குறிச்சி - சடையவர்மன் வீரபாண்டியன் காலம் : 1254 - 1263.

அளநாட்டுப் புதுவூர்த் திருநீலகண்டன்
இராசாக்கள் நாயகரான தொண்டைமானார்
(தெ.இ.க. 23-117)

இப்பெயர்கள் போலச் சிறப்பு அடைமொழிகள் எதுவும் இல்லாமல் தொண்டைமான் என்று மட்டும் திருமுல்லைவாசல்

(தெ.இ.க. 17-730), திருப்பலாத்துறை (தெ.இ.க. 263), நங்கவரம் (தெ.இ.க. 8-643), ஒட்டக்குடி (நன்னிலம் கல்வெட்டு 378-1978) போன்ற பல்வேறு ஊர்க் கல்வெட்டுகளில் குறிக்கப்பெறுகின்றனர்.

இவை "தொண்டைமான்" என்ற பெயர் நாட்டில் பெற்றிருந்த பெருமையையும், சிறப்பையும், தலைமையையும் உணர்த்துகின்றன.

## பல்லவர் சிறப்புப் பெயர்

பல்லவ அரசர்கள் தொண்டைநாட்டுப் பகுதியை ஆட்சிபுரிந்த காரணத்தால் அவர்கள் "தொண்டைமான்" என்றும் பெயர் பெற்றனர். ஒரு சிலர் பல்லவம் என்பது தொண்டைக் கொடிக்கும் பெயர் என்றும், தொண்டைக் கொடியோடு தொண்டைமான்கள் தொடர்புபடுத்தப்பெறுவதால் பல்லவர்களையும் தொண்டைமான்களையும் ஒரே மரபினர் ஆக்குவர். இது ஆய்வுக்குரியது. தொண்டைக்காய் என்பது ஒரு காயின் பெயர்.

(அ) தளவானூரில் உள்ள முதலாம் மகேந்திரவர்ம பல்லவனின் தமிழ்க் கல்வெட்டு அவனைத் தொண்டையந்தார் வேந்தன் என்று புகழுகிறது (பல்லவர் செப்பேடுகள் - முன்னுரை - 2).

(ஆ) பிற்காலப் பல்லவ மன்னன் கோப்பெருஞ்சிங்கன். அவனை ஒரு கல்வெட்டுப்பாடல் தொண்டைமன்னவர் என்று புகழுகிறது (வ.ஆ. மாவட்டம், வாயலூர்க் கல்வெட்டு, எபிகிராபியா இண்டிகா 23, ப. 174).

(இ) பல்லவர்குலச் சிற்றரசன் பல்லவாண்டானான காடவராயன் என்பவன். வடஆர்க்காடு மாவட்டம் அத்திக்குளம் என்னும் ஊரில் உள்ள பாடல் கல்வெட்டொன்று அவனைத் தொண்டைமன்னன் என்று புகழுகிறது (தென்னிந்தியக் கல்வெட்டுக்கள், தொகுதி 12 - எண் 125).

மேற்கண்ட கல்வெட்டுக்கள் மூலம் பல்லவர்கட்கும் தொண்டைமான்களுக்கும் தொடர்பு இருப்பதை நாம் அறியலாம்.

## கொங்கு நாட்டில் தொண்டைமான்கள்

கொங்கு நாட்டில் கொங்கு வேளாளர் குலத் தலைவர்கள் சிலர் தொண்டைமான் என்ற சிறப்புப்பட்டம் பெற்றுள்ளனர்.

கொங்கு வேளாளர்கள் காஞ்சிபுரத்தோடு தங்களைத் தொடர்புபடுத்திக் கொள்ளுவர். காஞ்சி, நன்காஞ்சி என்று ஆறுகட்கும், காஞ்சிக்கோயில் என்று ஊருக்கும், காஞ்சிக்கூவல் நாடு, காஞ்சித்துண்டம் என்று நாட்டுப் பகுதிகட்கும் பெயர்கள் கொங்கு நாட்டில் வழங்கப்பெறுகின்றன.

(அ) திரிபுவன வீரபாண்டியன் என்ற கொங்குப் பாண்டியன் கல்வெட்டு பாரியூர் அமரபணீசுவரர் கோயிலில் உள்ளது. மூன்றாம் குலோத்துங்க சோழனின் விருதுப் பெயர்கள் சிலவற்றை இவன் சூடியுள்ளான். இவன் காலத்தில் வடகொங்கு நாட்டின் உட்பிரிவுகளான 20 நாடுகளில் அரசன் 'ஒட்டச்சு' என்ற வரியைத் தளர்த்தினான் என்று அக்கல்வெட்டில் காணப்படுகிறது. அக்கல்வெட்டில் தொண்டைமானாருக்குக் கொடுக்கவேண்டிய 100 அச்சும் கட்டின பிறகு வேறு ஒன்றும் கொடுக்க வேண்டியது இல்லை என்று கூறப்பட்டுள்ளது. 13ஆம் நூற்றாண்டின் இறுதியில் கொங்கு நாட்டாரிடம் வரி வசூல் செய்யும் உரிமையுடைய "தொண்டைமானார்" என்ற சிறப்புப் பட்டம் பெற்ற ஒருவர் நிருவாகத்தில் இருந்துள்ளமை பெறப்படுகிறது.

(ஆ) சேலம் மாவட்டத்தில் பருத்திப்பள்ளி அருகேயுள்ள சௌதாபுரம் என்ற ஊரில் வாழும் கொங்கு வேளாளர்களில் விழியகுலத் தலைவர்கட்குத் தொண்டைமான் என்ற சிறப்புப் பட்டம் உண்டு. கீழ்க்கரைப் பூந்துறை நாட்டின் இணைநாடு பருத்திப்பள்ளி நாடு. காஞ்சிபுரம் தொண்டைமான் மன்னர் தங்கள் முன்னோர்கட்கு இந்தப் பட்டப்பெயரை அளித்ததாகக் கூறிக்கொள்ளுகிறார்கள். இன்றும் அவர்கள் தொண்டைமான் என்னும் பெயரைச் சூட்டிக்கொள்கின்றனர்.

கார்மேகக் கவிஞர் பாடிய கொங்கு மண்டல சதகத்தில் (71) இம்மரபினர் பற்றிய பாடல் ஒன்று உள்ளது.

பண்டைய நாளில்ஒன் னார்பஞ்சு போலப் பறந்தகலத்
திண்டிறல் காட்டிய காளையை நோக்கிஅச் செம்பியனும்
தொண்டைமான் என்னும் தனதுநற் பேரும்
துரைத்தனமும்
வண்டரை மீதினில் பெற்றவ னுங்கொங்கு மண்டலமே

(இ) ஈரோடு மாவட்டம் தாராபுரம் வட்டம் மூலனூரில் கொங்கு வேளாளர்களில் பூச குலத்தினர் வாழ்ந்து வருகின்றனர். அக்குலத் தலைவர் தொண்டைமான் என்று அழைக்கப்பெறுகிறார். சேர சோழ பாண்டியர் மூவரையும் களப்பிர அரசர் சிறைவைத்தபோது மூவேந்தரையும் சிறையிலிருந்து விடுவித்துப் பெருமை கொண்டதால் காஞ்சிபுரம் தொண்டைமான் மன்னன் இவர்கள் முன்னோர் ஒருவருக்குத் தொண்டைமான் என்னும் பட்டம் கொடுத்தார் என்று கூறிக் கொள்கின்றனர்.

ஒருமுறை சங்ககிரி சென்று நவாபு அரசரின் பேட்டி கிடைக்காமையால் அரசரின் ஆட்டுக்கிடாய்க் காதை அறுத்துப் பேட்டி கண்டார். அதனால் இம்மரபினர் 'வளர் கிடாயைக் காதறுத்த தொண்டைமான் பகதூர்' என்ற பட்டப் பெயரைப் பெற்றனர். இவர்கள் மரபினர் அனைவருக்கும் தொண்டைமான் என்றே பெயர்வழங்குகிறது. இன்றும் அப்பெயரைச் சூட்டிக் கொள்ளுகின்றனர். இவர்களைப் பற்றிப் பல தனிப்பாடல்கள் கிடைத்துள்ளன. வாலசுந்தரக் கவிராயரின் கொங்குமண்டல சதகத்தில் (72) இம்மரபைப் பற்றிய பாடல் ஒன்றுள்ளது.

கரையது மேல்கரை நாற்பத்தெண் ணாயிரம்
கண்டகொங்கில்
முறையது கூறிய ஆதொண்டை மான்வந்து மூவர்தமைச்
சிறையது வாங்கிய பூசநல் தொண்டைமான் செம்மலென
மரபது காத்து நிலைகொள்ளு வோன்கொங்கு
மண்டலமே

கம்பநாத சுவாமியின் கொங்குமண்டல சதகத்திலும் இம்மரபைப் பற்றிய பாடல் ஒன்று உள்ளது. அப்பாடலிலும் (16) தொண்டை மண்டலத்துத் தொண்டைமான் பட்டம் அளித்த செய்தி குறிக்கப்படுகிறது.

ஆதொண்டை மாலை தனைச்சூடிச் சொன்ன
அகளங்கனும்
மோதண்ட மாகச் சமர்விடு ஆனையை முடிக்கிவிட்டே
நீதொண்ட மான்என்று பூசதன் கோத்திரம்
நிலைமைகண்டு
வாதொண்ட மான்தொண்ட மானாக வாழ்கொங்கு
மண்டலமே

இத்தொண்டைமானின் முன்னோன் ஒருவன் களப்பிரரால் சிறை வைக்கப் பெற்றிருந்த மூவேந்தர்களை விடுதலை செய்தான் என்றும் அதனால் கொங்கு 24 நாட்டுக்கும் தலைவனாக்கித் தன் பெயரான தொண்டைமான் என்னும் பட்டமும் அளித்தான் என்றும் அப்பாடல்கள் மூலம் தெரியவருகின்றன.

> பார்மீதில் வருகின்ற பரிதாபி வருஷத்தில்
> பங்குனிமூன் றாந்தியதியில்
> பாண்டியன் சேரனுடன் சோழரை அச்சுதக்
> களப்பாளன் சிறையில்வைத்து
> ஆராய்ந்து வருகின்ற போர்மன்னர் அவர்வெல்வாய்
> ஆதொண்டை மான் அழைத்து
> அன்புபெறு மூவெட்டு நாடுனக் கெய்தவே
> ஆதொண்ட மண்டலத்தில்
> தீராத இருபதுநாலுகோட்ட முமளித்துத்
> தென்திசைக்கு ஏகுநாளில்
> திறமான பூசகுல நல்லவன் எந்நாளும்
> செம்பொனால் செய்த முடியால்
> தோராத வெற்றிபுனை ஆதொண்ட மான்வந்து
> தொண்டைமான் நீயென்றுதான்
> சூழுலகில் இருபத்து நாலுநாடும் கண்டினிது
> தொண்டமாப்பட்டம் சூட்டினாரே

கண்ண குலத்தார் பட்டயம் தொண்டைமான் மூலனூர்ப் பகுதியில் ஆட்சி செய்ததை,

> மூலனூர்த் தொண்டையான் சாவடி கட்டிக்கொண்டு
> சாவடி வாசலில் இருந்தார்கள்

என்று குறிப்பிடும். ஓதாளர் குறவஞ்சியும்,

> சொற்புகழ் மூலனூர் பூசகுலன் வாதுரு
> தொண்டைமான் கொடுத்தது துணிந்துபார் சிங்கா

என்று தொண்டைமான் கொடையைப் பாராட்டும்.

(ஈ) ஈரோடு மாவட்டம் தாராபுரம் வட்டம் வள்ளிஎறிச்சில் என்னும் ஊரில் கொங்கு வேளாளர்களில் பில்லகுலத்தைச் சேர்ந்த தலைவர்கள் தொண்டைமான் கவுண்டர் என அழைக்கப் பெறுகின்றனர்.

கொங்கு நாட்டில் நடைபெற்ற வேட்டுவர் வேளாளர் போராட்டத்தில் வேட்டுவப் படைத் தலைவன் கொங்குராயன் தலையை வெட்டி, வேட்டுவர் ஆதிக்கத்தை ஒழித்து மதுரை மன்னனிடம் பரிசில் பெற்றிருக்க வேண்டியவர்கள் நாங்கள் என்று பழைய வரலாற்று நிகழ்ச்சிக்கு உரிமை கொண்டாடி மெக்கன்சி துரையிடம் விண்ணப்பம் செய்து கொண்டவர்கள். இம்மரபினர் இன்னும் இப்பெயரை வைத்துக் கொள்கின்றனர்.

(உ) நாமக்கல் மாவட்டம் இராசிபுரம் கைலாசநாதர் கோயிலின் வெளியே ஒரு குத்துக்கல்லில் உள்ள ஒரு கல்வெட்டில்,

**ஸ்வஸ்திஸ்ரீ விக்கிரம பாண்டியத்**
**தொண்டைமான் ஓலை**

என்ற தொடர் காணப்படுகிறது.

இவ்வாறு தொண்டைமான் என்னும் பெயர் பல காலங்களில் பல இடங்களில் பலவாறு சிறப்பிக்கப்பட்டதை இலக்கியம், உரை, கல்வெட்டுக்கள் வாயிலாக அறிகின்றோம்.

# அறந்தாங்கித் தொண்டைமான்கள்

## புதுக்கோட்டைப் பகுதியில் தொண்டைமான்கள்

பாண்டியர், சோழர் ஆட்சிக்காலத்தில் புதுக்கோட்டைப் பகுதியில் தொண்டைமான் மரபினர் பலர் அரசு அலுவலர்களாக இருந்துள்ளனர். அரசன் ஆணையில் கையெழுத்திடுபவர்களாகவும், ஆணையை நிறைவேற்றுபவர்களாகவும், கல்வெட்டு, செப்பேடுகளில் சாட்சிக் கையெழுத்திடுபவர்களாகவும் அவர்கள் காணப்படுகின்றனர். சிலர் 'அரையர்' எனச் சிறப்புப் பெற்றும், பாடிகாவல் உரிமையுள்ளவர்களாகவும், படைத்தலைவர்களாகவும், அமைச்சர் நிலையிலும் இருந்துள்ளனர். அப்பெயர்கள் குளத்தூர், திருமெய்யம், ஆலங்குடி வட்டங்களில் மட்டும் காணப்படுகின்றன. இவர்கள் தொண்டைமான் மரபினராக இருக்கலாம். ஆனால், அறந்தாங்கி அரசின் தொண்டைமானாரின் வேறானவர்கள்; சிலர் அவர்களின் முன்னோராகவும் இருக்கலாம்.

(1) குளத்தூர் வட்டம், திருவெப்பூர், கோனேரின்மை கொண்டான் கல்வெட்டு (பு.க. எண். 153)

இவை தொண்டைமான் எழுத்து

(2) குளத்தூர் வட்டம், நார்த்தாமலை, பரகேசரி ராசேந்திர தேவன், 5ஆம் ஆட்சியாண்டு (பு.க. 112)

தொண்டைமானார்

(3) குளத்தூர் வட்டம் அம்புகோயில், வல்லதேவர்

19ஆம் ஆட்சியாண்டு (பு.க. 456)

ஆனை தொண்டைமானார்

(4) குளத்தூர் வட்டம், குடுமியாமலை, சடையவர்மன் சுந்தரபாண்டியன், 13ஆம் ஆட்சியாண்டு (பு.க. 486)

இவை தொண்டைமானார் எழுத்து

(5) திருமெய்யம் வட்டம், திருக்குளம்பூர், கோனேரின்மை கொண்டான் (பு.க. 452)

**இவை தொண்டைமான் எழுத்து**

(6) திருமெய்யம் வட்டம், தேக்காட்டூர், வல்லபதேவர் 33ஆம் ஆட்சியாண்டு (பு.க. 638)

**கல்வாசல் நாட்டு சிராத்தக்குடிப் படைத்தலைவன் பிள்ளான் பாண்டியனான தொண்டைமானார்**

(7) ஆலங்குடிவட்டம், திருவரங்குளம், மாறவர்மன் குலசேகர பாண்டியன் (பு.க. 547)

**புவனேக வீரத் தொண்டைமானார்**

(8) ஆலங்குடி வட்டம் கோயிலூர், மாறவர்மன் வீரபாண்டிய தேவர் (பு.க. 595)

**பூவரசர்குழி அரையர்கள் சூரியன் தொண்டைமானார்**

(9) திருமெய்யம் வட்டம், நெய்வாசல் அகத்தீசுவரமுடையார் கோயில் கல்வெட்டில் "தேனாற்றுப்போக்கு அதளையூர் நாட்டுச் சூரைக்குடி அரையன் பெரியானான தொண்டைமானார்" என்பவர் குறிக்கப் பெறுகிறார். பிற்காலத்தில் சூரைக்குடி அதிகாரப் பொறுப்பை விசயாலயதேவர் மரபினர் ஏற்றனர்.

## கோனாடும் கானாடும்

செந்தமிழ்நாடு பன்னிரு நாடுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. அவற்றில் ஒன்று 'பன்றி நாடு' என்பது. பன்றி நாட்டுப் பகுதியே புதுக்கோட்டைப் பகுதியாகும். வேடுவர்களும், குறும்பர்களும் வாழ்ந்த புதுக்கோட்டைப் பகுதிக்கு உக்கிரப் பெருவழுதி சோழநாட்டிலிருந்து 48000 வேளாளர்களை அழைத்துவந்து குடியேற்றியதாகப் பழைய ஆவணங்கள் கூறுகின்றன.

வேளாளர்கள் இப்பகுதியைக் கோனாடு, கானாடு என இரு பகுதிகளாகப் பிரித்தனர். கோனாடு (கோன்+நாடு) அரசு ஆட்சிப் பகுதி. கானாடு (கான்+நாடு) காட்டுப் பகுதியாகும். நாட்டை 8 பகுதிகளாக்கி எட்டில் ஐந்து பகுதிகளைக் கோனாடு என்றும்

எட்டில் மூன்று பகுதிகளைக் கானாடு என்றும் அழைத்தனர். வெள்ளாற்றை மையமாக வைத்துக் கோனாட்டை வடகோனாடு, தென்கோனாடு என்றும் அழைத்தனர்.

கோனாட்டில் உறையூர்க் கூற்றம், ஒல்லையூர்க் கூற்றம், உறத்தூர்க் கூற்றம் என்ற மூன்று கூற்றங்களும் கானாட்டில் அதளையூர்க் கூற்றமும், மிழலைக் கூற்றமும் அடங்கியிருந்தன. கானாட்டைப் பொதுவாகக் கானக் கூற்றம் என்றும் அழைப்பதுண்டு. வேளாளர்கள் தங்களைக் காராள வேளாளர் என்றும், நிலத்தரசு என்றும் கூறிக் கொண்டனர். மறவர்களும், கள்ளர்களும் பிற்காலத்தில் குடியேறினர்.

*மிழலைக் கூற்றம்*

முற்காலத்தில் மிழலைக் கூற்றம் பாண்டிய நாட்டில் ஒரு பகுதியாக இருந்தது. இதனை

> **கோச்சடையவன்மரான திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீவல்லபதேவற்கு யாண்டு இருபத்தஞ்சாவது மேஷ ஞாயற்றுப் பூர்வபட்சத்து ஏகாதசியும் சனிக்கிழமையும் பெற்ற மகத்துநாள் பாண்டி மண்டலத்து மிழலைக் கூற்றத்து ஒக்கூர்**

என்ற கல்வெட்டால் அறியலாம்.

புறநானூறு 24ஆம் பாடலின் மூலம் மிழலைக் கூற்றம் பற்றியும் அது கடற்கரையைச் சார்ந்திருந்தது என்றும் தெரிகிறது.

'வீரசோழியம்' இலக்கண நூலாசிரியர் புத்தமித்திரன் மிழலைக் கூற்றத்துப் 'பொன்பற்றி' என்ற ஊரைச் சார்ந்தவர்.

> **ஈண்டுநூல் கண்டான் எழில்மிழலைக் கூற்றத்துப்**
> **பூண்டபுகழ்ப் பொன்பத்தி காவலன்**

என்பது வீரசோழிய உரையில் காணும் பழம்பாடலாகும்.

சிவனடியார்கள் அறுபத்து மூவரில் ஒருவராகிய நெல்வேலி வென்ற நின்றசீர் நெடுமாறனின் அமைச்சர் குலச்சிறையார் "மிழலைக் கூற்றத்துக் கீழ்க்கூற்று மணமேல்குடி" என்ற ஊரைச் சேர்ந்தவர்.

மணிவாசகப் பெருமானை இறைவன் ஆட்கொண்டு அருளிய தலமாகிய திருப்பெருந்துறை மிழலைக் கூற்றத்தில் உள்ளதோர் ஊர். "மிழலைக் கூற்றத்து நடுவில் கூற்றம் பிரம்மதேசம் தனியூர் திருப்பெருந்துறையான பவித்திர மாணிக்கச் சதுர்வேதமங்கலம்" என்பது கல்வெட்டுத் தொடராகும்.

மிழலைக்கூற்றம் கீழ்க்கூறு, நடுவில் கூறு, மேல்கூறு என்ற முப்பெரும் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது எனக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன. வெள்ளாற்றுக்குத் தெற்கேயும் பாம்பாற்றுக்கு வடக்கிலும் அமைந்த பகுதியே மிழலைக் கூற்றமாகும். இன்றைய ஆவுடையார் கோயில் வட்டம், அறந்தாங்கி வட்டம், ஆலங்குடி வட்டத் தென்பகுதி, திருமயம் வட்டக் கிழக்குப் பகுதிகள் அடங்கிய பகுதியே மிழலைக் கூற்றமாகும். இரண்டு ஆறுகட்கு இடைப்பட்டதால் 'இடையாற்றூர் நாடு' என ஒரு கல்வெட்டு குறிக்கிறது.

அறந்தாங்கித் தொண்டைமானார்கள் மிழலை நாட்டுக்கு உரியவர்கள். "மிழலைநாட்டதிபன்" என்று மெய்க்கீர்த்தி கூறுகிறது. தொண்டைமானார்கள் "நம்முடைய சீமையான மிழலைக் கூற்றம்" என்று கூறிக்கொள்கின்றனர். அக்கூற்றத்து மக்களும் "எங்கள் நாட்டுக்கு உடையவர் தொண்டைமானார்" என்று கூறிக்கொள்கின்றனர். தொண்டைமானார் மரபினரின் முதல் குடியேற்றம் "பாலையூர் நாட்டுப் பாலையூர்" என்று கருதப்படுகிறது. பாலையூர் நாட்டில் முதன் முதலில் வரிநிர்ணயம் செய்ததாகக் கல்வெட்டு கூறுகிறது. பாலையூர் நாட்டையும் "நம்முடைய சீமை" என்றே குறிக்கின்றனர்.

## புதுக்கோட்டை

புதுக்கோட்டை 1686 முதல் 3.3.1948 வரை தனி அதிகாரம் உடைய மாநிலமாகத் தொண்டைமான் அரசர்களால் ஆளப்பட்டு வந்தது. 3.3.1948இல் புதுக்கோட்டைத் தொண்டைமான் மரபின் கடைசி அரசர் இராசகோபாலத் தொண்டைமான் அவர்கள் மாநிலத்தை இந்திய அரசுடன் இணைத்தார்.

தமிழகத்தின் 15ஆவது மாவட்டமாக 14.1.1974இல் புதுக்கோட்டை உருவானது. அதுவரை புதுக்கோட்டை திருச்சி மாவட்டத்தின் ஒரு வருவாய்க் கோட்டமாக இருந்தது.

புதுமாவட்டம் அமையும் போது தஞ்சை மாவட்டத்தின் பகுதியாகிய அறந்தாங்கி, கந்தர்வகோட்டை, கீரமங்கலம் ஆகிய பகுதிகளும் புதுக்கோட்டை மாவட்டத்துடன் இணைக்கப்பட்டன.

புதுக்கோட்டை மாவட்டப் பகுதி பன்முக மாட்சிகளை உடையது. புதுக்கோட்டை மாவட்டத்தைச் சேர்ந்தவரும், புதுக்கோட்டை அருங்காட்சியகக் காப்பாளராகப் பணியாற்றியவரும், இந்தியத் தொல்லியல்துறை முன்னாள் துணை இயக்குநரும், புதுக்கோட்டை பற்றிப் பல ஆய்வுகள் செய்தவருமாகிய அமரர் கே.ஆர். சீனிவாசன் அவர்கள் முனைவர் ஜெ. ராஜாமுகமது அவர்களின் "புதுக்கோட்டை மாவட்ட வரலாறு" என்னும் நூலுக்கு எழுதியுள்ள முன்னுரைப் பகுதியை அப்படியே இங்குத் தருவது பொருத்தமாக இருக்கும்.

> *தமிழ்நாட்டின் பிற மாவட்டங்களைவிடப் பழைய புதுக்கோட்டை சமஸ்தானத்தை உள்ளடக்கியுள்ள புதுக்கோட்டை மாவட்டம் தமிழக வரலாற்றின் அரும்பொருட் காட்சிக் கூடமாக விளங்குகிறது. இம்மாவட்டத்திற்குப் பல தனிச் சிறப்புகளும் உண்டு. தமிழகத்தின் பெருங்கற்கால நாகரிகம் குறித்துப் படித்தறியச் சிறந்த இடம். ஆயிரத்திற்கு மேற்பட்ட கல்வெட்டுக்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ள இடம். மிக அதிகமான எண்ணிக்கையில் ரோம் பொன் நாணயங்கள் கிடைத்துள்ள இடம். மிக அதிகமான தொல்லியல் பழமைச் சின்னங்கள் காணப்படும் இடம்.*
>
> *கோயில் கட்டடக்கலை வளர்ச்சி வரலாற்றைப் படிக்கச் சிறந்த இடம். சரித்திரக் காலத் தொடக்கத்தில் வழக்கிலிருந்த தமிழ்பிராமிக் கல்வெட்டும், தொடர்ந்து நடைமுறைக்கு வந்த பழந்தமிழ்க் கல்வெட்டுக்களும் நிறைந்து தமிழ் எழுத்து வளர்ச்சி வரலாற்றைக் காட்டும் இடம். இப்படியாக இந்தப் பட்டியல் நீண்டு கொண்டே போகிறது.*

கி.பி. 7–8ஆம் நூற்றாண்டில் தொடங்கி ஆங்கிலேயரது ஆட்சிக்காலம் இறுதியாக, இடைப்பட்ட காலத்தில் தமிழகத்தை ஆண்ட பல்லவர், பாண்டியர், சோழர், விஜயநகர மன்னர்கள், நாயக்க மன்னர்கள் ஆகிய அனைத்து வம்சாவளிகளின் ஆட்சியையும் கண்டது இப்பகுதி. அரசியல் போட்டிகள் மற்றும் போர்க்களங்களினூடேயும் இப்பகுதியை ஆண்ட மன்னர்கள் தங்களது கலையார்வத்தையும், ஆட்சிச் சிறப்புக்களையும் இங்குக் காணப்படும் கலைச் சின்னங்களிலும், கல்வெட்டுக்களிலும் பதித்து வைத்துள்ளனர்.

தமிழ்நாட்டின் ஏனைய பகுதிகளிலும் இதுபோன்று காணப்பட்டாலும், ஒரே இடத்தில் காலக்கிரம வளர்ச்சியாக இவை காணப்படுவது இங்குதான். கி.பி. 13ஆம் நூற்றாண்டில் சிறிதுகாலம் கண்ணனூரைத் (சமயபுரம்) தலைநகராகக் கொண்டு ஆண்டுவந்த ஹொய்சளர் காலத்துக் கல்வெட்டுக்களும், மதுரைப் பாண்டியர் வீழ்ச்சிக்குப்பின் ஒரு அரை நூற்றாண்டே மதுரையிலிருந்து ஆட்சி செலுத்திய சுல்தான்கள் காலத்துக் கல்வெட்டுக்களும் இங்குக் காணப்படுகின்றன. இவ்வகையில் தமிழ்நாட்டில் ஆட்சி செலுத்திய எல்லா வம்சத்தினரின் தொடர்பையும் இப்பகுதி பெற்றிருந்தது சொல்லாமல் விளங்கும்.

இக்காலங்களை அடுத்து அண்மைக் காலம் வரை சுமார் 300 ஆண்டுகள் தனியரசாக (சமஸ்தானம்) விளங்கியதும் புதுக்கோட்டை ஒன்றே. சுருங்கக் கூறின் புதுக்கோட்டையின் வரலாறு தமிழக வரலாற்றின் ஒரு சுருக்கமான தொகுதி என்று கூறலாம்

என்பது அவர் உரையாகும்.

### ஆட்சிமுறை தனிச்சிறப்பு

பல நூறாண்டுகள் போர்களைச் சந்தித்த சோழர், பாண்டியர் நாடுகளின் இடையே புதுக்கோட்டைப்பகுதி இருந்ததால் இதன் ஆட்சி முறை தமிழகத்தின் வேறு பகுதிகளைக் காட்டிலும் வேறுபட்ட தனித்தன்மையுடன் விளங்கியது. நாடாழ்வார், பாடிகாவல், அரையர், சார்அரசு, அரசு என்ற முறையில் இப்பகுதியின் நிர்வாகம் நடைபெற்றது வேறு எங்கும் அதிகமாகக் காணமுடியாததாகும்.

### நாடாழ்வார்

சோழர்கள் காலத்தில் பல நாடாழ்வார்கள் நியமிக்கப்பட்டனர். எதிரிலிசோழ நாடாழ்வான், செயங்கொண்ட நாடாழ்வான், இரைங்குடி நாடாழ்வான், கற்குடி நாடாழ்வான், செம்பிய நாடாழ்வான், கங்கைய நாடாழ்வான், ஆனையூர் நாடாழ்வான், பெருங்களூர் நாடாழ்வான், ஈழங்கொண்ட நாடாழ்வான், அதளையூர் நாடாழ்வான், விசையபால நாடாழ்வான், தொண்டைமா நாடாழ்வான் என்ற பல நாடாழ்வார் பெயர்களை இப்பகுதியில் காணுகின்றோம்.

இவர்களில் சிலர் கையெழுத்திடும் நிலையில் மட்டும் இருந்தனர். சிலர் தம் வீரத்தால் படையில் இடம் பெற்றனர். அவர்களில் சிலர் கண்ணன் சம்பந்தப் பெருமானான சேனை பரிபால நாடாழ்வான், பஞ்சவன் மாதேவி சேனைபரிபால நாடாழ்வான், மலையன் சோழனான சேனை பரிபால நாடாழ்வான் என்று பெயர் பெற்றனர்.

இவர்களில் பலர் அரசனின் நம்பிக்கைக்குப் பாத்திரமாகி அரையர், அரசு நிலைக்கு உயர்ந்துள்ளனர். பெருங்களூர் நாடாழ்வார் மரபினர், பல்லவராயர் மரபினர் என அழைக்கப்பட்டுப் புதுக்கோட்டைத் தொண்டைமான் மரபு ஆட்சிப் பொறுப்பேற்கும் வரை நிர்வாகம் செய்தனர். புதுக்கோட்டைப் பகுதியே 'பல்லவராயன் சீமை' என அழைக்கப்பட்டது. இம்மரபில் இரண்டொருவர் தனியாகத் தங்கள் பெயரில் கல்வெட்டுக்களையும் பொறித்துக் கொண்டனர். தங்கள் கல்வெட்டுக்களில் ''ராஜ்யம்பண்ணி அருளுகையில்' என்று அவர்கள் பொறித்துக் கொண்டனர்.

அதளையூர் நாடாழ்வார் மரபினர் விசயநகர அரசர் காலத்தில் தங்கள் நிலையை உயர்த்திக் கொண்டு சூரைக்குடித் தலைவர் விசையாலயதேவர் மரபு என்று அழைக்கப்பட்டு, பெரும் ஆட்சித் தலைவர்களாக விளங்கினர்.

### அரையர்

சிலர் 'அரையர்' எனப் பட்டப் பெயர்பெற்று அதிகாரிகளாக விளங்கினர். பெரும்பாலும் ஊருக்கு ஓர் அரையர் என இருந்தனர். கோரைக்குறிச்சி அரையர், அழும்பில் அஞ்சுகுடி அரையர், புலிவலத்து மூன்று கூற்று அரையர், செங்காட்டு நாட்டு இரண்டு கூற்று அரையர், கிளிப்பற்று நாட்டு வல்லநாட்டு அரையர், இருஞ்சிறையுடையான் அரையர், புத்தாம்பூர் அரையர், வத்தாண்டார் கோட்டை அரையர், வடமலை நாட்டுப் பூச்சிகுடி அரையர், எட்டுக்குடி அரையர், மேலைக்கோட்டை அரையர் எனப் பல பெயர்கள் காணப்படுகின்றன. ஒருவர் மட்டுமல்ல; பலர் சேர்ந்து அரையர்களாக இருந்துள்ளனர். சில நாடாழ்வாரும் அரையர்களாக இருந்துள்ளனர். கீரனூர் அரையர்களில் மங்காமைக் காத்தானான விக்கிரம சோழ நாடாழ்வான் என்பது ஒரு கல்வெட்டுத் தொடர்.

### பாடிகாவல்

இயற்கைச் சீற்றங்களால் பாதிக்கப்பட்ட, ஊர் அழிந்த, பகைவரிடமிருந்து பாதுகாப்பைப் பெற, சில ஊரவர்கள் 'பாடிகாவல்' செய்ய ஒரு ஊரையோ, தனிப்பட்டவர்களையோ நாட்டார் அனுமதியுடன் நிறுவினர். சில ஊரவர்கள் தங்கள் ஊருக்குப் "பாடிகாவல் உரிமை கொள்வார் உளரோ" என்று அறிவித்துச் சிலரை நியமித்துள்ளனர். ஊர்மக்கள் 'பாடிகாவல்' ஏற்றுக் கொண்டவர்கட்கு அளிப்பது "பாடிகாவல் சுதந்திரம்" எனப்படும்.

ஆதனூர் என்ற ஊரவர்கள் இராசிங்க மங்கலத்து ஊரவர்க்குப் பாடிகாவல் உரிமை அளித்த விபரம் கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது.

> பொன்னமராவதி நாட்டு இராசிங்க மங்கலத்து ஊராக இசைந்த ஊரவர்க்கு கானநாடான விருதராச பயங்கர வள நாட்டு ஆதனூர் ஊராக

இசைந்த ஊரவரோம் பாடிகாவல் பிரமாணம் பண்ணிக் குடுத்த பரிசாவது. துலுக்கர் கலகமாய் எங்கும் கட்டாளும் பிடியாமல் பரிகரித்து செவ்வலூரார் அடித்துக் கொண்டு போன கன்று காலியும் விடுவித்துத் தந்து நாங்கள் இங்கு இருக்கும் அளவு சோறும் பாக்கும் ஆராய்ந்து எங்களைப் பரிகரித்துக் கொண்டு போந்த படியாலே மேலும் எங்களை இப்படி பரிகரித்துக் கொண்டு போகவேணுமென்கிற இத்தை பற்றி பாடிகாவல் பிரமாணம் பண்ணிக் குடுத்தோம். இராசிங்கமங்கல ஊரார்க்கு ஆதனூர் ஊராக இசைந்த ஊரவரோம். இப்படி பாடிகாவல் பிரமாணம் பண்ணிக் குடுத்த இதுக்கு ஆண்டொன்றுக்குப் பதினைங்கல நெல்லுக் குடுப்போமாகவும். குடுக்கும் இடத்து இந்நெல்லு பதினைங்கலமும் பத்தில் ஆறும், பத்தில் நாலுமாகக் குடுப்போமாகவும். இப்படிப் பெறுமளவில் பொன்னமராவதி நாட்டில் போந்த களவும் ஆராய்ந்து குடுத்து வலியுடன் பாய்ந்துகொண்டு போன சோமமும் ஆராய்ந்து தருவார்களாகவும். எங்களைப் பரிகரித்துக் கொள்வார்களாகவும். இப்படி சம்மதித்து பாடிகாவல் பிரமாணம் பண்ணிக் குடுத்தோம் இராசிங்கமங்கலத்து ஊரவர்க்கு ஆதனூர் ஊராக இசைந்த ஊரவரோம்

என்பது பாடிகாவல் அளித்தது பற்றிய ஒரு கல்வெட்டு.

மேலே கண்ட அரையர்களும் சிலர் பாடிகாவல் உரிமை பெற்றுள்ளனர். "கிளிப்பயிற்றூர் நாட்டுப் பாலைக்குடி, களங்குடி, கிளிநல்லூர் இந்த ஊரவர்களும் இம் மூன்று ஊர்க்கும் பாடிகாவல் உடையோம் ஆன வல்லநாட்டு அரையர்களும்" என்பது ஒரு கல்வெட்டுப் பகுதியாகும்.

### அரசு

பாடிகாவல் உரிமை உடையவர்களாக நாடாழ்வார், அரையர், சார் அரையர் ஆகப் பெயர் பெற்ற சிலர் ஆளும் தகுதியாய் 'அரசு' நிலைக்கு உயர்ந்துள்ளனர்.

பேராம்பூர் அரசு, சேந்தமங்கல அரசு, விராச்சிலை அரசு, பெருங்கோளியூர்அரசு, சூரைக்குடி அரசு எனப் பல அரசுகள் புதுக்கோட்டைப் பகுதியில் ஏற்படுத்தப்பட்டன. இப்படித் தலைவர்கள் அரசு ஆக நியமனம் பெறுவது அரசு கட்டுதல், நாட்டரசு கட்டுதல் எனக் குறிக்கப்பெறும். அரையர்களாக இருந்தவர்கள் சிலருக்கு அரசுப் பட்டம் கிடைத்துள்ளது.

> கோனாடான கடல் அடையாது இலங்கை கொண்ட சோழவளநாட்டு இரண்டு கரை நாட்டு நாட்டவரோம் இந்நாட்டுக் கூடலூர் நாட்டு குளமங்கலத்து அரையர்கட்கு நாட்டரசு கட்டி இவர்க்குப் பேரூர் பதின்கலம் சிற்றூர் ஐங்கலநெல்லும் பெற்று, சிலந்திவனப் பெருமாள் சீபாத சுதந்திரம், திருநலக் குன்றமுடைய நாயனார் கோயிலிலே முன் ஒடுக்கும் பெறக் கடவார்களாகவும்

என்பது ஒரு கல்வெட்டுப் பகுதியாகும்.

'அரசு' நியமனம் பற்றி ஒரு கல்வெட்டு விளக்கமாகக் கூறுகிறது. அதில் 'அரசு' ஆற்றவேண்டிய கடமைகள் பல கூறப்படுகின்றன.

> பேராம்பூர் அரசு தனி ஆனையூரான நரசிங்க தேவர்க்கு அரசு சுவந்திரம் பிரமாணம் பண்ணிக்குடுத்த பரிசாவது. எங்கள் நாட்டில் சுற்றில் எற்ற உள்ளிட்டம் வாராமல் காத்துநோக்கக் கடவாராகவும். காத்து நோக்கும் இடத்து நாங்கள் இவர்க்கு அரசு சுவந்திரம் பண்ணிக் குடுத்தோம். இந்நாட்டில் நாட்டு எல்லைக்குட்பட்ட ஊர்களுக்கு ஊர்தோறும் பதினாறு அடிக்கோலால் இரு நூற்று ஐம்பத்தாறு குழி கொண்டது ஒரு மாவான நிலத்துக்கு மாத்தால் கலநெல்லும், உள்ளூர்க்கு 16 அடிக்கோலால் 256 குழிகொண்டது ஒரு மாவான நிலத்துக்கு ஒரு மா நிலம் இறையிலியும் ஆடிக் குறுவை விளைந்த நிலத்துக்கு மாத்தால் தூணிப்பதக்கு நெல்லும் வரகு, கேழ்வரகு, தினை

விளைந்த நிலத்துக்கு மாத்தால் தூணிப்பதக்கும் புஞ்சைக்கு ஏர் ஒன்றுக்கு தூணிப்பதக்கு தானியமும், புறக்குடிக்கு குடி ஒன்றுக்கு ஒரு பணமும் பெறக் கடவராகவும். தண்டு இறையிலியாக நாட்டுப் பொதுவான பெருவாய் நான்கு எல்லைக்குட்பட்ட நஞ்செய், புஞ்செய் நத்தம் மேல் நோக்கிய மரம் கீழ் நோக்கிய கிணறு உயர்வன உயர்த்தியும் குழிவன குழித்தும் கொள்ளக் கடவாராகவும். இம்மரியாதி அரசு சுதந்திரம் பெற்று எங்களையும் காத்து நோக்கக் கடவாராகவும். இப்படி சம்மதித்து அரசு சுதந்திரப் பிரமாணம் பண்ணிக்குடுத்தோம் பேராம்பூர் அரசு தனியானையூரரான நரசிங்க தேவர்க்கு வடகோனாட்டு நாட்டுக்குச் சமைந்த நாட்டவரோம்.

## அறந்தாங்கி அரசு

தொண்டைமான் மரபினர் 11 ஆம் நூற்றாண்டு தொடங்கிப் புதுக்கோட்டைப் பகுதியில் அரசில் பல்வேறு நிலைகளில் அதிகாரிகளாக விளங்கினர். கையெழுத்து இடும் அலுவலராக, நாடாழ்வாராக, அரையராக, சார் அரையராக விளங்கி முன்பு கூறியவாறு போலப் பாலையூர்ப் பகுதிக்கு அரசு ஆக நியமனம் பெற்று அறந்தாங்கியைத் தலைநகராகக் கொண்டு அறந்தாங்கி அரசாக வளர்ந்து 1328 முதல் 1759 வரை புதுக்கோட்டைப் பகுதியில் தனியரசராக ஆவுடையார் கோயில், அறந்தாங்கி, ஆலங்குடி தென்பகுதி, திரு மயம் கீழ்ப்பகுதி வட்டங்களில் ஆட்சி செலுத்தும் அரசர்களாக விளங்கிவந்துள்ளனர்.

அறந்தாங்கியில் கோட்டை ஒன்று அவர்களால் கட்டப்பட்டது. கோட்டைப் பகுதியில் உள்ள சிவன்கோயிலுக்கு விசுவநாதர் கோயில் என்று பெயர். அங்குள்ள ஒரு கல்வெட்டை இந்தியத் தொல்லியல் துறையின் கல்வெட்டுப் பிரிவினர் 1903ஆம் ஆண்டு படி எடுத்துத் தென்னிந்தியக் கல்வெட்டு எட்டாம் தொகுதியில் 434ஆம் கல்வெட்டாக அச்சிட்டுள்ளனர். இந்தியத் தொல்லியல் துறைக் கல்வெட்டுப் பிரிவினர் விசுவநாதர் கோயில் அறந்தாங்கிக் கோட்டையில் இருப்பதாகவே குறித்துள்ளனர்.

# பாண்டியர் ஆட்சியில் தொண்டைமானார்கள்

அறந்தாங்கி அரசு தொண்டைமானார்கள் அரச மரபு எதனையும் சேர்ந்தவர்கள் அல்லர். தங்கள் வீரப்பண்பாலும், நிர்வாகத் திறனாலும், அறிவாற்றலாலும் சிற்றரசர் நிலைக்கு உயர்ந்தவர்கள். பேரரசர்கள் எழுச்சி பெற்று அவர்கள் நாட்டு எல்லைப் பரப்பை விரிவாக்கும் போது அவர்களை எதிர்த்து நிற்காமல், அவர்கள் கருத்துக்கு இசைந்து அவர்களுக்கு உற்றுழி உதவி, தங்கள் அதிகாரத்தையும் நிலை நிறுத்திக் கொண்டவர்கள் அறந்தாங்கித் தொண்டைமானார் மரபினர்.

தமிழக அரச மரபினர் பலருக்கு அவர்கள் நட்பாக, அவர்கள் மேலாதிக்கத்தை ஏற்றுக்கொண்டு தொடர்ந்து தம் ஆட்சியைத் தக்கவைத்துக் கொண்ட விபரம் முன்பே விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது. அந்த வகையில் பாண்டியர் தொடர்பான தொண்டைமானார்கள் சிலர் உள்ளனர்.

### உய்யவந்தான் திருநோக்கழகியான் தொண்டைமானார்

உய்யவந்தான் திருநோக்கழகியான் தொண்டைமானார் மஞ்சக்குடியைச் சேர்ந்தவர். மஞ்சக்குடிக்கு உரிமை கொண்டாடுபவர். அதனால் அவர் 'மஞ்சக்குடியுடையான்' எனப்பட்டார். மஞ்சக்குடி மிழலைக் கூற்றத்துக் கீழ்க்கூறில் உள்ள ஊர். மிழலைக் கூற்றத்தின் கீழ்க்கூறு, நடுவில் கூறு, மேல் கூறு அனைத்தும் அறந்தாங்கித் தொண்டைமானாருக்கு உரிய பகுதியாகும். 'நம் பூமி' 'நமது மிழலைக் கூற்றம்' என்று பல இடங்களில் அவர்கள் கூறியுள்ளனர்.

எனவே மிழலைக் கூற்றம் கீழ்க்கூறில் வாழ்ந்தவர் என்பதாலும், தொண்டைமானார் என்று கூறப்படுவதாலும் காலப் பழமை நோக்கி இவரை அறந்தாங்கித் தொண்டைமானாரில் முற்பட்டவர் அல்லது முதல்வர் என்று கொள்வதில் தவறில்லை.

இவர் சுவாதி நட்சத்திரத்தில் பிறந்தவர். திருப்பெருந்துறைக் கோயிலில் திரு அந்திக்காப்பு, திருவிளக்கு, அமுதுபடி, கறியமுது

முதலியவைகளை நாள்தோறும் அளிக்கவும், மாதந்தோறும் இவர் பிறந்த சுவாதி நட்சத்திரத்தன்று திருவாதவூரராகிய மாணிக்கவாசகரை எழுந்தருளச் செய்யவும், அவருக்கு முன்னர் மாணிக்கவாசகர் இயற்றிய திருவாசகம் ஓதிச் செல்லவும் ஏயூர் மங்கலம் என்ற ஊரைத் தொண்டைமானார் கொடையாக அளித்தார். அவ்வூர் வடவெள்ளாறான சுந்தரபாண்டிய வளநாட்டில் உள்ளதென்றும் தொண்டைமானார் உரிமையாகக் கொண்டு அனுபவித்து வருகிற ஊர் என்றும் வழங்கிய செப்பேட்டில் குறிக்கப்பட்டுள்ளது.

இதனால் இத்தொண்டைமானார் ஓரளவு ஆட்சியுரிமையுடையவர் என்றும், அவருக்கென்று தனிப்பகுதிகள் இருந்தன என்றும், ஊரைக் கோயிலுக்குக் கொடையாகக் கொடுக்கும் அளவிற்கு உரிமையுடையவராக இருந்தனர் என்றும் அறிகிறோம். அம்பலக்காரர் என்ற அலுவலர் பெயரும் உள்ளது.

'என் பிறந்தநாள், நான் அனுபவித்து வருகிற' என்ற தொடர்களால் தொண்டைமானார் நேரடியாக அவரே கூறுவது போல் செப்பேடு எழுதப்பட்டுள்ளது.

தொடக்கத்தில் 'ஸ்வஸ்திஶ்ரீ கோமாறபன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஶ்ரீ குலசேகர தேவற்கு யாண்டு பதினான்காவது" என்று கூறப்பட்டிருப்பதால் தொண்டைமானார் குலசேகரபாண்டியனின் மேலாதிக்கத்தை ஏற்றுக் கொண்டுள்ளார் என்பது தெளிவாகத் தெரிகிறது.

பெரும்பான்மையான கல்வெட்டு ஆணைகள் 'கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொள்ளவும்' என்று கூறப்பட்டிருந்தாலும் ஏதோ ஓர் ஆவணம்தான் நமக்குக் கிடைக்கும். ஆனால் திருவாவடுதுறை ஆதினத்தில் உள்ள இந்தச் செப்பேட்டு நகலுக்குத் திருப்பெருந்துறைக் கோயிலில் கல்வெட்டுப் பொறித்திருப்பது வியப்பான செய்தியாகும். செப்பேடு பதினான்கு வரிகளில் இருக்கக் கல்வெட்டு ஆறுவரிகளில் நீளமாக வெட்டப்பட்டுள்ளது.

இச்செப்பேட்டிலும், கல்வெட்டிலும் குறிக்கப்பட்ட மாறவர்மன் குலசேகரபாண்டியன் 1314-1362க்கு இடைப்பட்ட காலத்தில் வாழ்ந்தவன். இக்கொடை 1319ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 15ஆம் நாள் அளிக்கப்பட்டதாகும்.

அறந்தாங்கித் தொண்டைமானாரின் முதல் ஆவணமாக இதனைக் கருதலாம் (தொ.செ. 1, பக்.133-135).

## சூரிய தேவர் தொண்டைமானார்

சூரியதேவர் தொண்டைமானாரின் இரண்டு கல்வெட்டுக்களும், ஒரு செப்பேடும் கிடைத்துள்ளன. இவர் இரண்டாம் மாறவர்மன் வீரபாண்டியன் காலத்தவர். வரலாற்று ஆசிரியர்கள் இரண்டாம் மாறவர்மன் வீரபாண்டியன் 47 ஆண்டுகள் (1341-1388) ஆட்சிபுரிந்தான் என்று கூறியுள்ளனர். ஆனால் சூரியதேவர் தொண்டைமானாரின் செப்பேடு மூலம் வீரபாண்டியன் 58 ஆண்டுகள் அரசுக் கட்டிலில் வீற்றிருந்தான் என்று தெரிகிறது.

மாறவர்மன் வீரபாண்டியனின் 58ஆம் ஆட்சியாண்டில் வடவெள்ளாறான சுந்தரபாண்டிய வளநாட்டு இளங் கோனாட்டு அறந்தாங்கி அரசு சூரிய தேவர் தொண்டைமானார் தம் தர்மமாகச் சதய நாள் முதல் திருவாதிரை நாள் வரைக்கும் பத்துநாட்கள் திருப்பெருந்துறையில் நடைபெறும் திருநாள் செலவுகளுக்காக அறந்தாங்கி அரசுப் பற்றில் உள்ள பிள்ளைவயல் என்னும் ஊரைக் கொடையாக அளித்து ஒரு செப்பேடும் வெட்டித் தந்துள்ளார். பிள்ளை வயலின் நாற்பாங்கு எல்லைகள் கூறப்பட்டுள்ளன. செப்பேட்டின் காலம் 1399 ஆகும் (தொ.செ.2, பக்.135-138).

திருவரங்குளம் அரதீர்த்தேசுவரர் கோயிலுக்கு மாறவர்மன் வீரபாண்டியன் காலத்தில் 1383ஆம் ஆண்டு நிலக்கொடையைச் சூரியதேவர் தொண்டைமானார் அளித்துள்ளார்.

குறும்பூர் சித்தநாதீசுவரர் கோயிலுக்குச் சூரியதேவர் தொண்டைமானார் ஆமெஞ்சூர் வயலை அளித்த கொடை அப்பொழுது கல்லில் பொறிக்கப்படாமல் பிற்காலத்தில் ஆவுடை நயினார் தொண்டைமானார் காலத்தில் கல்லில் பொறிக்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டு மூலம் சூரியதேவர் தொண்டைமானாருக்குக் சூரியதேவர் குலசேகரத் தொண்டைமானார் என்றும் பெயர் வழங்கப்பெற்றதை அறிகிறோம் (க.ஆ. 221/1942).

## சுந்தர பாண்டியத் தொண்டைமானார்

எட்டியத்தளி அகத்தீசுரமுடையார் கோயிலுக்குக் குலசேகர பாண்டியனின் 12ஆம் ஆட்சியாண்டில் அறந்தாங்கி அரசு சுந்தரபாண்டியத் தொண்டைமானார் என்பவர் சாலிய நகரத்தாரும் கைக்கோளரும் அரைப்பணம் கொடுக்க வேண்டும் என்று வரி நிர்ணயம் செய்து கல்வெட்டு வெட்டியுள்ளார் (க.ஆ. 132/1916).

# பெருமாள் தொண்டைமான்கள்

அறந்தாங்கித் தொண்டைமான்கள் மரபில் சில அரசர்கள் பெயர், பெருமாள் என்ற அடைமொழியைப் பெற்றுள்ளது. பொதுவாக அரசர்களைப் பெருமாள் என்று குறிப்பிடுவது மரபு. அரசரின் உயர் அலுவலர்களைப் 'பெருமாள் முதலிகள்' என்று கூறுவது வழக்கம். முதலாம் இராசராசனைப் பெரிய பெருமாள் என்று தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுக்கள் கூறும்.

1. அழகிய மணவாளப் பெருமாள் தொண்டைமானார்
2. திருநெல்வேலிப் பெருமாள். தொண்டைமானார்
3. இன்பவனப் பெருமாள் தொண்டைமானார்
4. ஏகப் பெருமாள் தொண்டைமானார்
5. அழகிய பெருமாள் தொண்டைமானார்

என ஐந்துபேர் பெருமாள் பெயர் பெற்றவர்கள்.

## அழகிய மணவாளப் பெருமாள் தொண்டைமானார்

இவருடைய கல்வெட்டுக்கள் 1441 முதல் 1455 வரையிலான கால எல்லையில் எட்டியத்தளி, ஆளப்பிறந்தான், குறும்பூர் ஆகிய இடங்களில் காணப்படுகின்றன. இதுவரை பன்னிரண்டு கல்வெட்டுக்கள் கண்டறியப்பட்டுள்ளன.

## கோயில் கொடைகள்

குறும்பூர் என இன்று வழங்கும் ஊர் கல்வெட்டில் குறும்பில் என்று குறிக்கப்பட்டுள்ளது. அவ்வூரிலுள்ள சித்தநாதீசுவரர் பெயர் சித்தங்கலக்கி நயினார் என்றும் குறிக்கப்பட்டுள்ளது. சித்தங்கலக்கி நயினார்க்கு அழகிய மணவாளப் பெருமாள் தொண்டைமானார் 11.4.1443 அன்று

புதுவயல் என்ற நன்செய் நிலத்தைக் கொடையாக அளித்தார். கொடை கொடுக்கப்பட்ட புதுவயலுக்குப் புதுக்குளத்து மடையிலும், குறும்பில் குளத்து நாட்டான் வயக்கல் மடையிலும் நீர்பாய்ச்சிக் கொள்ளலாம் என்று அனுமதி அளிக்கப்பட்டது. கோயில் அமுதுபடிக்கு விளைச்சலில் ஐந்தில் ஒரு பகுதி கொடுக்க வேண்டும் என்றும் கூறப்பட்டது (க.ஆ. 222/1942).

அழகிய மணவாளப் பெருமாள் 19.3.1445 அன்று நாட்டின் மங்கலம் கோயில் கன்மி அனந்ததேவனுக்கு ஒரு ஆணை பிறப்பித்தார். தொண்டைமானார் முன்பு குருந்தரயர் கோட்டை கீழைப் பெருமாண்டி வயலில் வயித்தியன் குடிக்காடு என்று பெயருள்ள பகுதியை அனந்த தேவனுக்கு விற்றிருந்தார். பொதுக்குளத்திலும் வாய்க்காலிலும் நீர் பாயும் இதர நிலங்களும் அனந்ததேவனுக்கு இருந்தன (க.ஆ. 120/1916).

அனந்த தேவன் எட்டியத்தளி அகத்தீசுவரர் கோயிலுக்குக் கடமை, வினியோகம், வெட்டிமுட்டை, வேசாரி போன்றவைகளுக்காக விளைச்சலில் ஒரு மா நிலத்துக்கு இரண்டு தூணி தானியம் கொடுக்க வேண்டும் என்று ஆணையிட்டார்.

### வரிக்குறைப்பு

முன்பு வெள்ளச்சாவி, வறச்சாவி, விதைத்துப் பாழ், நாற்றுப்பாழ், நட்டுப்பாழ், படை அழிவு போன்ற பலவற்றிற்காகக் கொடுக்கவேண்டிய வரியை நீக்கியுள்ளனர்; அல்லது குறைத்துள்ளனர். தொண்டைமானாரும் அறந்தாங்கிப் பற்றில் அழியாநிலை, ஆளப்பிறந்தான், மனக்கோட்டை, பொய்கை, குருந்தரயர் கோட்டை, திருநாவலூர், பாகக்குடி ஆகிய ஊரவரும், அழியாநிலை, நகரத்தாரும் இதுவரை ஒரு மா நிலத்துக்கு 40 பணம் வரியாகச் செலுத்தினர். இனிமேல் ஒருமா நிலத்துக்கு 20 பணம் செலுத்தினால் போதும் என வரியைப் பாதியாகக் குறைத்தார்.

இதற்குரிய ஆணை 20.6.1445 அன்று ஆளப்பிறந்தான் பூமீசுவர நாதர் கோயிலில் கல்வெட்டாகப் பொறிக்கப்பட்டது. வரி பாதியாகக் குறைத்தற்குரிய காரணம் எதுவும் கூறப்படவில்லை. இந்த ஆணையை அழகிய மணவாளப் பெருமாள் தொண்டைமானாரும் அவருடைய தம்பிமார்கள் சுந்தரபாண்டியத் தொண்டைமானாரும், குலசேகரபாண்டியத் தொண்டைமானாரும்

இணைந்து அளித்துள்ளனர். தொண்டைமானார் "நாமும், நம் தம்பிமாரும்" ஆணையிட்டதாகக் கல்வெட்டில் பொறித்துள்ளார். இதன் மூலம் அறந்தாங்கித் தொண்டைமானார் சிலர் சகோதரர்களுடன் இணைந்து நாட்டு நிர்வாகம் செய்தது உறுதிப்படுகிறது. நாட்டுக் கணக்கு முதலியாண்டார் கையெழுத்திட்டுள்ளார் (க.ஆ. 238/1930).

### வரி நீக்கம்

குறும்பூரில் முன்பு சில குறிப்பிட்ட வரிகள் இல்லை. பின் அறந்தாங்கி போலக் குறும்பூரிலும் அவ்வரிகள் விதிக்கப்பட்டன. 6.3.1455 முதல் முன்பு குறும்பூரில் இருந்ததுபோல இனிமேல் குறும்பூர் ஊரவரும், அறந்தாங்கி ஊரவரும் அக் குறிப்பிட்ட வரியைச்செலுத்த வேண்டியதில்லை என்று தொண்டைமானார் ஆணையிட்டார். கல்வெட்டின் பல பகுதிகள் சிதைந்துள்ளதால் எந்த வரி நீக்கப்பட்டது என்பது தெரியவில்லை. தொண்டைமானார் பெயருக்கு முன் இக்கல்வெட்டில் உடையார் என்ற சிறப்புச்சொல் சேர்க்கப்பட்டுள்ளது (க.ஆ. 224/1942).

### மக்களுக்குக் காணிகொடுத்தல்

தன் மகனுக்குத் தன் காலத்திலேயே இளவரசுப் பட்டம் சூட்டி ஆட்சியில் பயிற்சி கொடுப்பது பேரரசர்களின் வழக்கம். அதுபோலவே அறந்தாங்கித் தொண்டைமானார் அரசர்கள் தம் மக்களுக்குச் சில ஊர்களோ நிலமோ அளித்து அங்கு வீடும் அளித்துப் பயிரிட்டு விளைச்சலில் ஒரு பகுதியைக் கோயிலுக்குக் கொடுக்குமாறு செய்தனர்.

அழகிய மணவாளப் பெருமாளுக்கு இரண்டு ஆண் மக்கள் இருந்தனர். நயினார் இலக்கப்பத் தண்ணாயக்கத் தொண்டை மானார், மெய் நின்ற பெருமாள் அதிசூரராமத் தொண்டைமானார் என்பன அவர்கள் பெயர்கள். மூத்த மகனை இலக்கணத் தண்ணாயக்கத் தொண்டைமான், தண்ணாயக்கத் தொண்டைமான், இலக்கப்பர் என்றும் குறிப்பதுண்டு. மெய்நின்ற பெருமாள் என்று வேறு ஒரு அரசரும் இருந்துள்ளார்.

இலக்கப்பத் தண்ணாயக்கத் தொண்டைமானாருக்கு அழகிய மணவாளப் பெருமாள் அரசுக்குச் சொந்தமான ஊராகிய

பருத்தி நல்லூர் என்ற ஊரை 29.12.1443 அன்று காணியாக அளித்தார். அத்துடன் 19.9.1442 ; 19.10.1442 ; 23.3.1444 ஆகிய நாட்களில் அரசு நிலம் சிலவற்றையும் பலரிடமிருந்துபெற்ற நிலங்களையும் கொடுத்தார். விளைச்சலில் ஒரு மா நிலத்துக்கு 5 மரக்கால் அளக்கவேண்டும். அவை முழுவதையும் எட்டியத்தளி அகத்தீசுவரர் கோயிலுக்கு அளிக்கவேண்டும் என்றும் ஆணையிட்டார் (க.ஆ. 119, 121, 123/1916 ; 235 / 1930).

மெய்நின்ற பெருமாள் அதிசூரராமத் தொண்டைமானாருக்கு நாட்டுமங்கலம் என்ற ஊரையும், மாங்குடி வேளாளர் முதலிய பலரிடமிருந்து வாங்கிய நிலங்களையும் காணியாக அழகிய மணவாளப் பெருமாள் தொண்டைமானார் அளித்தார். 1 மா நிலத்துக்கு 5 மரக்கால் தானியம் எட்டியத்தளி அகத்தீசுவரருக்கு அளிக்க ஆணையிட்டார். என்ன தானியம் என்ற குறிப்பு கல்வெட்டில் இல்லை (க.ஆ. 124,126/1916).

ஆளப்பிறந்தான் பூமீசுவரர் கோயில் கல்வெட்டில் அழகியமணவாளப் பெருமாளின் தம்பியர் இருவர் குறிக்கப்பெறுகின்றனர். ஒருவர் பெயர் சுந்தரபாண்டியத் தொண்டைமானார். மற்றொருவர் பெயர் குலசேகரபாண்டியத் தொண்டைமானார்.

## மெய்நின்ற பெருமாள் தொண்டைமானார்

மாறவர்மன் சீவல்லப தேவரின் 5ஆம் ஆட்சியாண்டில் குறும்பில் ஊரவர்கள் அறந்தாங்கி ஊரார் போல ஒரு மா நிலத்துக்கு 20 பணம் கொடுக்க ஆணையிட்டார். இது அல்லது வேறு ஒன்றும் கொடுக்கத் தேவையில்லை என்றும் இதற்கு யாராவது குறை கூறினால் செழியங்க நல்லூர்க் கல்வெட்டைப் பார்க்க என்றும் கல்வெட்டுப் பொறித்தார் (க.ஆ. 227/1942).

## திருநெல்வேலிப் பெருமாள் தொண்டைமானார்

இங்குக் குறிக்கப்பெறும் திருநெல்வேலி தென்பாண்டி நாட்டு ஊர் அல்ல. தொண்டைமான்கள் குடியேற்ற ஊர்களில் ஒன்றாகக் குறிக்கப்பெறும் ஊர். திருமெய்யம் வட்டத்தில் உள்ளது. வேள்விக்குடிச் செப்பேட்டில்

> சூழியானை செலவுந்திப் பாழிவாய்அமர்கடந்தும்
> வில்வேலிக் கடற்றானை நெல்வேலிச் செருவென்றும்

எனக் குறிக்கப் பெறும் ஊர். சின்னமனூர்ப் பெரிய செப்பேட்டிலும் பாண்டியன் நெல்வேலியில் வில்லவனை வென்றதாகக் கூறப்படுகிறது. சுந்தரர் தம் திருத்தொண்டத் தொகையில்

> நிறைகொண்ட சிந்தையால் நெல்வேலி வென்ற
> நின்றசீர் நெடுமாறன் அடியார்க்கும் அடியேன்

என்று கூறியுள்ளார். இங்குப் பாண்டியன் பெற்ற வெற்றி மிகப் பெரிதாகக் கருதப்பட்டுள்ளது. பாண்டியர் படையெடுப்பு மதுரையிலிருந்து வடக்கு நோக்கியே நடைபெற்றதால் நெல்வேலி புதுக்கோட்டை ஊர்தான் என்பது தெளிவு. இப்போது அவ்வூர் 'நெய்வேலி' என்று அழைக்கப்படுகிறது. நெல்வேலிதான் திரு என்ற சிறப்பு அடைமொழி பெற்றுள்ளது.

அறந்தாங்கி அரசு தொண்டைமானாரில் திருநெல்வேலிப் பெருமாள் தொண்டைமானார் என்பவர் ஒருவர். இவருடைய மூன்று கல்வெட்டுக்கள் 1463-1470 கால எல்லையில் கிடைத்துள்ளன. இவருக்கு முன்பே வேறு சிலர் நெல்வேலிப் பெருமாள் என்று பெயர் பெற்று, புதுக்கோட்டைப் பகுதியில் வாழ்ந்துள்ளனர்.

6.1.1463 அன்று மிழலைக் கூற்றத்தில் உள்ள ஒரு நிலத்தை எட்டியத்தளி அகத்தீசுவரர் கோயிலுக்குக் கொடையாக நீர்வார்த்துக் கொடுத்தார். அதன் வருவாயிலிருந்து ஒரு மா நிலத்திற்கு ஒரு கலம் தானியம் அகத்தீசுவரருக்குக் கொடுக்க ஏற்பாடு செய்துள்ளார். நிரம்ப அழகியார் காலிங்கராயர் என்பவர் இந்த ஆவணத்தை எழுதியுள்ளார். நிலத்தில் உள்ள மா, பனை மரங்களும் கொடையாகக் கொடுக்கப்பட்டன (க.ஆ. 128/1916).

10.4.1465 அன்று குறும்பூர் சித்தநாதீசுவரர் கோயிலுக்குச் சென்னிலத்தூர் என்ற ஊரை எல்லை வகுத்துத் திரிசூலக்கல் எல்லைகளில் நட்டுத் தேவதானமாகக் கொடுத்தார். ஏற்கெனவே திருமால் கோயில், பிள்ளையார் கோயில், ஐயனார் கோயில், பிடாரி கோயில் ஆகியவற்றிற்குக் கொடுத்த கொடைகள் நீக்கி எஞ்சிய நிலங்களே கொடையாகக் கொடுக்கப்பட்டன (க.ஆ. 217/1942).

குறும்பூர் சித்தநாதீசுவரர் கோயிலில் 15.1.1469 அன்று தம்முடைய பெயரால் ஒரு சந்தி வழிபாடு நடத்தப் பரவைக்கோட்டை என்ற ஊரைக் கொடையாகக் கொடுத்தார். இதற்குரிய கொடைக் கல்வெட்டு இக்கோயிலில் மட்டுமின்றித் திருமலையிலும் வெட்டப்பட்டுள்ளது என்று கூறப்பட்டுள்ளது (க.ஆ.216/1942).

8.1.1470 அன்று எட்டியத்தளி அகத்தீசுவரருக்கு வயிராண்டிவயல் என்ற நிலத்தைக் கொடையாக அளித்தார். கல்வெட்டுக்களில் தொண்டைமானார் உடையார் என்ற அடைமொழியுடன் குறிக்கப்பட்டுள்ளார். அவர் இட்ட ஆணை அருளிச் செயல் என்று கூறப்பட்டுள்ளது. சூரைக்குடி விசயாலய தேவர் மரபிலும் ஒருவர் திருநெல்வேலிப் பெருமாள் என்று பெயர் பெற்றுள்ளார் (க.ஆ. 125/1916).

## இன்பவனப் பெருமாள் தொண்டைமானார்

இன்பவனப் பெருமாள் தொண்டைமானார் 15.12.1476 அன்று குறும்பூர் சித்தநாதீசுவரர் கோயிலில் சிறுகாலைச் சந்தி நடத்துவதற்காக நாட்டுக்குளம், காணாது காட்டினான் ஆகிய குளங்களிலிருந்து நீர்பாயும் காணாது காட்டினான் வயலைக் கொடையாக அளித்தார் (க.ஆ. 226/1942).

மற்றும் மனைச்செய், பள்ளச்செய், இன்பவன வயல், காடுவெட்டி வயல் ஆகியவைகளையும் அளித்தார். மொத்தம் பன்னிரண்டு மா நிலம் கொடுக்கப்பட்டதாகக் கல்வெட்டு கூறுகிறது.

## ஏகப்பெருமாள் தொண்டைமானார்

அறந்தாங்கி அரசு தொண்டைமான் மரபினர் பாண்டிய நாட்டின் வடக்குப் பகுதியாகிய மிழலைக் கூற்றத்தில் அரசு செலுத்தினாலும் அவர்கள் ஆவணங்களில் அவர்களின் பூர்வீகத் தொண்டைநாட்டுத் தொடர்பு பெரிதும் இடம்பெற்றுள்ளது. தொண்டை நாடும், தொண்டைமான் இளந்திரையன், ஆதொண்டை மாலை, காஞ்சிபுரம்-பாலாறு ஆகியவையும் கூறப்படுகின்றன.

காஞ்சிபுரம் ஏகாம்பரநாதர் பெயரின் தொடர்பால் தான் ஏகப்பெருமாள் என்று பெயரிட்டிருக்க வேண்டும். 1654இல் எழுதப்பட்ட சேதுபதி செப்பேடு ஒன்றில் 'ஏகாம்பரத் தொண்டைமான்' என்ற பெயர் காணப்படுகிறது. அறந்தாங்கித் தொண்டைமான்கள் பெரும் பக்தியோடு வணங்கிய திருப்பெருந்துறைக்கோயிலில் நயினார் அடியார் ஏகாம்பரம் பிறைசூடும் பெருமாள் என்பதாகும். மிழலைக் கூற்றத்திலும் காஞ்சிபுரம் என்ற ஊர் ஒன்றை எற்படுத்தி அங்கு ஏகாம்பரநாதரைப் பிரதிட்டை செய்துள்ளனர். எனவே ஏகப்பெருமாள் என்பது ஏகாம்பரநாதர் நினைவாக இட்ட பெயராகவே இருக்கலாம்.

ஏகப் பெருமாள் தொண்டைமானாருக்குச் சிதம்பரநாதன், தீராவினை தீர்த்தான், ஆவுடைநயினார் என்ற மூன்று மக்கள் இருந்தனர். சிதம்பரநாதன் என்ற மூத்த மகனே பொன்னம்பலநாதன் என்ற பெயரோடு ஏகப்பெருமாள் தொண்டைமானாருக்குப் பின் அரசுப் பதவி ஏற்றவர் ஆவார்.

## கோயில் கொடைகள்

எட்டியூர்த்தளி அகத்தீசுவரமுடையார் கோயிலுக்குச் சிறுகாலைச் சந்திக்காக வடவெள்ளாற்று நாட்டு மிழலைக் கூற்றத்து வயலில் பன்னிரண்டு மா நிலத்தை ஏகப்பெருமாள் தொண்டைமானார் 15.4.1478 அன்று கொடையாக அளித்தார் (க.ஆ. 129/1916).

வடவெள்ளாறான சுந்தரபாண்டிய வளநாட்டு வடவெள்ளாற்று நாட்டு திருமேற்கோயில் பராசரன்புத்தூர் பெருமாள் கேசவப் பெருமாளுக்கு 21.10.1481 அன்று பரிவட்டம் முதல் அனைத்து வழிபாட்டுப் பொருள்களையும் கொடையாக ஏகப்பெருமாள் தொண்டைமானார் அளித்தார் (க.ஆ. 512/1925).

பழங்கரை புராதனபுரீசுவரர் கோயிலுக்கு அக்கோயில் காரியத்துக்குக் கடவ நிர்வாகிகளில் அத்தாணிநல்லூர் தவசிகள் உடையான் உலகலங்காரப் பூபாலராயரிடம் குருந்தரையன் வயல், குளம், நத்தம், புன்செய் ஆகியவைகளைக் கொடையாகத் தொண்டைமானார் அளித்தார் (பு.க. 895).

கோயிலூர் பாலபுரீசுவரர் கோயிலுக்கு வடவெள்ளாறு நாட்டில் இருந்த தொண்டைமானாருக்குச் சொந்தமான

பண்ணைவயலான ஆவுடையான் வயலைக் கொடையாக அளித்தார் (பு.க. 874).

மிலட்டூர் உடையார் அழகிய பொன்னம்பலநாத சுவாமிக்குத் திருநாமத்துக் காணியாக மிழலைக் கூற்றத்து மேல்கூறு பாம்பாற்றுப் போக்கு, நாலுகோட்டைப் பற்று, வளவர்மாணிக்கப்பற்று, தேவங்காடியையும், கருங்காலக் குடியையும் ஏகப்பெருமாள் தொண்டைமானார் 27.4.1492இல் கொடையாக அளித்தார். இக்கல்வெட்டில் மிழலைக் கூற்றத்தை "நம்முடைய சீமை" என்று குறித்துள்ளார் (க.ஆ. 213/1942).

திருப்பெருந்துறைக் கோயிலில் அறந்தாங்கித் தொண்டைமானாரின் உபயமாகக் கட்டளை நடத்தச் சூரிய தேவர் தொண்டைமானார் என்பவர் பிள்ளை வயலான பாண்டிப் பெருமாள் நல்லூரைக் கொடையாக முன்னாளில் கொடுத்திருந்தார் (தொ.செ.2). விசய நகர மன்னர் படையெடுப்பின்போது ஏற்பட்ட கலகத்தில் அவ்வூரை அடைமானமாக ஏற்றுக் கோயில் கட்டளைக்கு உரிய பங்கைக் கொடுத்தவர்கள் 1498ஆம் ஆண்டு தங்களால் கோயிலுக்கு உரிய பங்கைச் செலுத்த முடியாது என்று ஒப்பந்த முறியையும் ஊரையும் கோயிலுக்கே திருப்பிக் கொடுத்துவிட்டனர். ஏகப் பெருமாள் தொண்டைமானார் அவ்வூரை மீண்டும் திருநாமத்துக் காணியாக்கி ஊர் வருவாயைக் கொண்டு மீண்டும் கட்டளை நடைபெறத் தக்க ஏற்பாடுகளைச் செய்தார் (க.ஆ. 211/1942).

ஏகப்பெருமாள் தொண்டைமான்னார் ஆண்டான் பிள்ளை என்பவர் மகன் வில்லியாண்டான் பிள்ளை குட்டியாருக்கு எருக்கிலைக் கோட்டத்து மாவெட்டி என்னும் ஊரை 1498ஆம் ஆண்டு கொடையாக அளித்தார்.

### நீதிமுறை

ஏகப்பெருமாள் தொண்டைமானாரின் திருவாசல் காரியத்துக்குக் கடவார்க்கு அறந்தாங்கிப்பற்று, விளய் மாணிக்கப்பற்று, அரையர் குளப்பற்று நாட்டவரும், பிள்ளைப் பேரும் இசைந்து 28.11.1482 அன்று செய்த உடன்படிக்கையில் அறந்தாங்கித் தொண்டைமானார்களின் நீதிமுறை நன்கு தெரிகிறது.

ஒருவன் குற்றம் செய்தால் அவனைச் சிறையில் அடைக்க வேண்டும். அவன் நிலங்களில் உற்பத்தி என்ன என்பதை, அளவு கண்டு பாதியைப் பண்டாரத்தில் சேர்க்கவேண்டும். குற்றம் செய்தவன் கொடுக்க வேண்டியதைக் கொடுக்காமல் ஓடிப் போனால் அவனுக்குப் பிணை நின்றவன் அதற்குத் தக்க பதில் கூற வேண்டும் (க.ஆ. 233/1930).

முன்பு உண்டான வரிகள், மண்மதிள், ஊழியம், காணிக்கை இவைகளை முன்பு உண்டானபடியே வாங்க வேண்டும். அரசிடம் காணியாட்சி பெற்றவர்கள் அதற்கு உண்டான சாசனத்தின்படியே உரிய கடமைகளைத் தவறாது செலுத்தவேண்டும். பிள்ளைப் பேர்கள் தமக்கு உண்டான நிலத்தை அனுபவிக்கலாம். ஒரு சாதியார் அதே சாதியாரிடம் அடைமானம், நிலம் விற்பனைக்குப் பெற்றால் முன்பு அனுபவித்தவர் கடமை கொடுப்பது போலவே கொடுக்க வேண்டும். முன்பு நடந்த முறை அச்சாதியார்க்கும் நடத்த வேண்டும்.

ஒருவன் பயத்தினால் கள்ளப்பற்றில் சேர்ந்திருந்தால் பயம் தீர்ந்து நான்கு பேரை அழைத்துக்கொண்டுவந்து காட்ட வேண்டும். எவராவது அரசரை வெறுத்து அந்நிய இடத்தில் போய்ச் சேர்ந்தால் அவன் காணியையெல்லாம் பறிமுதல் செய்து கோயிலுக்குக் கொடுக்கவேண்டும். இவை அனைத்தும் முன்பு தேவராயத் தொண்டைமான் நாளில் நடந்தபடியே நடத்திக்கொண்டு வரவேண்டும்.

### மக்களுக்குக் காணியாட்சி

மிழலைக் கூற்றத்து மேல்கூறு மீபாம்பாற்று நாட்டு வளவர் மாணிக்கப் பற்றில் மறித்துலகங் காத்தான், நாவிலங்காத்தான், இலைங்குடி ஆகிய மூன்று ஊர்கள் சிதம்பரநாதனுக்கும், பெரிய கோட்டைப் புரவில் மேலைச் செங்கரை என்ற ஊர் தீராவினை தீர்த்தானுக்கும், பேரம்பலைக்குடி, சிற்றினாங்குடி, மறித்துலகங்காத்தானில் 8 மா பங்கு ஆகியவைகள் ஆவுடை நயினாருக்கும் தொண்டைமானாரால் காணிகளாக அளிக்கப்பட்டன. அந்தந்த ஊர்களில் அவர்கள் குடியிருக்க மனைகளும் அளிக்கப்பட்டன (பு.க. 823, 830, 832).

ஏகப்பெருமாள் தொண்டைமானாரின் கல்வெட்டுக்கள் மூலம் அவர் விசயநகர ஆட்சிக்கு உட்பட்டு ஆட்சி செய்தவர் என்று தெரிகிறது. இவருடைய அலுவலர்கள் திருவம்பலமுடையார் காலிங்கராயன், கலியுக மெய்யன் காலிங்கராயன் என்போர் கல்வெட்டுக்களில் கையெழுத்திட்டுள்ளனர். சில கல்வெட்டுக்களில் 'சத்யம்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது 'திருமெய்யம்' என்பதன் அறிகுறியாகவே என்பது தெரிகிறது (*க.ஆ. 129/1916*).

## அழகிய பெருமாள் தொண்டைமானார்

அச்சுதப்பத் தொண்டைமானாரின் மகன் அழகிய பெருமாள் தொண்டைமானார். இவருக்குச் சொந்தமான இறங்கல் மீட்டான் வயலையும் செட்டி செய் என்ற நிலத்தையும் திருப்பெருந்துறைக் கோயிலுக்குக் கொடையாக அளித்தார். இதன் வருவாய் கோயில் பண்டாரத்தில் சேர்க்கப்பட்டு, கோயில் கணக்கர் அதை நிர்வகிக்க வேண்டும் என்று கல்வெட்டில் கூறப்பட்டுள்ளது (*பா.எண். 50*).

# பொன்னம்பலநாதத் தொண்டைமானார்

இவர் ஏகப்பெருமாள் தொண்டைமானாரின் மூத்த மகன். இவர் ஆவணித் திருவோண நாளில் பிறந்தவர் என்று திருப்பெருந்துறைச் செப்பேடு ஒன்றின் மூலம் தெரிகிறது. ஏகப் பெருமாள் தொண்டைமானாரின் மூத்தமகன் சிதம்பரநாதனின் பிறந்தநாள் ஆவணித் திருவோணம். பொன்னம்பலநாதத் தொண்டைமானாரின் பிறந்த நாளும் ஆவணித் திருவோணம். எனவே சிதம்பரநாதன் ஆட்சிப் பொறுப்பேற்றபோது பொன்னம்பல நாதன் என்று அழைக்கப்பட்டார் என்று தெரிகிறது. சிதம்பரம்தான் பொன்னம்பலம் என்பது யாவரும் அறிந்த செய்தியாகும் (க.ஆ. 519/1925).

இவர் விசயநகரத் துளுவ வம்ச அரசர்கள் கிருஷ்ணதேவராயர் (1509-1529), அச்சுத தேவராயர் (1529-1542) ஆகியோரின் அதிகாரத்திற்கு உட்பட்டு ஆட்சி செய்தார் என்று திருவரங்குளம் அரிதீர்த்தேசுவரம், வளவர்மாணிக்கம் கைலாசநாதர் கோயில் கல்வெட்டுக்கள் மூலம் அறிகின்றோம். எனினும் பல சமயங்களில் விசயநகர அரசர் பெயர்கள் இன்றித் தன் பெயரிலேயே கல்வெட்டுக்களையும் செப்பேடுகளையும் பொறித்துள்ளார்.

## இளமைக்காலம்

பொன்னம்பலநாதத் தொண்டைமானாரின் இளமைப் பெயர் சிதம்பரநாதன் என்பது. இவன் தம்பியர் தீராவினை தீர்த்தான், ஆவுடை நயினார் என்ற இருவராவர். சிதம்பரநாதன் பிறந்த நாளான ஆவணித் திருவோண நாள் அன்று தன் தந்தை ஏகப்பெருமாள் தொண்டைமானாரால் மிழலைக் கூற்றத்து மேல் கூறு மீபாம்பாற்று நாட்டு வளவர் மாணிக்கப் பற்றில் அரசுக்குச் சொந்தமான மறித்துலகங் காத்தான், நாவியங்காத்தான், இலைங்குடியில் அச்சமறியாதான் பங்கு பாதி நீக்கி மீதிப்

பங்கையும் காணியாகப் பெற்று நிர்வகித்து வந்தார். இது நிர்வாகப் பயிற்சிக்காகத் தொண்டைமானார் செய்த ஏற்பாடு ஆகும் (பு.க. 823).

## திருப்பெருந்துறைக் கொடைகள்

ஒருமுறை பொன்னம்பலநாதத் தொண்டைமானார் கடுமையான நோய்வாய்ப்பட்டார். இறப்பு ஏற்படும்போல் காணப்பட்டது. தன்நோய் நீங்குவதற்காகத் திருப்பெருந்துறைக் கோயிலுக்கு வடவெள்ளாறான சுந்தரபாண்டிய வளநாட்டுப் பனைங்கயநாட்டு வத்தனூருக்குப் 'பொன்னம்பலநாத நல்லூர்' என்று பெயரிட்டுச் சர்வ மானியமாக அளித்தார். கூபம் (கிணறு), தடாகம் (குளம்) உட்பட அட்டபோக உரிமைகளுடன் கொடையாக அளித்தார். இதைத் தான் பிறந்த ஆவணித் திருவோணநாளில் அளித்தார் என்பது குறிப்பிடத்தக்கது (தொ.செ.3).

இக்கொடையைக் குறிக்கும் செப்பேட்டில் "அறந்தாங்கி அரசு பொன்னம்பலத் தொண்டைமானாரோம் நம்முடைய தேகத்திலே வந்த மரணரோகம் சத்ய சிரார்த்தமாகக்" கொடையாகக் கொடுக்கப்பட்டது என்று குறிக்கப்பட்டுள்ளது.

மற்றொரு பிறந்தநாளான ஆவணித் திருவோணத்தன்று வடவெள்ளாறான சுந்தரபாண்டிய வளநாட்டுப் பனைங்கய நாட்டுக் கீழை விஜயாபுரம் என்ற ஊரைத் திருப்பெருந்துறைக் கோயிலுக்குத் திருநாமத்துக்காணிக் கொடையாக அளித்து அதன் வருவாய் கொண்டு கோயிலில் 'பொன்னம்பலநாத சிறுகாலைச் சந்தி" என்ற கட்டளை நடத்தத் தக்க ஏற்பாடுகள் செய்தார் (தொ.செ.4).

நோய் நீங்கவேண்டுமென்று கொடை கொடுத்தது 10.8.1516 ஆகும். பொன்னம்பலநாதச் சிறுகாலைச் சந்தி ஏற்படுத்தியது 8.11.1518 ஆகும். முதல் கொடையளித்து அதனால் இறைவன் அருள் பெற்று மீண்டும் இரண்டாவது கொடையைத் திருப்பெருந்துறைக் கோயிலுக்குத் தொண்டைமானார் அளித்திருக்கலாம் (தொ.செ.3).

மிழலைக் கூற்றத்து மேல் கூறு வீரமங்கலப் புரவில் வெள்ளாற்றுக்கு வடகரையில் உள்ள கீழ்க்கரத்தூர் என்னும் ஊரை

500 சக்கரம் பொன் கொடுத்து வாங்கித் திருப்பெருந்துறைக் கோயிலுக்கு 12.10.1526 அன்று கொடையாகக் கொடுத்தார்.

26.10.1526 அன்று 2000 சக்கரம் பொன் கொடுத்து

(அ) மிழலைக் கூற்றத்து மேல் கூற்றுப் பெருநாவலூர்

(ஆ) வடவெள்ளாற்று நாட்டுப் பனைங்கய நாட்டு அரையர் குளப்பற்று வேங்கூர் எழுவனேலி

(இ) வடவெள்ளாற்று நாட்டுப் பனைங்கயநாட்டு அரையர் குளப்பற்று ஸ்ரீகண்டமங்கலம்

ஆகிய மூன்று ஊர்களையும் விலைக்கு வாங்கித் திருப்பெருந்துறைக் கோயிலுக்குக் கொடையாக அளித்தார். விலைக்கு வாங்கப்பட்ட ஊர்களின் வருவாயுடன் தொண்டைமானார் அரசு கொள்ளும் வரிகளையும் கோயிலுக்குக் கொடையாக அளித்தார் (தொ.செ.6).

20.2.1534 அன்று திருபெருந்துறைக் கோயிலுக்குச் சாயரட்சை, அர்த்தசாமப் பூசைகட்காகப் பிராந்தனிவயல் என்ற ஊரைச் சேர்ந்த ஏந்தல்களையும், குறிச்சிகளையும் கொடையாகத் தொண்டைமானார் அளித்தார் (தொ.செ. 9).

## கோயில் கடனை அடைத்தல்

பொன்னம்பலநாதத் தொண்டைமானார் 1508இல் பட்டம் ஏற்றவுடன் இன்றியமையாத செலவுகட்காகத் திருப்பெருந்துறைக் கோயில் பண்டாரத்திலிருந்து 7000 பொன்னும், கலியுகராமன் பொன் 700உம் கடனாகப் பெற்றார். சுக்கில வருடம் முதல் பிரமாதி வருடம் வரை 10 ஆண்டுகளில் (1509-1519) கோயில் பண்டாரத்திற்கு 2883 பொன் 9 பணம் திருப்பிச் செலுத்தினார். இன்னும் கோயிலுக்குக் கொடுக்கவேண்டிய பாக்கி 4116 பொன் 1 பணமும், கலியுகராமன் பொன் 200உம் ஆகும்.

கடன் பெற்று 10 ஆண்டுகள் ஆகிவிட்டன. கோயில் பணிகட்காகப் பணம் தேவைப்பட்டது போலும். மீதிக் கடனுக்காக வடவெள்ளாற்று நாட்டு மையூர், களக்குடி ஆகிய ஊர்களையும், பனைங்கயநாட்டு மருந்துவயலான ஏகப்பெருமாள் நல்லூர், மேலை விஜயாபுரம் ஆகிய ஊர்களையும், ஒக்கூரில் ஒரு பகுதியையும் விலைக்கு விற்று வந்த பொருளைக் கொண்டு கோயில் கடனை அடைத்தார்.

மூன்றாம் சடையவர்மன் வீரபாண்டியனுக்கு (1297-1342) 'கலியுகராமன்' என்ற பட்டப்பெயர் உண்டு. வீரபாண்டியன் திருப்பைஞ்ஞீலிக் கோயிலில் 'கலியுகராமன் சந்தி' என்ற கட்டளையை ஏற்படுத்தினான். திருவரங்கத்தில் ஆறாம் திருச்சுற்று மதிலை இம்மன்னன் கட்டியதால் அதற்குக் கலியுகராமன் மதில் என்று பெயர் ஏற்பட்டது. திருவரங்கம் அருகில் 'கலியுகராமச் சதுர்வேத மங்கலம்' என்ற ஊரை உருவாக்கி அந்தணர்களை இம்மன்னன் குடியேற்றினான்.

'கலியுகராமன்' என்று ஒரு புறத்தில் எழுதப்பட்டு மறுபுறம் விஷ்ணுவின் இரண்டு திருவடிகள் பொறிக்கப்பட்ட 'கலியுகராமன்' பொற்காசுகளை அறிஞர்கள் கண்டுபிடித்துள்ளனர். திருநெல்வேலிப் பகுதியில் 1421 வாக்கில் ஆட்சிபுரிந்த மாறவர்மன் வீரபாண்டியனுக்கும் 'கலியுகராமன்' என்ற பெயர் உண்டு. ஆனால் முன்னவனே காசுகளை வெளியிட்டவன் ஆவான்.

திருப்பெருந்துறை "மிழலைக்கூற்றத்து நடுவில் கூற்றம் பிரம்மதேசம் தனியூர் திருப்பெருந்துறையான பவித்ரமாணிக்கப் பட்டினம்" என்று குறிப்பிடப்படுகிறது. தனியூர் என்பதால் தனி உரிமையுடைய ஊராக விளங்கியதால் நாடாண்ட அரசனும் கடன் வாங்க வேண்டியதாயிற்றுப் போலும் (தொ.செ.5).

## பிறகோயில் கொடைகள்

திருப்பெருந்துறை அருகில் உள்ள பரமண்டூர் "வட வெள்ளாற்று நாட்டுப் பராசரன்புத்தூர்" என்று கல்வெட்டுக்களில் குறிக்கப்படுகிறது. அவ்வூரில் உள்ள திருமேற்கோயிலான ஆதிகேசவப் பெருமாள் கோயிலில் தொண்டைமானார் தன் பெயரில் "பொன்னம்பலநாதச் சந்தி" என்ற பெயரில் கட்டளை ஒன்றை ஏற்படுத்தி, பனைங்கயநாட்டு அரையர்குளப் பற்றுப் புரவில் செருடன்வயல், இடையன்வயல் ஆகிய ஊர்களைக் குடிநீங்காத் தேவதானமாகக் கொடுத்தார் (க.ஆ. 515/1925).

இதேபோல் திருப்பெருந்துறைக் கோயிலிலும் "பொன்னம்பலநாதன் சந்தி" என்ற கட்டளையை ஏற்படுத்தி அமுது செய்வதற்காக மிழலைக் கூற்றத்து மேல் கூற்றுத் தனியூரான நுளம்பூரைப் "பொன்னம்பலநாத நல்லூர்" என்று பெயர் மாற்றிச் சர்வமானியமாக வழங்கினார். மேற்கண்ட இரண்டு

கொடைகளையும் பொன்னம்பல நாதத் தொண்டைமானாரின் பிறந்த நாளான திருவோணத்தன்று கொடுத்தார். கல்வெட்டில் அச்செய்தி "திருவோண நட்சத்திரம் பெற்ற நம்முடைய ஜன்ம நட்சத்திரப் புண்ணிய காலத்தில்" கொடுக்கப்பட்டதாக எழுதப்பட்டுள்ளது (க.ஆ. 519/1925)..

பரமண்டூர் ஆதிகேசவப் பெருமாள் கோயிலில் வைணவக் கேள்வியாகப் பணியாற்றும் திருவரங்கநாதர் என்பவருக்கு அப்பணிக்காக ஊரில் ஒரு மனையும், இரண்டு மா நிலமும், தினம் நாழிப் பிரசாதமும் திருக்கை வழக்கமாக அளிக்கும்படி அந்தக் கோயில் கணக்கர்கட்கு ஆணையிட்டதை அக்கோயில் கல்வெட்டு கூறுகிறது. "இந்தச் செய்தியைத் தானத்தார்க்கும் வடவெள்ளாற்று நாட்டார்க்கும் சொல்லவும்" என்றும் கல்வெட்டில் எழுதப்பட்டுள்ளது (க.ஆ.513/1925).

மிழலைக் கூற்றத்து மேல்கூறு மேலைப் பாம்பாற்று நாட்டுத் தென்பாலியான ஆளப்பிறந்தானான பூமியூர் பூமியூராண்ட தம்பிரானார்க்கு ஆளப்பிறந்தான் புரவில் குடிக்காட்டுவயல், ஆறிவயல், பாண்டவதூதன் நிலம், மெய்க்கண் நிறைந்தான் வயல் ஆகியவைகளைக் கொடையாகப் பொன்னம்பலநாதத் தொண்டைமானார் 12.4.1530 அன்று கொடுத்தார். அக்கொடை அன்று நிகழ்ந்த சந்திர கிரகணப் புண்ணிய நேரத்தில் கொடுக்கப்பட்டது (க.ஆ. 240/1930).

மேலை மீபாம்பாற்றுநாட்டுத் தாஞ்சியூர் அகத்தீசுவரர் கோயிலுக்குச் சிறுகாலைச் சந்தியின்போது தன்பெயரால் ஆடியருளவும், அமுது செய்யவும் தாஞ்சியூர்ப் புரவில் வரந்தருவான் குடிக்காட்டில் வயல், குளம், குளவாய்த்தலை ஆகியவைகளைத் தொண்டைமானார் கொடையாக அளித்தார் (பு.க.844).

குளவாய்ப்பட்டி அடலேசுவரர் கோயிலுக்கு இராசராச வளநாட்டுப் பாலையூர்நாட்டு நாட்டுக்குளத்துப் பெரியமடை வேப்ப வாய்க்காலாலும், பொன் ஏரியாலும், புறவாய்த்தலையாலும் நீர் பாய்ந்து விளையும் கீரமங்கலம் ஆன கண்டாகுடி என்ற ஊரைக் கொடையாக 1525ஆம் ஆண்டு அளித்தார் (பு.க.849).

## தவறான காணியை மீட்டல்

எட்டியூர்த்தளி அகத்தீசுவரர் கோயிலில் அக்கோயில் கணக்கு அலுவலன் தவறாக விபரம் கொடுத்ததால் எட்டியூர்த் தளி, நாட்டுமங்கலம், கரையூர் ஆகிய ஊர்களின் காணியாட்சியைப் பொன்னம்பலநாதத் தொண்டைமானார் தென்னவதரையர் என்பவருக்குக் கொடுத்துவிட்டார். பின் சரியான ஆவணங்களைப் பார்க்கவே அந்த ஊர்களின் காணியாட்சி உரிமையை ஏற்கெனவே பூபாலராயன் என்பானின் மகன் அனுபவித்து வந்தமை தெரிந்தது. உடனே தென்னவதரையனுக்குக் கொடுக்கப்பட்ட காணியாட்சி உரிமை ஓலையைத் திரும்பப் பெற்றுப் பூபாலராயன் மகனுக்கு மீண்டும் 7.6.1535 அன்று கொடுக்கப்பட்டது (க.ஆ. 118/1916).

## மகனுக்குக் காணியாட்சி அளித்தல்

தன் தந்தை ஏகப் பெருமாள் தொண்டைமானாரிடம் இளமைப் பருவத்தில் காணியூர்கள் பெற்றுத் தான் நிர்வாகம் செய்தது போலவே தன்னுடைய மகன் வீரவிநோதத் தொண்டைமானுக்கு மிழலைக் கூற்றத்து மேல்கூறு மீபாம்பாற்று நாட்டு நாலுகோட்டைப் பற்று ஏற்றநாட்டுப் புரவில் சிறுக்குறிச்சி வயல் என்ற ஊரைக் காணியாட்சியாக அளித்தார் பொன்னம்பலநாதத் தொண்டைமானார். அத்துடன் அருகில் உள்ள வளவர்மாணிக்கம் என்ற ஊரில் உள்ள நடுத்தெருவில் மனை (வீடு) ஒன்றையும் வீரவிநோதத் தொண்டைமானாருக்கு அளித்தார் (பு.க. 750).

## பட்டப் பெயர்கள்

சில ஆவணங்களில் பொன்னம்பலநாதத் தொண்டைமானார் என்ற பெயர் பொன்னம்பலத் தொண்டைமானார் என்றும், பொன்னம்பலங்காத்த தொண்டைமானார் என்றும் எழுதப்பட்டுள்ளது.

இவருக்கு அச்சம் அறியாதான், அலைவில் அஞ்சாதான், திருமிழலைத் திருநாடன், மல்லையாதிபதி, மயிலையாதிபதி, சேமனை வென்ற செயதுங்கன், ராசாக்கள் குலதிலகன், தன்னை அடைந்தாரைத் தான் காக்கும் அபிராமன் முதலிய பல்வேறு பட்டப் பெயர்களும், புகழ்மொழிகளும் வழங்கப்பட்டு வந்தன என்பதை அறிகிறோம் (தொ.ச. 6).

## பிச்சர் தொண்டைமானார்

ஆலங்குடி வட்டம் பழங்கரை புராதனபுரீசுவரர் கோயிலில் உள்ள 1426ஆம் ஆண்டைச் சேர்ந்த கல்வெட்டில் இவர் குறிக்கப்பெறுகிறார். இராசராச வளநாட்டுப் பாலையூர் நாட்டவர்க்கு இவர் வரி நிர்ணயம் செய்ததை அக்கல்வெட்டு குறிக்கிறது.

விளைந்த நிலத்துக்குத் தொண்டைமானாரின் அறந்தாங்கி அரசுக்குச் செலுத்தவேண்டிய சுவந்திரம் நீக்கி ஒரு மா நிலத்துக்கு 60 கலம் கொடுக்க வேண்டும். எவராவது குற்றம் குறை செய்தால் பத்துப்பணம் அபராதம் செலுத்த வேண்டும். பிள்ளைவரியும் காரணப் பேர்க்குக் கழித்து மற்றவர்கட்குக் கொடுக்க வேண்டும். முதல் இருந்தாலும் வேறு தண்டம் எதுவும் விதிக்கப்பட மாட்டாது.

இக்கல்வெட்டில் சூரியதேவரான குலசேகரத் தொண்டைமானார் (அடுத்து ஆட்சிக்கு வருபவர்) மகனார் என்று குறிக்கப் பெறுகிறார். இந்த ஆவணத்தில் தொண்டைமானார் அலுவலராகத் திருச்சிற்றம்பலமுடையான் காலிங்கராயர் என்பவர் குறிக்கப் பெறுகிறார் (பு.க. 784).

## ஆளுடை நயினார் தொண்டைமானார்

ஆளப்பிறந்தான் பூமீசுவரர் கோயில் கருவறைத் தென்புறச் சுவரில் பொறிக்கப்பட்டுள்ள கல்வெட்டில் ஆளுடை நயினார் தொண்டைமானார் பெயர் குறிக்கப்பட்டுள்ளது. அக்கல்வெட்டு 8.8.1434 அன்று வெட்டப்பட்டது.

ஆளப்பிறந்தானைச் சேர்ந்த கண்டியதேவர், பிச்சன் தொண்டைமான், பகையாபிள்ளையான தோற்றம் அழகியார், பிச்சன் ஊராட்சியார் மணவாளன், ஆரியச் சக்கரவர்த்திகள் மணவாளன் ஆகியோருக்குக் குடிக்காடு என்ற பகுதி காணியாகக் கொடுக்கப்பட்டது. இவர்கள் முன்பு இவ்வூரில் வழங்கியது போல ஒரு மா நிலத்துக்குப் பத்துப் பணம் வரியாகச் செலுத்த வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது.

இக்காணியாட்சியை ஆளுடை நயினார் தொண்டைமானாரும் அவர் தம்பிமார்களும் அளித்ததாகக்

கூறப்பட்டுள்ளது. திருச்சிற்றம்பலமுடையார் காலிங்கராயர் என்பவர் இந்த ஆவணத்தில் கையெழுத்திட்டுள்ளார். இச் செய்தி ஆளப்பிறந்தான் ஊரார்க்கு அறிவிக்கப்பட்டது (க.ஆ. 237/1930).

## ஆவுடை நயினார் தொண்டைமானார்

ஆளப்பிறந்தான் பூமீசுவரர் கோயிலில் காலைச் சந்திக்காக 26.12.1476 அன்று ஆவுடை நயினார் தொண்டைமானார் இடையாற்று வயலில் மல்லும்மான் வயக்கல், இராசன் வயக்கல், மையாண்டி வயக்கல், குளத்தூர் வயக்கல், பிச்சன் வயக்கல், தேவி வயக்கல், சூரியன் வயக்கல், கடலஞ்செய், ஆவுடையான் வயக்கல் ஆகியவற்றில் மொத்தம் 12 மா நிலம் கொடையாகக் கொடுக்கப்பட்டது (பா.43).

ஆவுடை நயினார் தொண்டைமானார் அருளிச்செயல்படிக்கு ஆவுடையான் சேதிபராயன் என்பார் ஆவணத்தில் கையெழுத்திட்டுள்ளார். திருப்பெருந்துறையில் ஆளுடைய நயினார் என்ற பெயரே "ஆவுடையார்" என்று பெயர்மாற்றம் பெற்றது. ஆனால் ஆளுடைநயினார் என்பவரும், ஆவுடை நயினார் என்பவரும் ஒருவரா வேறு வேறானவரா என்று தெரியவில்லை.

## தேவராயத் தொண்டைமானார்

ஆளப்பிறந்தான் பூமீசுரநாதர் கோயிலில் உள்ள 1482ஆம் ஆண்டு ஏகப்பெருமாள் தொண்டைமானாரின் கல்வெட்டில் முன்பு ஆட்சி செய்தவராகக் குறிக்கப் பெறுகிறார். குற்றம் செய்தவர்கட்குத் தண்டனை அளிக்கும் வகை குறித்துக் குறிப்பிடும்போது "முன்னாள் தேவராயத் தொண்டைமானார் நாளில் நடந்த முறையிலே நடத்திக் கொள்ளவும்" என்று குறிக்கப்பட்டுள்ளது. ஏகப் பெருமாள் தொண்டைமானார் காலத்துக்கு முன்பு வாழ்ந்தவர் என்ற குறிப்புத் தவிர வேறு ஒன்றும் இவரைப்பற்றித் தெரியவில்லை.

இவர் விசயநகர மன்னன் இரண்டாம் தேவராயர் காலத்தைச் சேர்ந்தவராக இருக்கக்கூடும். இரண்டாம் தேவராயர்காலம் 1422-1446 ஆகும். அவரைப் பிரபுடதேவர் என்றும் குறிப்பர் (க.ஆ. 211/1942).

## ஆண்டியப்ப அச்சுத நாயக்கத் தொண்டைமானார்

பூமியூரில் பூமியூர்மடம் என ஒன்று இருந்தது. அதன் தலைவராக விளங்கியவர் பெரிய நயினார் சைவாச்சார்ய முதலியார் பண்டாரம் என்பவர். இந்தப் பூமியூர் மடத்திற்கும் பூமியூரில் இருந்த மற்றொரு மடமான பூறுவமுண்டான் மடத்திற்கும் சேர்த்து ஆண்டியப்ப அச்சுத நாயக்கத் தொண்டைமானார் நிலங்களைக் கொடையாக அளித்தார் (க.ஆ. 232/1930).

## பெரிய ரவினியனான ரகுநாதத் தொண்டைமானார்

இவர் ஆண்டியப்பர் அச்சுதத் தொண்டைமானார் மகன். ஆவுடையார் கோயில் கல்வெட்டால் இது தெரிகிறது. இவர் 21.8.1700 அன்று பொய்கை வயல் என்ற ஊரைத் திருப்பெருந்துறைக் கோயிலுக்குக் கொடையாகக் கொடுத்துள்ளார். இந்த ஆவணத்தை எழுதியவர் மயேசுர வேளான் சிதம்பரநாதன் சீரங்கநாதரைச் சேவித்திருந்த பெருமாள் என்பவர் (பா.27).

## இரகுநாத நாயக்கத் தொண்டைமானார் அச்சுதப்ப நாயக்கத் தொண்டைமானார் - ஒப்பந்தம்

இரண்டு அரசர்கட்கிடையே போர் ஏற்படும்போது நாட்டில் பல அழிவுகள் ஏற்படுவது இயற்கை. கட்டிடங்கள், நீர் நிலைகள், அற நிலையங்கள், வேளாண்மை இவைகட்குப் பாதிப்பு ஏற்படுவது இயல்பு. இயல்பாகப் போரில் அழிவு ஏற்படுவது ஒரு வகை. வேண்டுமென்றே பகைவர் நாட்டில் அழிவைச் சிலர் ஏற்படுத்துவர்.

பல ஆண்டுகள் சோழர் ஆதிக்கம் பாண்டிய நாட்டில் நிலவியது. அதை முறியடித்து மாறவர்மன் சுந்தரபாண்டியன் சோழநாட்டின் மீது படையெடுத்தான். பழிக்குப் பழி வாங்க நினைத்த மாறவர்மன் சுந்தரபாண்டியன் "தஞ்சையும் உறந்தையும் செந்தழல் கொழுத்தி" அழிவு ஏற்படுத்தியதை மிகவும் பெருமையாகப் பேசுகிறான்.

கொங்குச் சோழன் வீரராசேந்திரன் கரைவழிநாடு என்னும் பகுதியில் தன் பகைவர்களை அழிக்கப் படையெடுத்தான். போரில் கோயில்களும் தப்பவில்லை. கோயில்கள் அழிவுபட்டன

மட்டுமல்ல, ஏரிகளும், குளங்களும் பாதிக்கப்பட்டதால் போதிய விளைச்சல் இல்லாமல் கோயில்களில் பூசையும் நடைபெறவில்லை. போர் முடிந்து அதற்குப் பிராயச்சித்தமாக வளமுடைய சில ஊர்களைக் கோயிலுக்குக் கொடையாகக் கொடுத்தான். இதனைக் கோவை மாவட்டச் சங்கராமநல்லூர் கல்வெட்டு கூறுகிறது.

**நாம் படை ஏற்றி கரைவழிநாடும் கெட்டு**
**குளமும் ஏரிகளும் அழிந்து இவ்வூர்களில் திருக்**
**கோயில் திருவாசல் அழிவுபடுகையால் இதுக்குப்**
**பிராயச்சித்தமாக இந்நாயனார்க்கு நாம்**
**விட்டுக் கொடுத்த ஊர்**

என்பது அந்தக் கல்வெட்டுப் பகுதி.

மக்களுக்கு வரிகுறைக்கப் பல காரணங்கள் உண்டு. மழை, வெள்ளம், வறட்சி, நோய் இவைகளுடன் படையழிவு ஏற்பட்டாலும் வரிக் குறைப்பு அளிக்கப்படும் என்று கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

தஞ்சை நாயக்கரின் ஆட்சிக் காலத்தில் அறந்தாங்கித் தொண்டைமான் மரபில் நாயக்கர் மேலாதிக்கத்தை ஏற்றுக் கொண்டு இரகுநாத நாயக்கத் தொண்டைமானார், அச்சுதப்ப நாயக்கத் தொண்டைமானர் என இருவர் இருந்தனர். இருவரும் சகோதரர்களாக இருக்கலாம். இவர்களின் தந்தை தஞ்சை நாயக்கர்கள் அச்சுதப்ப நாயக்கர் (1572-1614), இரகுநாத நாயக்கர் (1614-1640) பெயரால் தம் மக்களுக்கு மேற்கண்டவாறு பெயர்கள் வைத்திருக்கலாம்.

இருவரும் அறந்தாங்கி அரசுக்கு உரிமை வேண்டிப் போர் நடவடிக்கையில் ஈடுபட்டிருக்கலாம். போர் வரும் சூழ்நிலையில் இருவரும் ஒப்பந்தம் செய்து கொண்டனர். நாம் இருவரும் போர் செய்தாலும் திருப்பெருந்துறைக் கோயில் சன்னதியிலே திருப்பெருந்துறை எல்லைக்குள் படைகளின் நடவடிக்கை இருக்கக்கூடாது. யாராவது மீறி அவ்வாறு மேற்கண்ட இடங்களில் படைகளை இறக்கினால் அவர்கட்குப் பெரும்பாவம் உண்டாகும். அதுவும் அல்லாமல் தாழ்ந்த சாதியாக அவர்கள் கருதப்படுவார்கள் என்று ஒப்பந்தத்தில் எழுதினர்.

எந்த மரபைச் சேர்ந்த அரசர்களும் இவ்வாறு சிறப்புமிக்க ஒப்பந்தத்தைச் செய்து கொண்டதாக இதுவரை எந்த ஆதாரமும்

கிடைக்கவில்லை. வரலாற்றுப் புகழ்மிக்க இத்தகைய ஒப்பந்தம் செய்து கொண்டவர்கள்அறந்தாங்கித் தொண்டைமான்களேயாவர். இக்கல்வெட்டு திருப்பெருந்துறைக் கோயிலில் இராசகோபுர வாசல் அருகில் எல்லோரும் காணும்வண்ணம் எழுதப்பட்டுள்ளது (பா.24).

## கல்வெட்டு

1. காளயுக்தி வருஷம் ஆடி
2. 13 தேதி திருப்பெருந்துறை
3. ஆளுடையபரம சுவா
4. மி ஸ்ரீ பண்டாரத்துக்குக் க
5. டவார்க்கு இரகுநாத நாய
6. க்கத் தொண்டைமானாரு
7. ம் அச்சுதப்ப நாயக்கத் தொ
8. ண்டை மானாருமோ
9. ம் முறி குடுத்தபடி நாங்கள் இ
10. ரண்டு பேர்க்கும் இனிமேல் ச
11. ண்டை விரோதங்கள் வந்தா
12. லும் சுவாமியார் சன்னதியி
13. லே திருப்பெருந்துறை எல்
14. லை நடந்த பற்றுக்குள்ளே தா
15. ணையம் என்று இரண்டு
16. வகைச் சேவகரும் சென்று
17. இறக்காமல் இருக்கக் கடவோ
18. மாகவும் இந்தப்படி இவ்வறு
19. தே மீறி தாணையம் இறங்கி
20. ன பேர் கெங்கைக் கரையில்
21. காராம்பசுவையும் குருவையு
22. ம் பிராமணனையும் மாதா
23. பிதாவையும் கொன்ற தோஷ
24. த்திலே போகக்கடவாராகவும்
25. இப்படிக்கு இதுவும் அல்லாதே
26. ஈன சாதியாக போகக் கடவோ
27. மாகவும் உ

## அதிசூரராமத் தொண்டைமானார்

இவர் அழகிய மணவாளப் பெருமாள் தொண்டைமானாரின் மகன் என்பது எட்டியத்தளி அகத்தீசுவரர் கோயில் கல்வெட்டால் தெரிகிறது. இவர் ஏகப்பெருமாள் தொண்டைமானாரின் காலத்திலேயே ஆளப்பிறந்தான் பகுதியில் நிர்வாகியாக இருந்துள்ளார்.

அறந்தாங்கி அரசு தொண்டைமானாரின் நிர்வாகத்திற்கு உட்பட்டிருந்த நாராயண மங்கலம் என்ற ஊர் அழிந்து கிடந்தது. அவ்வூரைச் சேர்ந்த சிலர் நீர் நிலைகளைச் சரிசெய்து அந்த ஊரில் விளை நிலங்களை ஏற்படுத்தி ஊரைச் சீரமைத்தனர். இச்செயல் "இறங்கல் மீட்டல்" என்று சிறப்பிக்கப்பட்டது. முன்பு நடந்துவந்த மானியங்கள் நீங்கலாக நாராயணமங்கலம் ஊரின் நான்கு எல்லைகட்கு உட்பட்ட விளைச்சல் முதல் எல்லாவிதமான உரிமைகளிலும் இறங்கல் மீட்டவர்கட்கும் அதிசூரராமத் தொண்டைமானாருக்கும் பாதிப் பாதி உரிமை என்று தீர்மானிக்கப்பட்டுக் கல்வெட்டு வெட்டப்பட்டது (க.ஆ. 234/1930).

## அலைவில் அஞ்சாத தொண்டைமானார்

ஏகப் பெருமாள் தொண்டைமானாரின் மக்களில் ஒருவர். இவர் குறும்பூர் சித்தநாதீசுவரர் கோயிலில் ஒரு பகுதியைத் தம் கொடையாகத் திருப்பணி செய்துள்ளார். அங்குள்ள ஒரு மண்டபத்தில்

**ஸ்வஸ்திஸ்ரீ இத்திரு**
**மாளிகை பண்ணி**
**னான் அலைவில் அஞ்**
**சாத தொண்டைமானார்**
**தன்மம்**

என்ற கல்வெட்டு காணப்படுகிறது (பா92).

## அச்சமறியாத் தேவர் தொண்டைமானார்

'புதுக்கோட்டை மேனுவல்' பக்கம் 721இல் ஏகப் பெருமாள் தொண்டைமானாரின் மகன் அச்சமறியாத் தேவர் என்பவரைக் குறிப்பிடுகிறது. அவரைப் பற்றி வேறு குறிப்புக்கள் எதுவும்

தெரியவில்லை.

அலைவிலஞ்சாதான், அச்சமறியாதான் என்பவை சிறப்பு அடைமொழிகளாக ஏகப்பெருமாள் தொண்டைமானார், பொன்னம்பலநாதத் தொண்டைமானார் முதலிய பலருக்கு வழங்கப் பெற்றுள்ளன.

இவர்கள் அல்லாமல் பெயரளவில் சில அறந்தாங்கி அரசு அரசர்கள் பெயர்கள் அறியப்படுகின்றன அவர்கள்,

1. வளர்த்து வாழ்வித்த பெருமாள் தொண்டைமான்
2. விக்கிரம பாண்டியத் தொண்டைமான்
3. குலசேகரத் தொண்டைமான்
4. மழவல்லப் பெருமாள் தொண்டைமான்
5. தீராவினை தீர்த்தான் தொண்டைமான்
6. தியாகராசர் நரச நாயக்கத் தொண்டைமான்

ஆகியோர் ஆவர். சிலர் தொண்டைமான் அரசு அரசர்களின் மகன்களாக மட்டும் அறியப்படுகின்றனர்.

# வணங்காமுடித் தொண்டைமான்கள்

விசயநகரப் பேரரசு மறைந்து, மதுரை நாயக்கர் மரபும் மறைந்து தமிழக மண்ணில் அந்நியர்கள் காலூன்றிய காலகட்டத்தில் 18ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் 1716 முதல் 1759 வரை ஆவணங்களை வெளியிட்ட அறந்தாங்கித் தொண்டைமான் மரபினர் தங்களை வணங்காமுடி மன்னர்களாக அழைத்துக்கொண்டனர்.

1. அருணாசல வணங்காமுடித் தொண்டைமானார்
2. வணங்காமுடித் தொண்டைமானார்
3. முத்து வணங்காமுடித் தொண்டைமானார்
4. விசைய அருணாசல வணங்காமுடித் தொண்டைமானார்

என நால்வர் அவ்வாறு அழைக்கப் பெற்றவர்கள்.

17,18 ஆம் நூற்றாண்டு கல்வெட்டுக்கள் பொறிக்கும் வழக்கம் குறைந்து செப்புப்பட்டயங்களும், ஓலைப்பட்டயங்களும் தோன்றிய காலமாகும். எனவே இந்த நான்கு மன்னர்களின் செப்பேடுகள் மட்டுமே கிடைத்துள்ளன.

## அருணாசல வணங்காமுடித் தொண்டைமானார்
## அருணாசல சமுத்திரம் கொடை

அறந்தாங்கி அரசு ஆண்டவராய இரகுநாத ஆவுடைத் தொண்டைமானார் அவர்கள் மகன் அருணாசல வணங்காமுடித் தொண்டைமானார் ஆவார். அவர் 12.4.1716 அன்று பல கோத்திரம் பல சூத்திரங்களைச் சேர்ந்த கற்றறிந்த 50 அந்தணர்களுக்கு ஏனாதி என்ற ஊருக்கு 'அருணாசல சமுத்திரம்' என்று பெயரிட்டுப் பூதானமாகக் கொடுத்த செய்தியை ஒரு செப்பேடு விளக்குகிறது.

அருணாசல சமுத்திர அக்கிரகாரம் 50 பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு 50 அந்தணர் குடும்பங்களைத் தொண்டைமானார் அங்குக் குடியேற்றினார். ஏனாதி அஞ்சுரண்டு சீமையில் கொடிவள

நாட்டில் உள்ளதாகக் குறிக்கப்படுகிறது. அஞ்சுரண்டு சீமை என்பது சிவகங்கைப் பகுதியாகும். ஏனா என்ற ஊருடன் ஒச்சகுடி, காட்சி கொடுத்தான் வயல், ராவுத்தன்வயல், பள்ளகுடியேந்தல், கள்ளுக்குஞ்சிவயல், நென்மேலி ஆகிய ஊர்ப்பகுதிகளும் அருணாசல சமுத்திரத்தோடு இணைக்கப்பட்டன.

இந்தச் செப்பேட்டைத் 'தஞ்சாவூர் சிப்பாசாரி நராயணன்' தயாரித்ததாகக் கூறப்பட்டுள்ளது (தொ.செ.16).

## ஏம்பல்வயல்கொடை

அருணாசல வணங்காமுடித் தொண்டைமானார் வெள்ளாம்பத்தில் மிழலைக் கூற்றத்தில் இளங்கோனாட்டில் மஞ்சக்குடி மாகாணத்தில் பெரிய ஏம்பல்வயல், ஆசான்வயல் ஆகிய ஊர்களை இணைத்து அதை 17பங்குகளாகப் பிரித்து 17 அந்தணர் குடும்பத்தைக் குடியேற்றினார். 22.1.1726 அன்று அந்த அக்கிரகாரம் அளித்த செய்தி ஒரு செப்பேட்டில் பொறிக்கப்பட்டது.

முத்துப் பத்தர் மகன் வேலாயுதம் என்பவர் இச் செப்பேட்டை எழுதியுள்ளார் (தொ.செ. 17).

## கீழ்ப்பாப்பானூர்க் கொடை

அருணாசல வணங்காமுடித் தொண்டைமானார் அவர்கள் 16.9.1728 அன்று திருப்பனந்தாள் காசிமடத் தலைவர் தவத்திரு காசிவாசி தில்லைநாயகத் தம்பிரான் (1720-1756) அவர்கள் அருளாட்சிக் காலத்தில் காசியில் உள்ள குமரசாமி மடத்தில் அன்னதானம் செய்வதற்காக வெள்ளாம்பத்து மிழலை நாட்டில் வெள்ளூர் மாகாணத்தில் உள்ள கீழ்ப் பாப்பானூர் என்ற ஊரைச் சர்வமானியமாக அளித்ததை இச்செப்பேடு கூறுகிறது.

பிராமண போசனம், மயேசுரபூசை, நந்தவனம் இவைகளுக்காகக் கொடை கொடுத்ததாகக் கூறப்படுகிறது. காசிமடத்தின் சீடர் பரம்பரையாகக் கீழ்ப்பாப்பானூரை அனுபவித்து வரலாம் என்று கூறப்பட்டுள்ளது (தொ.செ. 18).

## மணமேல்குடிக் கொடை

அருணாசல வணங்காமுடித் தொண்டைமானார் அவர்கள் 26.10.1731 அன்று திருவாவடுதுறை ஆதீனத் தலைவருக்குத்

திருமடத்தில் மயேசுவர பூசைக்காக மணமேல்குடி என்ற ஊரைச் சர்வமானியமாக அளித்ததை இச்செப்பேடு கூறுகிறது. கொடையைப் பெற்றுக் கொண்டவர் திருவாவடுதுறை ஆதீனத்தின் 12ஆம் பட்டம் ஏற்று அருளாட்சி நடத்திய தவத்திரு திருச்சிற்றம்பல தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் அவர்கள் ஆவார்கள்.

இச்செப்பேட்டுச் செய்தியை எழுதியவர் அட்டவணை வீரப்பன் என்பவர். இச்செப்பேட்டை எழுதித் தயாரித்தவர் ஆவுடையார் கோயிலில் இருக்கும் மகிழ்ராவணம் ஆசாரி என்பவராவார்.

தன் ஆளுகைப் பகுதிக்கு அப்பால் உள்ள திருப்பனந்தாள், திருவாவடுதுறை ஆதீனங்களோடு தொண்டைமானார் அவர்கள் கொண்டிருந்த தொடர்பு சிறப்புமிக்கதாகும் (தொ.செ. 19).

### வணங்காமுடித் தொண்டைமானார்

### பெருவயல் செப்பேடு

அறந்தாங்கி அரசு அருணாசல வணங்காமுடித் தொண்டைமானார் அவர்கள் மகன் வணங்காமுடித் தொண்டைமானார் சேதுபதி அரசர்களின் சேதுநாட்டில் செம்பிநாட்டுப் பகுதியில் ஆதிசேதுவான நவபாஷாணக் கரையில் உள்ள பெருவயல் வள்ளி தெய்வானை சமேத சிவசுப்பிரமணியர் கோயிலுக்கும், பெருவயலில் உள்ள மகிசாசுரமர்த்தனி பூசித்த பார்வதி பரமேசுவரன் கோயிலுக்கும் பூசை, அபிடேகம், நைவேத்தியம், திருமாலை, திருவிளக்கு மாசித் திருவிழா ஆகிய பல்வேறு கட்டளைகளுக்காகச் சித்தகூர், அவத்தினிக்கோட்டை ஆகிய ஊர்களைக் கொடையாகக் கொடுத்ததை இச்செப்பேடு கூறுகிறது.

இந்தக் கொடை தஞ்சை நகராதிபதி ஸ்ரீமத் மகாராசா சாயபு அவர்கள் புண்ணியமாகவும், தன் தாய் வர்க்கம், தந்தை வர்க்கம் ஆகியோரின் புண்ணியத்திற்காகவும் கொடுக்கப்பட்டதாகக் கூறப்பட்டுள்ளது. இக்கொடை கொடுக்கப்பட்ட 1739இல் தஞ்சை மராட்டிய அரசராக வீற்றிருந்தவர் பிரதாபசிங் மகாராசா (1739-1763) ஆவார்.

இச்செப்பேட்டில் சேதுபதி, மதுரை நாயக்கர் புகழ்மொழிகளும் கூறப்பட்டுள்ளன. இக்கொடை கவுதம கோத்திரம் மங்களேசுவரக் குருக்கள் வசம் கொடுக்கப்பட்டுள்ளது.

இம்முருகன் கோயிலைத் திருப்பணி செய்து கட்டியவர் சேதுபதியின் தளபதி வயிரவன் சேர்வை என்பவர். இராமபிரான் சீதையைச் சிறைமீட்கச் சேதுபந்தனம் கட்டுகையில் இம்முருகப் பெருமானை வணங்கியே கட்டினார் என்பது இப்பகுதி மக்களின் நம்பிக்கையாகும். தஞ்சை மராட்டியர், சேதுபதிமன்னர், அறந்தாங்கித் தொண்டைமானார் ஆகியோரின் நல்லுறவுக்கு இச் செப்பேடு சிறந்த எடுத்துக் காட்டாகும் (தொ.செ. 23).

## முத்து வணங்காமுடித் தொண்டைமானார்

சிதம்பர வணங்காமுடித் தொண்டைமானார் மகன் முத்து வணங்காமுடித் தொண்டைமானார் ஆவார். இவர் தந்தையாரைச் சிதம்பரத் தொண்டைமானார் என்றும் இவரை முத்துத் தொண்டைமானார் என்றும் அழைப்பர். இவர் செப்பேடுகள் 1737-1741 கால எல்லையில் கிடைக்கின்றன.

## திருப்பெருந்துறைத் திருப்பணி

அறந்தாங்கி அரசு தொண்டைமானார்கள் அனைவரும் திருப்பெருந்துறை ஆளுடை நாயனார் மீது பெரும் பக்தி கொண்டவர்கள். 'ஆளுடையார்' என்ற சொல்லே 'ஆவுடையார்' என்று மருவி இன்று ஆவுடையார் கோயில் என்று அழைக்கப்படுகிறது. தொண்டைமானார்கள் தங்களை 'ஆவுடைய நாயனார் ஸ்ரீபாதபக்தர்' என்றே அழைத்துக் கொண்டனர்.

அச்சுதப்பத் தொண்டைமானார் காலத்தில் திருப்பெருந்துறையில் ஒரு மண்டபம் கட்டும் பணி தொடங்கப்பட்டது. என்ன காரணத்தினாலோ அந்த மண்டபம் கட்டி முடிக்கப் பெறாமல் குறைப் பணியாகவே நின்றுவிட்டது. எனினும் அதைக் கட்டத் தொடங்கியவரான அச்சுதப்பத் தொண்டைமானார் பெயரில் அம்மண்டபம் 'அச்சுத பூபால மண்டபம் ' என்றே அழைக்கப்பட்டது.

முத்து வணங்காமுடித் தொண்டைமானார் அவர்கள் அச்சுதபூபால மண்டபத்தின் குறைப்பணியைத் தக்க ஆட்களைக்

கொண்டு சிறப்பாகக் கட்டி முடித்தார் என்று திருப்பெருந்துறைக் கல்வெட்டு கூறுகிறது. பிங்கள வருடம் ஆனிமாதம் 23ஆம் நாள் (1737) அப்பணி நிறைவுற்றது. அம்மண்டபத்தைத் தொண்டைமானார் சார்பில் அவருடைய பிரதானி தனமுத்துவீரப்பிள்ளை என்பவர் முன்னின்று கட்டி முடித்தார்.

சங்கிலி, பாவுகல், தெற்குப் பெரிய படங்கு, இராசகோபால சுவாமி கூடம், வாசல், முத்துவிநாயகர் கோயில், தூண்கள், முன் மண்டபப் பாவுகல் போன்ற பல வேலைகள் சிறப்பாக நடைபெற்றன. திருப்பணி மணியமாகப்பணியாற்றியவர்கள் சிதம்பரம் பிள்ளை, ஆண்டியப்ப முத்துப்பிள்ளை என்பவர்கள். கணக்கராகப் பணியாற்றியவர்கள் சதாசிவ அப்பன், இராமலிங்கம் பிள்ளை ஆகியோர். திருப்பணி வேலைகளை மேற்கொண்ட ஆசாரிகள் வயித்தி ஆசாரி, அருணாசல ஆசாரி என்பவர்கள். கொத்தனார்கள் கற்பூரக் கொத்தன், சிதம்பரக் கொத்தன் ஆகியோர்.

அறந்தாங்கி அரசு தொண்டைமானார் பிரதானியுடன் மணியம், கணக்கர், ஆசாரி, கொத்தனார் முதலிய எல்லோருடைய பெயர்களையும் கல்வெட்டில் பொறித்திருப்பது அரிய செய்தியாகும். இன்றும் திருப்பெருந்துறைக் கோயிலில் சிறந்த முறையில் பயன்பாட்டில் உள்ளது குறிப்பிடத்தக்கதாகும் (தொ.செ. 20, 21).

## பெருவயல் கொடை

அறந்தாங்கி அரசுச் சிதம்பர வணங்காமுடித் தொண்டைமானார் மகன் முத்துவணங்காமுடித் தொண்டைமானார் பெருவயல் முருகன் கோயிலுக்குப் பூசை, அபிடேகம், நைவைத்தியம், திருமாலை, திருவிளக்குக் கட்டளைகட்காக ஒக்கூர் மாகாணத்தில் வரி குடியூர், சிந்தாமணி ஏந்தல் ஆகிய ஊர்களின் பங்கு வடவாத்தி பிராமணர்கட்குப் பாதிபோக மீதிப் பாதிப்பங்கைக் கவுதம கோத்திரம் மங்களேசுவரக் குருக்கள் வசம் கொடையாகக் கொடுத்ததை இச் செப்பேடு கூறுகிறது. அமாவாசை புண்ணியகாலத்தில் இக்கொடை கொடுக்கப்பட்டுள்ளது.

தன் தாய் வர்க்கம், தன் தந்தையார் வர்க்கம் ஆகியோர் நலத்தின் பொருட்டும், தஞ்சை மராட்டிய மன்னர் பிரதாபசிங்

மகாராசா (1738-1763) அவர்களின் நலத்தின் பொருட்டும் இக்கொடை வழங்கப்பட்டது. அறந்தாங்கித் தொண்டைமான்கள் சேதுபதி மன்னர் புகழ்மொழிகள் ஆகியவை பல செப்பேட்டில் பொறிக்கப்பட்டுள்ளன (தொ.செ. 24).

## நாட்டாணிக் கொடை

முத்துவணங்காமுடித் தொண்டைமானார் அவர்கள் 17.9.1740 அன்று திருவாரூர்த் தியாகராசப் பெருமான் திருக்கோயிலுக்கு அபிடேகம், நைவேத்தியம் முதலிய எல்லாக் கட்டளைகட்கும் பரதேசி முத்திரை மாசிலாமணித் தம்பிரான் வசம் ஆலத்தூர் மாகாணத்தில் உள்ள நாட்டாணி என்ற ஊரைச் சர்வ மானியமாக அளித்ததை இச்செப்பேடு கூறுகிறது. இவ்வூர்களின் இறை, வரி, ஊழியம் முதலிய அனைத்தும் கோயிலுக்குக் கொடையாக அளிக்கப்பட்டன.

மண்ணும் விண்ணும், கல்லும் காவிரியும் உள்ள மட்டும் இக்கொடை நின்று நிலவ வேண்டும் என்று கூறப்பட்டுள்ளது. தன் பரம்பரையினர் இக்கொடையைக் காப்பாற்ற வேண்டும் என்றும் அரசர் கூறியுள்ளார். இச் செப்பேட்டைத் தயாரித்தவர் 'சோமாஸ்கந்த ஆசாரி' என்பவர். சோமாஸ்கந்தர் என்பது திருவாரூர் தியாகராசர் பெயர். இப்பெயரைத் திருவாரூர்ச் செப்பேடு ஒன்று "இளமுருகு உடன் உறையும் அம்மையப்பர்" என்று கூறுகிறது. சிவன், பார்வதி ஆகியோர் இடையில் முருகப்பெருமான் எழுந்தருளியிருக்கும் திருவடிவமே சோமாஸ்கந்தர் வடிவமாகும். சென்னை எழும்பூர் அருங்காட்சியகத்தில் இச்செப்பேடு உள்ளது (தொ.செ. 20).

## அழுஞ்சியேந்தல் கொடை

அறந்தாங்கி அரசு முத்து வணங்காமுடித் தொண்டைமானார் அவர்கள் திருவாவடுதுறை ஆதீனகர்த்தர் அவர்கள் வசம் மடத்தின் மயேசுவர பூசைக்காக (அடியார்கட்கு அன்னமிட) வெள்ளாம்பத்தில் உள்ள அழுஞ்சியேந்தல் என்ற ஊரைக் கொடையாகக் கொடுத்ததை இச் செப்பேடு கூறுகிறது. அட்டவணை சிதம்பரநாதன் என்பவர் செப்பேட்டின் இறுதியில் கையொப்பம் இட்டுள்ளார்.

இக்கொடையைப் பெற்றவர் திருவாவடுதுறை ஆதீனகர்த்தர் 12ஆவது பட்டம் தவத்திரு திருச்சிற்றம்பல தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் அவர்கள் ஆவார்கள் (1730-1770). இச் செப்பேடு இன்றும் திருவாவடுதுறை மடத்தில் பாதுகாக்கப்படுகிறது. திருவாவடுதுறை ஆதீனத்தில் உள்ள எழுபதிற்கும் மேற்பட்ட செப்பேடுகளை முதல் முறையாகத் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகக் கல்வெட்டு-தொல்லியல் துறைதான் படி எடுத்தது. அங்கு இச்செப்பேட்டிற்கு இரண்டு படிகள் உள்ளன. இரண்டு செப்பேடுகளிலும் சில எல்லைகளின் பெயர்கள் வேறுபடுகின்றன. எல்லைகள் தவறாக எழுதப்பட்டதால், செப்பேடு மீண்டும் எழுதப்பட்டுள்ளது. ஒரு செப்பேடு 46 வரிகளையும், மற்றொரு செப்பேடு 36 வரிகளையும் உடையன; அளவில் இரண்டும் வேறுபட்டுள்ளன (தொ.செ. 21).

## விசைய அருணாசல வணங்காமுடித் தொண்டைமானார்

ஆண்டவராய வணங்காமுடித் தொண்டைமானார் மகன் விசைய அருணாசல வணங்காமுடித் தொண்டைமானார் 27.10.1759 அன்று தன் நிர்வாகத்திற்கு உட்பட்ட இரண்டு ஊர்களை ரோமன் கத்தோலிக்க மதத்தைச் சேர்ந்த ஒருவருக்கு விற்பனைசெய்த விபரம் ஒரு செப்பேடாக எழுதப்பட்டுள்ளது.

தொண்டைமானார் தன் ஆட்சிக்கு உட்பட்ட வீரைவள நாட்டில் உள்ள பண்ணைவயல் உட்கிடை ஏந்தலான பண்ணைவயலையும், பூவாணம் என்ற ஊரையும் மதுரைச் சக்கரம் இரண்டாயிரம் பொன்னுக்கு வைகை நாட்டில் உள்ள கலங்காதான் கோட்டையில் இருக்கும் இராயப்பதேவர் மகன் அந்தோணி முத்துத் தேவருக்கு விற்பனை செய்ததை இச்செப்பேடு கூறுகிறது.

இதுவே அறந்தாங்கித் தொண்டைமானார்களின் கடைசி ஆவணமாகும். கணக்கற்ற கோயில் கொடை கொடுத்து, கோயில்கள் கட்டி, திருமடங்கட்கும், திருவாரூர்க் கோயிலுக்கும், காசியிலும் தங்கள் பெயரைக் கொடையாய் நிறுவிய அறந்தாங்கித் தொண்டைமானார் குடும்பம் 1759இல் ஊர்களைக் கிறித்தவர்கட்கு விற்கும் அளவிற்கு வந்தது காலத்தின் கோலமாகும் (தொ.செ. 22).

# ஆட்சிமுறையும் அரசியலும்

## தனியரசர்கள்

அறந்தாங்கி அரசு தொண்டைமானார் பெயர் பொறித்த 50 கல்வெட்டுக்கள் இதுவரை கண்டறியப்பட்டுள்ளன. பன்னிரண்டு கல்வெட்டுக்களில் மட்டும் பாண்டியர், விசயநகர அரசர் மேலாண்மை அரசர்களாகக் குறிக்கப்பட்டிருக்கின்றனர். ஏனைய கல்வெட்டுக்கள் எல்லாம் தொண்டைமானார் பெயரிலேயே 'அறந்தாங்கி அரசு' என்ற பெயரிலேயே பொறிக்கப்பட்டுள்ளன. இது புதுக்கோட்டைப் பகுதியில் உள்ள வேறு அரசுகளுக்கில்லாத தனிச்சிறப்பாகும்.

பெயருக்கு முன் உடையார், உடையவர் என்ற அடைமொழிகள் காணப்படுகின்றன. இவர்களின் 'அருளிச் செயல்படிக்கு'க் கல்வெட்டுக்கள் பொறிக்கப்பட்டுள்ளன. இவர்கள் படையெடுத்து வேறுபகுதிகளை வெல்லவில்லை என்றாலும் படை, தாணையம் வைத்திருந்ததாக ஆவுடையார் கோயில் கல்வெட்டு கூறுகிறது. சில ஊர்களுக்கு வரி நிர்ணயம் செய்துள்ளனர்; ஓர் ஊர்போல மற்ற ஊருக்கு வரியைச் சமப்படுத்தியுள்ளனர்; வரியைக் குறைத்துள்ளனர்; வரி நீக்கம் செய்துள்ளனர்.

ஆட்சியாண்டு எவருக்கும் கூறப்பெறவில்லை. பணம், பொன், கலியுகராமன் பணம், மின்னல்பொன் என்பன வழக்கில் இருந்தாலும் தனி நாணயம் வெளியிட்டதாகக் குறிப்புக்கள் எதுவும் இல்லை. இவர்கள் தேவிமார்கள் (அரசியர்) பற்றி எங்கும் குறிக்கப் பெறவில்லை. இருப்பினும் மேலே கண்ட குறிப்புக்கள் மூலம் பேரரசுக்குக் கப்பம் செலுத்தும் சிற்றரசர்களாக இருப்பினும் சமயம் வாய்க்கும் போதெல்லாம் தனி நிர்வாகம் செய்துள்ளனர். பிள்ளைவயல் கல்வெட்டு "மதுரை கொண்ட இராயருக்கு இந்த தேசத்துக்கு உடையார் ஏகப்பெருமாள் தொண்டைமானார் கப்பம்"

செலுத்தியதாகக் கூறப்பட்டுள்ளது. "இந்த தேசத்துக்கு உடையார்" என்றே அவர் குறிக்கப்பெறுகிறார் (க.ஆ. 211/1942).

தொண்டைமானார் அரசர்களின் பெயர்களால் கோயில் கட்டளைகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன (தொண்டைமானார் சந்தி, அலைவில் அஞ்சாதான் சந்தி, பொன்னம்பல நாதன் சந்தி, ஏகப்பெருமாள் சந்தி), ஏகப்பெருமாள் நல்லூர், அருணாசல சமுத்திரம், பொன்னம்பல நாத ஊர் என்று ஊர்ப்பெயர்கள் மாற்றப்பட்டுள்ளன.

### தனிச்சிறப்பு

இயற்பெயரோடு "ஆர்" விகுதி சேர்த்துக் கூறுவது சிறப்புக்கும் பெருமைக்கும் உரியதாகும். 'அவ்வை' என்பதை 'அவ்வையார்' என்றும், 'பிசிராந்தை' என்பதைப் 'பிசிராந்தையார்' என்றும் குறிப்பது சிறப்புக் கருதியாகும். அதுபோல் தொண்டைமான்கள் பெயரைத் 'தொண்டைமான்' என்று குறிக்காமல் "தொண்டைமானார்" என்று குறிப்பது அவர்களின் தனிச்சிறப்புக் கருதியேயாகும். "பிச்சர் தொண்டைமானார்", "தேவராயத் தொண்டைமானார்", "குலசேகரத் தொண்டைமானார்" என்றே அவர்கள் பெயர்கள் குறிக்கப் பெறுவது வழக்கம்.

தொன்மையானதொரு தனிப்பாடல் அறந்தாங்கித் தொண்டைமானாரது பெருமையை விளக்குகிறது. அறந்தாங்கித் தொண்டைமானார்கள் ஆத்திப்பூ மாலையணிந்த சோழர்கட்கும், வேப்பம்பூ மாலையணிந்த பாண்டியர்கட்கும், பனம்பூமாலையணிந்த சேரர்கட்கும் மிகப்பெரிய நிழல்போன்று இருப்பவர்கள். மூவேந்தர்களைத் தாங்கி நிழல் கொடுக்கும் அறந்தாங்கித் தொண்டைமான்கள் கற்றறிந்த கவிவாணராகிய புலவர்களைத் தாங்குபவர்கள். அதுமட்டுமல்ல உலகையே தாங்கும் திறம் படைத்தவர்கள்; அவர்கள் தான் அறத்தைத் தாங்கியதால் பெயர்பெற்ற அறந்தாங்கித் தொண்டைமான் அரசு ஆவார்கள் என்று விளக்குகிறது அத் தனிப்பாடல்.

**வெற்றிபுனை தாதகிக்கும் வேம்புக்கும் பெண்ணைக்கும்**
**கற்றும் பெருநிழலாய்த் தோன்றுமே – கற்றோர்**
**திறம்தாங்கும் தாங்கும் செகமுழுதும் தாங்கும்**
**அறந்தாங்கும் தொண்டை அரசு**

தமிழறிஞர் மு.இராகவையங்கார் தாம் தொகுத்த பெருந்தொகையில் இப்பாடலைப் பதிப்பித்துள்ளார். இப்பாடலைப் பதிப்பித்த அறிஞர் மு. இராகவையங்கார் இப்பாடல் தொண்டைமானார் மரபுக்கோ அல்லது அறந்தாங்கித் தொண்டைமானார் தம் மரபுக்கோ உரியது என்று எழுதவில்லை (பெருந்தொகை 1183).

*கூட்டாட்சி*

அறந்தாங்கி அரசில் சகோதரர்கள் சேர்ந்தும், தந்தையும் மகனும் சேர்ந்தும் நிர்வாகம் செய்துள்ளனர். ஆளுடைய நாயினார் தொண்டைமானார் சிலருக்குக் குடிக்காடு காணியாட்சி கொடுத்த ஆளப்பிறந்தான் கல்வெட்டில்

> மாத்தால் பணம் பத்தாகக் கொள்ளக்கடவோமாகவும்
> ஆளப்பிறந்தான் ஊரார்க்குக் கல்வெட்டிக் குடுத்தோம்
> ஆளுடை நாயினர் தொண்டைமானாரும் தம்பிமாரும்
> அருளிச் செய்தபடிக்கு திருச்சிற்றம்பல முடையார்
> காலிங்கராயர் எழுத்து

என்று கூறப்பட்டுள்ளது (க.ஆ. 237/1930).

அறந்தாங்கிப் பற்று நாட்டைச் சேர்ந்த ஏழு ஊர்களுக்கு 40 பணவரியை 20 பணவரியாகக் கொடுத்த அழகிய மணவாளப் பெருமாளின் ஆளப்பிறந்தான் கல்வெட்டில்

> ஒரு மா நிலத்துக்கு 40 பணம் இறுத்துப் போதுகையில்
> இவர்களுக்கு நிச்சயித்தபடி அறந்தாங்கி அற்ற மரியாதி
> ஒன்று பாதியாக மாத்தால் 20 பணமாகக் கொள்ளக்
> கடவோம் என்று கல்வெட்டிக் குடுத்தோம் நாமும்
> நம்முடைய தம்பிமாரும் இப்படிக்கு இவர்கள் அருளிச்
> செய்தபடிக்கு நாட்டுக் கணக்கு முதலியாண்டார் எழுத்து

என்று கூறப்படுகிறது.

பழங்கரையில் உள்ள பாலையூர் நாட்டார்க்கு இறைமுறைமை செய்த கல்வெட்டில் பிச்சர் தொண்டைமானாரும் அவர் மகன் சூரிய தேவர் குலசேகரத் தொண்டைமானாரும் சேர்ந்து ஆணையிட்டுள்ளனர். கல்வெட்டில்

> இராசராச வளநாட்டுப் பாலையூர் நாட்டு நாடாய் இசைந்த நாட்டவர்க்கு பிச்சர் தொண்டைமானார் ஆன உடையார் அருளிச் செய்தபடி மகனார் சூரியதேவரான குலசேகரத் தொண்டைமானார் உள்ளிட்டாரோம் நாட்டார்க்கு இறைமுறைமை நிச்சயித்தபடி

என்று கூறப்படுகிறது (பு.க. 784).

### மக்களுக்குக் காணியாட்சி அளித்தல்

தமிழக அரசர்கள் அடுத்து அரசுப் பொறுப்பேற்கவிருக்கும் தன் ஆண் மக்களில் ஒருவரைத் தம் காலத்திலேயே இளவரசனாக நியமிப்பது வழக்கம். முதலாம் இராசராசன் (985-1014) 1012ஆம் ஆண்டில் இராசேந்திர சோழனை இளவரசனாக நியமித்தார் என்பது வரலாறு. இளவரசுக் காலத்திலேயே தந்தை பெயருடன் தன்பெயரையும் இணைத்து இராசேந்திர சோழன் கல்வெட்டுக்களைப் பொறித்துக் கொண்டார்.

அறந்தாங்கி அரசு தொண்டைமானார் தம் மக்களுக்குத் தனிக்காணியாட்சி நிலமும், வீடும் கொடுத்துள்ளனர் என்பது பல கல்வெட்டுக்களால் தெரியவருகின்றது.

அழகிய மணவாளப் பெருமாள் தொண்டைமானார் தன் மக்கள் இலக்கணத் தண்ணாயக்கத் தொண்டைமானாருக்கும், மெய்நின்ற பெருமாள் அதிசூரராமத் தொண்டைமானார் அவர்கட்கு 1441-1453க்கு இடைப்பட்ட காலத்திலும், ஏகப்பெருமாள் தொண்டைமானார் தன் மக்கள் சிதம்பரநாதன், தீராவினை தீர்த்தானுக்கும், ஆவுடை நயினார்க்கு 1488-1499க்கு இடைப்பட்ட காலத்திலும், பொன்னம்பலநாதத் தொண்டைமானார் தன் மகன் வரவினோதத் தொண்டைமானார்க்கு 1536ஆம் ஆண்டும் காணியாட்சி கொடுத்ததாகக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

சில காணியாட்சியாகத் தொண்டைமானாரின் சொந்த நிலம் கொடுக்கப்பட்டுள்ளது. சில காணியாட்சிகள் நிலம் விலைக்குவாங்கித் தரப்பட்டுள்ளன. வளவர் மாணிக்கத்தில் வேளாளர் நிலங்கள் விலைக்குப் பெறப்பட்டு மக்களுக்கு அழகப்பெருமாள் தொண்டைமானார் அளித்துள்ளார். சில

குறிப்பிட்ட நிலங்களில் மட்டும் விளைச்சலில் ஒருமா நிலத்துக்கு 5 மரக்கால் உள்ளூர்க் கோயிலுக்குக் கொடுக்குமாறு கூறப்பட்டுள்ளது.

இக்காணியாட்சிக் கொடைகள் தம்முடைய மக்களுக்குப் பயிற்சியளிக்கக் கொடுக்கப்பட்டன என்பது தெளிவு. "நம்முடைய ஊரான பாலையூர் நாட்டுச் செருவடக்கிமங்கலம்" "மாதேவி மங்கலம்" "என் காணியான இறங்கல் மீட்டான்" "நம்முடைய பண்ணைப்பற்று ஆன பெரும்பாலைக்குடி" "நம்முடைய காணியான மறித்துலகங் காத்தான்" "மிழலைக் கூற்றத்து மீபாம்பாற்றுநாட்டு வாளய மாணிக்கப்பற்று பெரிய கோட்டைப் புரவில் நம்முடைய காணியான மேலைச் செங்கரை" "நம்முடைய ஊரான பருத்திநல்லூர்" "நம்முடைய நிலமான கொற்றிப் புதுவயல்" எனப் பல ஊர்களும், நிலங்களும் தொண்டைமானாருக்கு உரியதாக உள்ளன. இவற்றில் சில இடங்களில் மக்கள் காணி பெற்றுள்ளனர். மற்ற இடங்களில் விலைக்கு வாங்கி மக்களுக்குக் காணியாட்சி உரிமை வழங்கப்பட்டுள்ளது.

## மெய்க்கீர்த்தி

தொடக்க கால அறந்தாங்கி அரசு தொண்டைமான்களுக்குச் சிறப்புடைய புகழ்மொழிகளோ, மெய்க்கீர்த்திகளோ எதுவும் கூறப்படவில்லை. ஏகாம்பரத் தொண்டைமானார் கல்வெட்டுக்களில் தான் முதலில் "அலைவில் அஞ்சாதான்" "அச்சம்அறியாதான்" என்ற தொடர்கள் காணப்படுகின்றன. இதை அவர் மகன் பொன்னம்பல நாதத் தொண்டைமானாரின் கல்வெட்டுக்களிலும் காணுகின்றோம்.

தொடர்ந்து "அடியார் வேளைக்காரன்" "ஆட்டுக்கு ஆனை வழங்கும் பெருமாள்" "ஏழு நாளையில் ஈழந்திறை கொண்டவன்" "முகிலின் கீழ்திரியும் இளவன்னியர் மீசுர கண்டன்" "வழுதியிடுகழலான்" "வளவனிடு கழலான்" "சேரன் கவிபாடச் செந்தமிழ்கொண்ட பெருமாள்" என்ற தொடர்களாலும் கல்வெட்டு, செப்பேடுகளில் அறந்தாங்கித் தொண்டைமானார்கள் அழைக்கப்பட்டனர்.

இவைகள் எல்லாவற்றையும் உட்கொண்டும், வேறு பல புகழ்மொழிகளைச் சேர்த்தும் அறந்தாங்கித் தொண்டைமான்

மரபின் இறுதி ஆவணமான விசைய அருணாசல வணங்காமுடித் தொண்டைமானாரின் பண்ணைவயல் செப்பேட்டில் நீண்ட ஆசிரியப்பா வடிவில் மெய்க்கீர்த்தி அமைந்துள்ளதைக் காணலாம். அப்பாடல்,

நாளும் புன்னகை நயந்தருள் புதல்வன்
திரையன் தொண்டைமான் எனப்பெயர் சிறந்தோன்
பாலாறு உடைய பாக்கிய சம்பன்னன்
கம்பா நதிக்கருள் காவலன் ஆனோன்
பொன்முகரி ஆறு புரந்தருள் துரந்தரன்
இந்திரன் ஏழடி எதிர்கொளப் பெற்றோன்
ஆவுடை நாதர் அனுக்கிரகம் பெற்றோன்
பழம்பதி நாதர் பக்தி யுடையோன்
மலையாந் தவமுனி வாய்மை உகந்தோன்
மலை கலங்கினும் மனங்கலங் காதான்
ஆத்தியும் புத்தும் அசையினும் அசையான்
மழவனை வென்றோன் தலைமலை கண்டோன்
சங்கு சக்கரம் தன்கையில் தரித்தோன்
ஆறையம் பதியான் அடையலர் சோலை
தண்டக நாடெனும் தொண்டைவள நாடன்
மிழலைநாட்டு அதிபன் வேத சிராமலை
கச்சியம் பதியான் கருணா கடாட்சன்
மல்லை மயிலை வண்டை நகராதிபன்
கோரப் பரிசை கொண்டருள் நகுலன்
மூவர் பாடல் முத்துமொழி கொண்டோன்
ஆழ்வார் பாடல் அனுக்கிரகம் பெற்றோன்
கம்பன் தமிழுக்குச் செம்பொன் அளித்தோன்
ஒட்டக் கூத்தன் உயர்தமிழ் புனைந்தோன்
அவ்வை பாடல் அருந்தமிழ் புனைந்தோன்
ஆட்டுக்கு ஆனை அளித்தருள் தியாகி
பாட்டுக்கு ஆனை பரிவுடன் கொடுத்தோன்
ஆதொண்டை மாலை அணிந்திடு புயத்தோன்
ஆறுகால் பீடத்து அபிஷேகம் பெற்றோன்
புலிக்கொடி மேருவில் பொறித்தருள் புகழோன்
மும்முரசு உடைய முன்றில் பெருமான்
விளங்கிடு காளத்தி வெற்பினுக்கு அரசன்

நலம்பெறு சோழ ராசாவின் மரபினன்
ராச சூரிய நரபதி தலைவன்
புறாவினுக்காக துலைபுகு பிரபலன்
கலிங்கத் திறைகொண்டு பரணி புனைந்தோன்
கிடாரத்து அரசன் தெய்விதம் அளித்தோன்
பிரதாப ருத்திரன் பெரும்வலி அழித்தோன்
சம்பா சூரனைத் தகர்த்திடு பெலவான்
சேமனை வென்று தவண்டை பறித்தோன்
ரிஷப சங்கடாய் மிகவிருது உடையோன்
சத்திய வாய்மை தவறாத அரிச்சந்திரன்
சத்த சமுத்திராதிபதி ஆகிய சதுரன்
சூரிய குலத்தில் தோன்றிய சுமுகன்
துலங்க நீள்முடி அரசர்தன் குருசில்

என்பதாகும்.

"நாககன்னிகை வங்கிசோர்ப்பவன்" "காஞ்சிபுர புரவராதீசுவரன்" "கலிங்கம் திறைகொண்ட கருணாகரன்" போன்ற தொடர்களும் சில ஆவணங்களில் காணப்படுகின்றன.

## தொண்டைமண்டலத் தொடர்பு

'தொண்டைமானார்' என்ற பெயரே தொண்டைமண்டலத் தொடர்பைக் காட்டினாலும் இன்னும் பல தொடர்களில் அதனை வற்புறுத்திக் கூறுகின்றனர். தொண்டைமண்டலச் சங்க கால மன்னன் "தொண்டைமான் இளந்திரையன்" என்ற பெயரே இவர்கட்குக் கூறப்படுகிறது. பாலாறு, கம்பாநதி, பொன்முகரி (கண்ணப்பன் தொடர்புடைய ஆறு), காளத்திமலை, காஞ்சிபுரம், தொண்டைவளநாடு, ஆதொண்டை மாலை ஆகியனவும் கூறப்படுகின்றன.

முதற்குலோத்துங்கன் படைத்தளபதி கருணாகரத் தொண்டைமான் தங்கள் முன்னோன் என்று கூறி, கலிங்கநாட்டை வென்ற வெற்றிக்கும் கலிங்கத்துப் பரணி இலக்கியம் பெற்றதற்கும் உரிமை கொண்டாடுகின்றனர். தொண்டைமான் இளந்திரையன் சோழமன்னனுக்கு நாக கன்னிகையிடம் பிறந்தவன் என்பது இலக்கியச் செய்தி. அறந்தாங்கித் தொண்டைமானார்களும் தங்களை நாககன்னிகை வழிவந்தவர்கள் என்றும், தங்கள் குலம் சூரிய குலம் என்றும் கூறிக்கொள்கின்றனர்.

எல்லாவற்றிற்கும் மேலாகத் தங்கள் ஆட்சிப் பகுதியில் காஞ்சிபுரம் என்ற ஊரை ஏற்படுத்தி, ஏகாம்பரநாதரையும் அங்கு எழுந்தருளச் செய்துள்ளனர். அறந்தாங்கித் தொண்டைமானாரின் முதல் உரிமைப்பகுதியாகிய பாலையூர் நாட்டவர் அக்கோயிலுக்குக் கொடை கொடுத்துள்ளனர். இச்செய்தி

1. சுபமஸ்து சகாத்தம் 1440ன் மேற்செ
2. ல்லாநின்ற பார்த்திப வருஷம் ஆவணிமாதம்
3. 22தேதி வடவெள்ளாறான சு
4. ந்தர பாண்டிய வளநாட்டு
5. இளங் கோனாட்டுக் காஞ்சி
6. மாநகர் தம்பிரானார் ஏகாம்பர நாதற்கு
7. ம் மேற்படியூர் வினாயகன் கற்பகப்
8. பிள்ளையார்க்கும் இராசராசவளநாட்டு
9. பாலையூர் நாட்டவரோம் தன்மசாதனம்
10. பண்ணிக் குடுத்தபடி

என்ற குளவாய்ப்பட்டிக் கல்வெட்டால் தெரியவருகிறது. ஏகப்பெருமாள் தொண்டைமானார் பெயரே ஏகாம்பரநாதர் பெயரோடு தொடர்புடையதுதான்.

1654இல் எழுதப்பட்ட சேதுபதியரசரின் கணக்கன் வயல் செப்பேட்டில் ஏகாம்பரத் தொண்டைமானார் என்பவர் குறிக்கப்பெறுகிறார். அறந்தாங்கித் தொண்டைமான்கள் பக்திபூண்டு பல திருப்பணிகள் செய்து கொடையளித்துப் போற்றிய திருப்பெருந்துறையில் கோயில் நிருவாகியாக இருந்தவர் ஒருவருடைய பெயர் நயினார் அடியார் ஏகாம்பரம் பிறைசூடும் பெருமாள் என்பதாகும்.

அறந்தாங்கித் தொண்டைமானார் மெய்க்கீர்த்திகளில் தொண்டைமண்டலத் தொடர்பு மிகுதியாகக் கூறப்பட்டுள்ளது.

தொண்டைமண்டல பரிபாலனன்

மல்லை மயிலை கச்சி ஆறையம்பதியான்

பாலாறுடைய பாக்கிய சம்பன்னன்

ஆதொண்டை மாலை அன்புடன் புனைந்தோன்

திரையன் தொண்டைமான் எனப்பெயர் சிறந்தோன்

கம்பா நதிக்கருள் காவலன் ஆனோன்

பொன்முகரி ஆறு புரந்தருள் துரந்தரன்

தண்டக நாடெனும் தொண்டைவள நாடன்

கச்சியம் பதியான் கருணா கடாட்சன்

விளங்கிடும் காளத்தி வெற்பினுக்கு அரசன்

## சோழர் மரபினர்?

அறந்தாங்கித் தொண்டைமானாரின் முன்னோர் என்று அவர்களால் குறிக்கப்பெற்ற தொண்டைமான் இளந்திரையன் நாககன்னிகைபால் பிறந்த சோழன் மகன் என்று கூறப்படுவது காரணமாகத் தங்களைச் சோழர் குலமாகவே கூறிக்கொண்டனர்*. மெய்க்கீர்த்தியில் அதைக் குறிக்கும் பல தொடர்கள் உள்ளன.

சூரிய குலத்தில் தோன்றிய சுமுகன்

புலிக்கொடி மேருவில் பொறித்தருள் புகழோன்

புறாவினுக்காகத் துலைபுகு பிரபலன்

கலிங்கம் திறைகொண்டு பரணி புனைந்தோன்

கிடாரத்து அரசன் தெய்விதம் அளித்தோன்

ஒட்டக் கூத்தன் உயர்தமிழ் புனைந்தோன்

நேரிமலைகாவலன்

என்ற தொடர்கள் சோழர் தொடர்பைக் காட்டுவனவாகும். இவற்றில் சோழர்குலம், புலிக்கொடி, சிபிச்சக்கரவர்த்தி, முதல் குலோத்துங்கன், முதல் இராசேந்திரன், ஒட்டக் கூத்தர் சோழர் பற்றிப் பாடிய மூவருலா, சோழர்க்குரிய நேரிமலை ஆகியன குறிக்கப் பெறுகின்றன.

## திருமெய்யம் தொடர்பு

திருமெய்யம் என்ற பெயரே 'திருமயம்' என்று அழைக்கப்படுகிறது. திருமெய்யத்தின் மீது அறந்தாங்கித்

தொண்டைமானார்கட்குச் சிறந்த மதிப்பு இருந்துள்ளது. பல கல்வெட்டுக்களில் 'சத்யம்' என்ற சொல் காணப்படுவது திருமெய்யத்தைக் குறிக்கும் சொல்லாகும். அழகிய மணவாளப் பெருமாளின் ஒரு மகன் பெயர் "மெய்நின்ற பெருமாள் தொண்டைமானார்" என்பதாகும். ஓர் உயர் அலுவலர் பெயர் "கலியுக மெய்யன் காலிங்கராயர்" என்பதாகும். சில கல்வெட்டுப்படிகள் திருமலையிலும் பொறிக்கப்பட்டுள்ளதாகக் கூறப்படுகிறது.

### சிறந்த தலங்கள்

திருப்பெருந்துறை, பழங்கரை, திருவரங்குளம் என்ற மூன்று தலங்களின் மீதும் அளவற்ற பக்தி கொண்ட அறந்தாங்கி அரசு தொண்டைமானார்கள் தங்கள் மெய்க்கீர்த்திகளில் இத்தலத்து இறைவர்களைக் குறித்துள்ளனர்.

**ஆவுடை நாதர் அனுக்கிரகம் பெற்றோர்**

**ஆவுடை நாயனார் ஸ்ரீபாதபக்தர்**

**பழம்பதி நாதர் பக்திப் பிரியர்**

**அரங்குளநாதர் பதம்பணிந்துறுவோர்**

என்பன மெய்க்கீர்த்தித் தொடர்களாகும்.

### சைவத் தொடர்பு

தொண்டைமானார் பலருடைய பெயர்கள் அறந்தாங்கி அரசுக்கு உட்பட்ட பல சிவாலயங்களின் இறைவர் பெயராக உள்ளன. பொன்னம்பலநாதன், சிதம்பரநாதன், ஏகப்பெருமாள், தீராவினை தீர்த்தான், ஆவுடை நயினார், இன்பவனப் பெருமாள் போன்றவை அவ்வாறு அமைந்த பெயர்கள்.

கொடைபெற்ற ஒருவர் உலகலங்காரப் பூபாலராயர் 'தவசி' என்று குறிக்கப்பெறுகிறார். பூமியூர் மடம், பூறுவமுண்டான் மடம் ஆகியவற்றிற்குக் கொடை கொடுத்துள்ளனர். 'மலையாந்தவமுனி' என்ற பெயருடையவர்கள் திருப்பெருந்துறைக் கோயிலில் சமயத்தலைவர்களாக விளங்கியவர்கள். "மலையாந் தவமுனி வாய்மை உகந்தோன்" என்று தொண்டைமானார்கள் தங்களை அழைத்துக் கொண்டனர்.

தங்கள் ஆட்சி எல்லையைக் கடந்தும் திருவாரூர், பெருவயல், திருப்பனந்தாள் மடம், திருவாவடுதுறை மடம், பிரான்மலை மங்கை நாதர் கோயில் ஆகியவைகட்குக் கொடை பல தந்துள்ளனர்.

### நீர்ப்பாசனம்

கல்வெட்டுக்களில் நீர்ப்பாசனம் பற்றிய பல குறிப்புக்கள் காணப்படுகின்றன.

ஆளப்பிறந்தான் குளம், ஆறு, இடையாற்றுக்குளம், இரட்டை வாய்க்கால், உடைப்பு, ஊருணி, காணாது காட்டினான் குளம், கால், கிணறு குளம், குளக்கரை, குளக்கால், குளவாய்த்துலை, குளத்தூர்க் குளம், குறும்பில் குளம், சிறுநங்கைக்குளம், தில்லைக்கூத்தன் மடை, நன்செய், நாடன் குளம், நீர்போகி, பாம்பாறு, பாலாறு, பாலையூர்க் குளம், புதுக்குளம், பெருமாண்டி குளம், பொய்கை, மடை, வயல், வயக்கல், வாய்த்துலை, வான்பயிர், வீரமங்கலத்துக்குளம், வெப்பவாய்க்கால், வெள்ளாறு போன்று வரும் பல சொற்கள் அறந்தாங்கி அரசு ஆட்சிப் பகுதியிலிருந்த நீர்ப்பாசன வசதிகளைக் குறிக்கும்.

கொடை நிலங்களுக்கு நீர் பாய்ச்சும் உரிமை பற்றிப் பல கல்வெட்டுக்களில் செய்திகள் காணப்படுகின்றன.

"ஆளப்பிறந்தான் குளத்து மடையாலும், குளத்தூர்க் குளத்துத் தில்லைக்கூத்தன் மடையாலும், அனைத்து மடையாலும் நீர் பாய்ந்து விளையும் குடிக்காட்டு வயல்"

"பலகுளங்களிலும் ஊருணி உடைப்பு இவற்றில் தண்ணீர் பெறக்கடவாராக"

"குறும்பில் குளத்து மடையாலும், புதுக்குளத்து மடையாலும், கொற்றமங்கலத்தில் சிங்கக் குளத்து மடையாலும் நீர் பாய்ந்து நெல் விளையும் நம்முடைய காணியான கொற்றிவயக்கல் தடி"

என்பன சில நீர்ப்பாசனம் பற்றிய கல்வெட்டுத் தொடர்களாகும்.

### ஆவணங்கள்

ஆவணங்கள் முதலில் ஓலைகளில் எழுதப்பட்டன. பின் அவை கல்வெட்டிலும், செப்பேட்டிலும் பொறிக்கப்பட்டன.

"கல்லிலும் செம்பிலும் எழுதிக் கொள்க" என்று கூறப்பட்டுள்ளது. ஆவணங்களில் சாட்சிக் கையெழுத்துக்கள் இடப்பட்டன.

ஓலையில் எழுதுவது "நெட்டெழுத்து" என்றும், கல்வெட்டிலும் செப்பேட்டிலும் பொறிப்பது "வெட்டெழுத்து" என்றும் கூறப்படுகின்றன. வணங்காமுடி ஆவுடைத் தொண்டைமானாரின் செப்பேட்டில் ஓலையில் எழுதியவர் மலையாந்தவமுனி காரியத்துக்குக் கர்த்தர் சின்ன ஆவுடையப்பன் என்றும் செப்பேட்டில் பொறித்தவர் அறந்தாங்கி அருணாசலப் பத்தர் மகன் சுப்பிரமணியம் என்றும் எழுதப்பட்டுள்ளன.

ஆணையிட்டு ஆவணம் எழுதுவது "பிடிபாடு பண்ணிக் கொடுத்தல்" எனப்பட்டது. ஒப்பந்தம் முறி, ஓலை, இசைவு, இசைவுத்திட்டு, சாதனம், பட்டயம், காணியாட்சி என்று பலவாறாக அழைக்கப்பட்டுள்ளன. மற்றொரு செப்பேட்டில் "ஆவுடையாசாரி வெட்டெழுத்து" என்று எழுதப்பட்டுள்ளது. மணமேல்குடிச் செப்பேட்டில் ஓலையில் எழுதியவர் அட்டவணை வீரப்பன் என்றும் செப்பேட்டில் வெட்டியவர் ஆவுடையார் கோயில் மகிழ்ராவணம் ஆசாரி என்றும் கூறப்பட்டுள்ளன. திருவாரூர்க் கொடை பற்றிய முத்து வணங்காமுடித் தொண்டைமானாரின் செப்பேட்டில் திருவாரூர் சோமாக்கந்த ஆசாரி வெட்டியதாகக் கூறப்படுகிறது.

## நீதிமுறை

"பாலையூர் நாட்டார் குற்றம் குறை செய்தால் பத்துப்பணம் கொள்ளக்கடவோமாகவும்" என்று பிச்சர் தொண்டைமானாரும் அவர் மகன் சூரியதேவரான குலசேகரத் தொண்டைமானாரும் அறிவித்ததைப் பழங்கரைக் கல்வெட்டு கூறுகிறது.

ஏகப் பெருமான் தொண்டைமானாரின் ஆளப்பிறந்தான் கல்வெட்டில் முன்னாள் தேவராயத் தொண்டைமானார் நாளில் அறிவித்த குற்றம் செய்தாருக்குரிய தண்டனை முறையையே மீண்டும் கடைப்பிடிப்பதாக வெட்டப்பட்டுள்ளது.

1. குற்றம் செய்தவர்களைச் சிறையிட்டு அவன் உற்பத்தியில் பாதியைப் பண்டாரத்தில் சேர்க்கவேண்டும்.
2. குற்றம் செய்தவன் ஓடிப்போனால் பிணையாக இருந்தவர்கள் பதில் கூறவேண்டும்.

3. ஒரு சாதியார் அதே சாதியில் உள்ளவர்கட்கே ஒற்றிவைக்க வேண்டும்; அல்லது விற்கவேண்டும்.

4. அறந்தாங்கி அரசுக்கு மாறுபட்ட அரசிடம் நட்புக் கொண்டால் அவன் காணிகளைப் பறிமுதல் செய்து கோயில் பண்டாரத்தில் சேர்க்க வேண்டும்.

## வரிமுறை

ஒரு நாட்டின் வருவாய்க்கு அந்நாட்டில் விதிக்கப்படும் வரிமுறைகளே முக்கியக் காரணமாகும். அறந்தாங்கி அரசு ஆட்சிப் பகுதியில் வரிகள் பற்றிய பல செய்திகள் கல்வெட்டுக்களில் கிடைத்துள்ளன.

நிலத்துக்கு வரியின்றி விளைச்சலுக்கு மட்டுமே வரி விதிக்கப்பட்டது. வரி நிர்ணயம் செய்ததை 'இறைமுறைமை" என்று பழங்கரை புராதனபுரீசுவரர் கோயில் கல்வெட்டு குறிக்கிறது. "இராசராசவளநாட்டுப் பாலையூர் நாட்டவர்க்கு இறைமுறைமை நிச்சயித்தபடி விளைஞ்ச நிலத்துக்குள்ள பணமும் மாத்தால் அரசு சுவந்திரம் நீங்கலாக அறுபதின் கல வரிசையும் குற்றம் குறை செய்தால் பத்துப் பணமும் கொள்ளக்கடவோமாகவும்" என்று கல்வெட்டு கூறுகிறது.

ஆவுடையார் கோயில், ஆளவந்தான் கல்வெட்டுக்களில் முன்புள்ள வரியே வசூல் செய்யப்பட்டது. இதைக் கல்வெட்டுக்கள்

"பயிர் பார்த்த நிலத்துக்கு முன்பிலாண்டுகள்
கடமையிறுப்பதாகக் கல்லுவெட்டிக் கொள்ளவும்"

"தலைநாளில் உள்ள மரியாதி பணம் பத்துக் கொள்ளவும்"

என்று கூறுகின்றன.

நாராயண மங்கலம் என்ற ஊர் அழிந்து கிடந்தது. சிலர் "இறங்கல் மீட்டு" விளைச்சல் உண்டாக்கினர். விளைச்சலில் இறங்கல் மீட்டார்க்குப் பாதியும் அறந்தாங்கி அரசுக்குப் பாதியும் என்று அதிகூரராமத் தொண்டைமானார் ஆணையிட்டார்.

அறந்தாங்கிப் பற்றில் அழியாநிலை, ஆளப்பிறந்தான் மனக்கோட்டை, பொய்கை, குளுந்தரயன் கோட்டை, திருநாவலூர் பாகக்குடி ஊரவர் இதுவரை 1 மா நிலத்துக்கு 40 பணம் வரி

செலுத்திவந்தனர். அவ்வரியைப் பாதியாக 20 பணம் என்று அழகியமணவாளப் பெருமாளும் அவர் தம்பிமார்களும் குறைத்தனர். காணியாட்சி நிலங்களுக்குப் பெரும்பாலும் 1 மா நிலத்துக்கு 5 மரக்கால் தானியம் வசூலிக்கப்பட்டது. ஒரு கல்வெட்டில் மட்டும் 1 மாவுக்கு 2 தூணி தானியம் வரி என்று குறிக்கப்பட்டுள்ளது.

ஒரு கல்வெட்டு குறும்பில், அறந்தாங்கி இடையே வரியில் வேறுபாடு இருந்ததைச் சமமாக வசூலிக்க வேண்டும் என்று கூறுகிறது. கோயில்கட்குக் கொடுக்கப்பட்ட நிலம் அந்தணர்கட்குக் கொடுக்கப்பட்ட நிலம் ஆகியவை எந்த வரியும் இல்லாமல் 'சர்வமானியமாக' அளிக்கப்பட்டன.

ஏகப் பெருமாள் தொண்டைமானாரின் பழங்கரைக் கல்வெட்டு பல்வேறு விளைபொருட்களுக்கு எவ்வாறு வரி விதிக்கப்பட்டது என்று விளக்கமாகக் கூறுகிறது.

"இன்னிலம் பயிர்பார்த்து உடன்வாரம் முதலான முதலில் குறுவை பாசனத்திற்கு மூன்றில் ஒன்றும்; எள்ளு, கேழ்வரகு நாலில் ஒன்றும்; புஞ்சை வரகு சாமை கண்புக்கு ஆறில் ஒன்றும்; எள்ளுக் கொள்ளுக்கு நாலில் ஒன்றும் கொள்ளக்கடவாராகவும். நஞ்சையில் வான்பயிர் கொண்ட நிலத்துக்கு நாடற்ற மலியாதி இரட்டிவாரம் கொள்ளக்கடவாராகவும்".

### அலுவல் பெயர்களும் ஆட்கள் பெயரும்

கல்வெட்டு, செப்பேட்டு ஆவணங்களில் ஆசாரி, ஊழியம், கணக்கு, காரியம், காரியத்துக்குக் கடவார், கொத்தன், கோயில் கணக்கு, தாணையம், தானத்தார், திருப்பணி மணியம், திருவாசல் காரியம், நாட்டார், பிரதானி, ஸ்ரீபன்மாகேஸ்வரர், ஸ்ரீவைஷ்ணவக் கேள்வி ஆகிய அலுவல் தொடர்பான பெயர்கள் காணப்படுகின்றன.

அலுவலர்கள் உள்ளிட்ட ஆடவர் பெயர்களாக அடியார்க்கு நல்லான், அரியபிள்ளை, அறந்தாங்கி அப்பன், ஆண்டியப்ப முத்துப்பிள்ளை, ஆரியச் சக்கரவர்த்தி, ஆவுடையான், ஆளப்பிறந்தான், ஆவுடை நயினார், உத்தாண்டையார், ஒருவரும் ஒவ்வாதான், கண்டிய தேவன், கண்ணிறைந்தான், காணாது காட்டினான், சதாசிவ அப்பன், சிதம்பரநாதன். சீரங்கநாதரைச்

சேவித்திருந்த பெருமாள், சேதிபராயன், சொன்ன வண்ணம் செய்வார், தமிழ்நாடன், தனமுத்து வீரப்பிள்ளை, தென்னவ தரையன், தேவியாண்டார், தோற்றம் அழகியான், நாலுதிக்கும் வென்றான், பகையாபிள்ளை, பாண்டிப் பெருமாள், பிச்சன் மணவாளன், பிறவிக்கு நல்லார், பெரிய பெருமாள், மங்கலராயர், முதலியாண்டார், முனையதரையன் என்பன காணப்படுகின்றன.

உயர் அலுவலர்களாகப் பல காலிங்கராயர் பட்டம் பெற்றவர்கள் இருந்துள்ளனர். அவர்கள் கலியுகமெய்யன் காலிங்கராயர், கற்பூரக் காலிங்கராயர், சிற்றம்பலமுடையான் காலிங்கராயர், திருச்சாற்றன் காலிங்கராயர், திருவம்பலமுடையான் காலிங்கராயர், நிரம்பவழகியான்காலிங்கராயர் என்போராவர். இவர்களில் சிலர் நாடுமதித்த காலிங்கராயர் என்ற பெரும் சிறப்பினைப் பெற்றுள்ளனர்.

# பிற்சேர்க்கை-I

## அறந்தாங்கித் தொண்டைமானார் கல்வெட்டுகள்

### 1

இடம் : ஆவுடையார் கோயில் ஆளுடைய பரமசுவாமி கோயில்

அரசர் : உய்யவந்தான் திருநோக்கழகிய தொண்டைமானார்

காலம் : 1328

செய்தி : பிறந்த நாளன்று மாணிக்கவாசகரை எழுந்தருளச் செய்து அவர்முன் திருவாசகம் ஓதச்செய்தது

### கல்வெட்டு

1. ஸ்வஸ்திஸ்ரீ கோமாறபன்மரான திரிபுவனச்சக்கரவத்திகள் ஸ்ரீ குலசேகர தேவற்கு யாண்டு பதினா
2. லாவதுகும்பநாயற்று பூர்வபக்கத்து நவமியும் சோமவாரமும் பெற்ற ரோகணிநாள் மிழலைக் கூ
3. ற்றத்து பிரமதேசம் தனியூர் திருப்பெருந்துறையான பவித்திர மாணிக்கச்சதுர்வேதி மங்கல
4. த்து ஆளுடைய தம்பிரானார் தேவகம்பிகளுக்கு கீழ்க்கூற்று மஞ்சக்குடி உடையான் உய்யவ
5. ந்தான் திருநோக்கழகியார் தொண்டைமானேன் இற்றைநாள் பிடிபாடு பண்ணிக் கு
6. டுத்தபரிசாவது ஆளுடைய தம்பிரானார்க்குத் தலத்தில் திருஅந்திக் காப்பு திருவிளக்கு அமுதுபடி
7. கரியமுது வேண்டும் நித்ய நிமந்தங்களுக்கும் இக்கோயிலில் திருவாதவூரரை என் பிறந்த நா
8. ள் மாதாமாதம் யித்தீவத்துநாள் எழுந்தருளப் பண்ணவும் திருமுன்பு திருவாசகமும் ஓதி நிச்சயி

9. த்த நியமத்துக்கும் தானமாகக் குடுத்த ஊராவது வடவெள்ளாறான சுந்தரபாண்டிய வளநா

10. ட்டு நான் கொண்டு அனுபவித்து வருகிற ஏயூர்மங்கலம் காராண்மையாகக் குடுத்த ஊரில் சதுசீமை

11. யில் எப்பேற்பட்ட சர்வமும் சர்வ மானியமாக சந்திராதித்தவற் செல்லக் கல்லிலும் செம்பிலும்

12. வெட்டிக் கொள்ளவும் இப்படி சம்மதித்துப் பிடிபாடு பண்ணிக் குடுத்தேன் ஆளுடைய பரமசுவாமி

13. தேவ கம்மிகளுக்கு தொண்டைமானேன் இப்படிக்கு திருநோக்கு அழகியாரான தொண்டைமா

14. னார் எழுத்து அம்பலக்காரர் எழுத்து.

## 2

இடம் : பழங்கரை புராதன புரீசுவரர் கோயில் வடபுறச்சுவர் அரசன் பிச்சர் தொண்டைமானார்

காலம் : 1426

செய்தி : மகன் சூரிய தேவரான குலசேகரத் தொண்டைமானாரோடு சேர்ந்து பாலையூர் நாட்டுக்கு வரி நிர்ணயம் செய்தது

### கல்வெட்டு

1. சகாத்தம் 1348 மேல் செல்லாநின்
2. ற துலாரவியும் சனிக்கிழமையும் அத்தமும்
3. பெற்ற அபரபட்சத்து சதுர்த்தசியும் பெற்
4. ற நாள் பார்த்திப வருஷம் அற்பசி மாதம் 23 தேதி
5. இராசராசவளநாட்டுப் பாலையூர் நாட்டு
6. நாடாயிசைந்த நாட்டவற்கு பிச்சர் தொ
7. ண்டைமானாரான உடையார் அருளி
8. ச் செய்தபடி மகனார் சூரிய தேவரான குல
9. சேகரத் தொண்டைமானார் உள்ளிட்
10. டாரோட் நாட்டாற்கு இறை முறைமை
11. நிச்செயித்தபடி விளைஞ்ச நிலத்துக்குள்ள ப
12. ணமும் மாத்தால் அரசு சுவந்திரம் நீங்கலாக அறுபதி
13. ன்கல வரிசையும் குற்றம் குறை செய்தால் பத்து
14. ப் பணமும் கொள்ளக்கடவோமாகவும், பிள்ளைவரி
15. யும் கராணப்பேர்க்குக் கழித்து நின்ற பேற்குக்
16. கொள்ளக் கடவோமாகவும் முதல் உண்டென்று
17. தெண்டங்கொள்ளக் கடவோமல்லவாகவும்
18. இம்மரியாதி சந்திராதித்தவரை செல்ல
19. க் கடவதாகவும் சத்யம் இப்படிக்கு அழகி
20. ய திருச்சிற்றம்பலமுடையான் கலிங்கராய
21. ன் எழுத்து

—புதுக்கோட்டை மாநிலக் கல்வெட்டுக்கள் எண். 784

## 3

இடம் : ஆளப்பிறந்தான் பூமீசுவரர் கோயில் கருவறை தென்புறச்சுவர்

அரசர் : ஆளுடைய நாயனார் தொண்டைமானார்

காலம் : 8.8.1434

செய்தி : சிலருக்குக் காணியாட்சி கொடுத்து வரி நிர்ணயம் செய்தது

### கல்வெட்டு

1. ஸ்வஸ்திஸ்ரீ 1356க்கு மேல் செல்லாநின்ற ஆ
2. னந்த வருஷம் ஆவனி மாசம் 10 தேதி
3. ஆளப்பிறந்தான் கண்டிய
4. தேவர் பிச்சன் தொண்டை
5. மான் பகையா பிள்ளையான தோற்
6. றமழகியார் பிச்சன் வூராட்சியார்
7. மணவாளன் ஆரியச்சக்கரவத்திகள்
8. மணவாளன் உள்ளிட்டாற்கு ஆட்சி குடி
9. க்காடு காணியாட்சியாக தங்களுக்குத் தலை
10. நாளில் உள்ள மரியாதியினால் விட்ட அளவு
11. க்கு இதுக்கு மாத்தால் பணம் பத்தாகக்
12. கொள்ளக்கடவோமாகவும் ஆளப்பிறந்
13. தான் ஊரார்க்குக் கல்வெட்டிக் குடுத்தோம்
14. ஆளுடை நாயனார் தொண்டைமானாரும் தம்
15. பிமாரும் அருளிச்செய்தபடிக்கு திருச்சிற்றம்பல மு
16. டையார் காலிங்கராயர் எழுத்து

—கல்வெட்டு ஆண்டறிக்கை 1930 எண். 237

# 4

இடம் : குறும்பூர் சித்தநாதீசுவரர் கோயில் கருவறை தென்புறச் சுவர்

அரசர் : மெய்நின்ற பெருமாள் தொண்டைமானார்

காலம் : ஸ்ரீவல்லபதேவரின் ஆட்சியாண்டு ஐந்தாவது

செய்தி : அறந்தாங்கி வரியைக் குறும்பூர்க்கு நிர்ணயித்தது

## கல்வெட்டு

1. ஸ்ரீகோமாறபன்மர் திருபுவனச்சக்கரவத்திகள் ஸ்ரீசீவல்லப தேவற்
2. கு யாண்டு அஞ்சாவது பங்குனி மாதம் இருபத்துநாலாந்தியதி
3. நாள் அறந்தாங்கி அரசு மெய்நின்ற பெருமாள் தொண்டைமா
4. னார் குறும்பிலூ ரவற்குப் பிடிபாடு பண்ணிக்குடுத்த பரிசாவது
5. இந்நாள் முதல் சந்திராதித்தவரையாக எங்களில் சுதந்திரமுள்ளதனை
6. யிலும் அறந்தாங்கிக்கு உற்ற மரியாதி இவ்வூர்க்கும் ஆவதாகவும் இவர்களை இன்று கொள்
7. ளுமளவில் ஒரு மரச் செய்க்கு ஆண்டு ஒன்றுக்கு 20 பணம் இறுக்கக் க
8. டவார்களாகவும் இது ஒழிய வேறு ஒரு ஏற்றச் சுருக்கம் செய்தாருண்
9. டாகில் செழியிங்க நல்லூரில் கல்வெட்டுப்படியாவதாகவும்

— இந்தியக் கல்வெட்டு ஆண்டறிக்கை 1942 எண். 227

## 5

இடம் : குறும்பூர் சித்தநாதீசுவரர் கோயில் கருவறை வடபுறச் சுவர்

அரசர் : தெண்ணாயக்கத் தொண்டைமானார்

காலம் : 11.4.1443

செய்தி : திருவாசல் பிள்ளையார் கொடை நிலத்துக்கு 1 மா நிலத்துக்கு ஒரு கலம் நெல் அளக்கச் செய்தது

### கல்வெட்டு

1. ஸ்வஸ்திஸ்ரீ
2. சகாத்தம் 1365ன் மேற் செ
3. ல்லா நின்ற உதிரோத்தாரி வரு
4. சம் சித்திரை மாதம் 16 தேதி வடவெள்
5. ளாறான சுந்தரபாண்டிய வளநாட்டு யிளங்
6. கோனாட்டு அறந்தாங்கி அரசு உடையார் அழகிய
7. மணவாளப் பெருமாள் தொண்டைமானார் மக
8. னார் தெண்ணாயக்கத் தொண்டைமானார்
9. திருவாசல் பிள்ளைப்பேரில் பிள்ளையார் உள்ளிட்டார்க்கு
10. பாலையூர் நாட்டுக் குறும்பில் குளத்து நாடான
11. வயக்கல் மடையாலும் புதுக்குளத்து
12. மடையாலும் கொற்றமங்கலத்தில் சிங்
13. கமனத்தான் மடையாலும் நீர் பாய்ந்து
14. நெல் விளையும் தம்முடைய நிலமான கொற்றி
15. புதுவயல் அடியார்க்கு நல்லான்தடி முற்றும் ஆளுடை
16. யான் வயக்கல் தடி முற்றும் சந்திராதித்தர் வரைக்கு காணி
17. ஆட்சி ஆகக் குடுத்த அளவுக்கு சித்தங்கலக்கி நயினார்க்கு

18. பெறும்படி ஒரு மா நிலத்துக்குக் கலம்நெல் குடுக்கவும்
19. இன்னிலத்தால் வரும் கடமை மண்மதிள் மற்றும் எப்
20. பேற்பட்ட சமத்தப் பிராப்தியும் கழித்து குடுத்த அளவுக்கு
21. இன்னிலத்துக்கு அகுதம் பண்ணினவன் கங்கைக்கரை
22. யில் கபிலையையும் பிராமணரையும் கொன்ற பாவத்தை
23. பெறக் கடவாராகவும் பிள்ளையார் பெருமக்கள் கல்வெ
24. ட்டு காணிஆவதுக்கு எட்டில் ஒன்று ஆளவும் இப்படி உடைய
25. வர் அருளிச் செயற்படிக்கு நிரம்பவழகியான் காலிங்கராயன்
26. எழுத்து

— இந்தியக் கல்வெட்டு ஆண்டறிக்கை 1942 எண். 220

## 6

இடம் : எட்டியத்தளி அகத்தீசுவரர் கோயில் கருவறை முன்மண்டப மேற்குப்புறச் சுவர்

அரசர் : அழகிய மணவாளப் பெருமாள் தொண்டைமானார்

காலம் : 23.3.1444

செய்தி : மகனுக்குக் கொடுத்த காணியாட்சியில் ஒரு மா நிலத்துக்கு ஐந்து மரக்கால் நெல் அளக்க நிர்ணயம் செய்தது

### கல்வெட்டு

1. ஸத்யம் 1365ன் மேற் செல்லாநின்ற உத்ரோத்காரி வருஷம் பங்குனி மாதம் 28 தேதி அறந்தாங்கி அரசு உடையார்
2. அழகிய மணவாளப் பெருமாள் தொண்டைமானார் மகனார் நயினார் இலக்கப்பத் தண்ணாயக்கத் தொண்டைமானார்க்கு வடவெள்
3. ளாறான சுந்தரபாண்டிய வளநாட்டு மாங்குடி வயலில் எட்டினிக் கோட்டை திருவகத்தி ஆவுடையான் பக்கல் கொண்ட சோலை
4. நிலம் மா மாங்குடி பறை உய்யான் பக்கல் கொண்ட திருவகத்தி நிலம் மா இன்னிலத்துக்கு வரும் கடமை இறையிலியாக கழி
5. த்துக் குடுத்து வெட்டிமுட்டி வினியோகம் மாக்கலமும் கழித்து நயினார் திருவகத்தீசுரமுடையார்க்கு மாத்தால் 5 மரக்கால் குடு
6. க்க கற்பித்த அளவுக்கு இந்நிலம் பாண்டிப் பெருமானார் பக்கல் கொண்ட யீஞ்சூரணி நிலம் சந்திராதித்தவரைக்கு காணியாட்சியாக
7. குடுத்த அளவுக்கு இதுக்கு அசிதம் பண்ணினவன் கங்கைக்கரையில் கபிலையையும் பிராமணரையும் கொன்ற பாவத்தைப் பெறக்கடவா ராகவும்
8. இப்படிக்கு உடையவர் அருளிச்செயற்படிக்கு நிரம்பவழகியான் காலிங்கராயன் எழுத்து.

— இந்தியக் கல்வெட்டு ஆண்டறிக்கை 1916 எண். 119

# 7

இடம் : பழங்கரை புராதனபுரீசுவரர் கோயில் வடபுறச்சுவர்

அரசர் : அழகிய மணவாளப்பெருமாள் தொண்டைமானார்

காலம் : 1453

செய்தி : மகன் இலக்கண தெண்ணாயக்கத் தொண்டைமானார்க்குக் காணியாட்சி உரிமை கொடுத்தது

## கல்வெட்டு

1. சகாப்தம் 1375 மேல்செல்லா நின்ற துன்முக வருஷம் தைமாதம் 5 தேதி வடவெள்ளாறான
2. சுந்தரபாண்டிய வளநாட்டு இளங் கோனாட்டு அறந்தாங்கி அரசு
3. அழகிய மணவாளப் பெருமாள் தொண்டைமானாரோம் நம்முடை
4. ய மகன் இலக்கண தெண்ணாயக்கத் தொண்டைமானாற்கு நம்முடை ஊரான
5. பாலையூர் நாட்டு செருவடக்கிமங்கல மாதேவி மங்கலம் கல்வெட்டுக்காணி
6. ஆகக் குடுத்த அளவுக்கு இந்த ஊர்களுக்கு இசைந்த பெருநான் கெல்லையாவ
7. து கீழ்பாற்கெல்லை நாலுதிக்கும் வென்றான் குளத்துக்கு மேற்கும் தென்பாற்கெல்லை
8. குறும்பில் வார்த்தலைக்கு வடக்கும் மேற்பார்கெல்லை தெற் கோடிய வாய்க்காலுக்
9. கு கிழக்கும் வடபாற்கெல்லை நாலுதிக்கும் வென்றான் வயலுக்கும் போகிற வாய்க்
10. காலுக்குத் தெற்கும் ஆக இசைந்த பெருநான்கெல்லைக் குட்பட்ட நிலத்தில் தேவதான தி

11. ருவிடையாட்டமும் வாண்டையார் கொண்ட நிலம் சிரான்வயக்கல் தடி இரண்டும் பூமாஞ்செய்

12. யும் பொற்காடி வயக்கலும் ஆக இந்த நிலம் நீக்கி மற்றுள்ள நிலம் மற்றும் எப்பேர்பட்ட சமு

13. த்தப் பிராத்தியும் தெண்ணாயக்கத் தொண்டைமானாற்குக் காணி யாகக் குடுத்து இதுக்கு உண்டான கட

14. மை வினியோகம் எப்பேர்ப்பட்டனவும் கழித்துக் குடுத்த அளவுக்கு இந்த நேரிலே சந்திராதித்தவற் செல்

15. வதாகவும் வாண்டையார் வசத்தில் நீக்கின நிலத்துக்கு நாட்டு மரியாதி தெண்ணாயக்கத் தொண்டைமானார் கர

16. ங் கொள்ளக்கடவாராகவும் சத்யம் இப்படிக்கு அருளிச் செயற்படிக்கு நாட்டுக்கணக்கு வளர்த்துவாழ்வித்தார்

17. காலிங்கராயன் எழுத்து

-- புதுக்கோட்டை மாநிலக் கல்வெட்டுக்கள் எண். 794

## 8

இடம் : எட்டியத்தளி அகத்தீசுரமுடையார் கோயில் கருவறை முன்மண்டப மேற்குப்புறச் சுவர்

அரசர் : திருநெல்வேலிப் பெருமாள் தொண்டைமானார்

காலம் : 8.1.1470

செய்தி : அகத்தீசுவரருக்குத் திருநாமத்துக்காணியாக நிலம் கொடை கொடுத்தது

### கல்வெட்டு

1. ஸ்வஸ்திஸ்ரீ விரோதி வருசம் தை மாதம் 12 தேதி அறந்தாங்கி அரசு உடையார் திருநெல்வேலிப் பெருமாள் தொண்டைமானார் இட்டியூர்த்தளி நாயனார் திருவகத்தீசுவரமுடையார்க்கு வயிராண்டி வயல் நான்கெல்லையும் திருநாமத்துக் காணியாகக் குடுத்தமைக்கு இது சந்திராதித்யவரை செல்லக் கடவதாகவும் இதுக்கு அசிதம் பண்ணினவன்

2. கெங்கைக் கரையில் கபிலையையும் பிராமணரையும் கொன்ற பாவத்தைப் பெறக்கடவாராகவும் இப்படி உடையவர் அருளிச் செயற்படிக்கு நிரம்பவழகியார் காலிங்கராயன் எழுத்து

-- இந்தியக்கல்வெட்டு ஆண்டறிக்கை 1916 எண். 125

## 9

இடம் : குறும்பூர் சித்தநாதீசுவரர் கோயில் கருவறை தென்புறச்சுவர்

அரசர் : இன்பவனப் பெருமாள் தொண்டைமானார்

காலம் : 15.12.1476

செய்தி : சித்தங்கலக்கி நாயனார்க்குச் சிறுகாலைச் சந்திக்குப் பன்னிரண்டு மா நிலம் கொடைகொடுத்தது

### கல்வெட்டு

1. ஸ்வஸ்திஸ்ரீ சகாப்தம் 1399 ன் மேற்
2. செல்லாநின்ற துன்முகி வருசம்
3. மார்கழி மாதம் 8 தேதி அறந்தாங்கி அரசு
4. உடையார் இன்பவனப் பெருமாள்
5. தொண்டைமானார் குறும்பில் நாயனார்
6. சித்தங்கலக்கி நாயனார்க்கு சிறு
7. காலைச் சந்தி அமுது செய்ய விட்ட
8. நாட்டுக் குளத்தாலும் காணாது காட்டி
9. னான் குளத்தும் நீர் பாயவும் காணாது கா
10. ட்டினான் வயலில் கள்ள சூரியன் தடி ஒ
11. ன்றில் தளை உட்பட நிலம் இதுவும் மனைச்
12. செய் நாற்றுக்கால் உட்பட நிலம் பள்ளச்செய்
13. நிலம் வடகரைச்செய் நிலம் இன்பவன வய
14. க்கல் நிலம் தளையுட்ட நிலம் காடுவெட்டி
15. நிலம் ஆக இந்நிலம் பன்னிர்ண்டு
16. மாவும் சந்திராதித்தவரை செல்லக்கடவ
17. தாகவும் இதுக்கு அசிதம் பண்ணினவன் கெங்
18. கைக் கரையில் கபிலையையும் பிரா
19. மணனையும் கொன்ற பாவத்திலே
20. போவார்களாகவும்

--இந்தியக் கல்வெட்டு ஆண்டறிக்கை 1942 எண். 226

## 10

இடம் : பழங்கரை புராதனபுரீசுவரர் கோயில் வடபுறச் சுவர்

அரசர் : ஏகப்பெருமாள் தொண்டைமானார்

காலம் : 1481

செய்தி : திருப்பழங்கரைஉடைய நாயனார்க்குக் கொடை கொடுத்தது

### கல்வெட்டு

1. ஸ்வஸ்திஸ்ரீ சகாப்தம் 1403 ன் மேல் செல்லாநின்ற
2. பிலவ வருஷத்து சிம்ம நாயற்று பூருவபட்சத்து
3. ஏகாதசியும் சோமவாரமும் பெற்ற உத்திராடத்து
4. நாள் இராசராசவளநாட்டுப் பாலையூர் நாட்டு நாட்ட
5. வரும் தானத்தாருமோம் அறந்தாங்கி அரசு உடை
6. யார் ஏகப்பெருமாள் தொண்டைமானார் திருக்கோயி
7. ல் காரியத்துக்குக் கடவார் அத்தாணிநல்லூர் தவசிக
8. ளில் உடையான் உலகலங்காரப் பூபாலராயர்க்கு
9. நாயனார் திருப்பழங்கரை உடைய நாயனார் திரு
10. நாமத்துக்காணியான குருந்தரையன் வயலும் குள
11. மும் நத்தமும் புஞ்சையும் மற்றும் எப்பேர்ப்பட்டனவும்
12. குடிநீங்காத் தேவதானமாகப் பிராமணம் பண்ணிக்
13. குடுத்த இந்நிலத்துக்கு இறையாவன இன்னிலம் ப
14. யிர் பார்த்து உடன்வார முதலான முதலில் குறுவை பசான
15. த்துக்கு மூன்றிலொன்றும் எள்ளுக் கேழ்வரகு நாலிலொன்
16. றும் புன்செய் வரகு சாமை கண்புக்கு ஆறிலொன்றும் எள்ளு
17. க் கொள்ளுக்கு நாலிலொன்றும் கொள்ளக்கடவதாகவும் நஞ்
18. செயில் வான்பயிர்கொண்ட நிலத்துக்கு நாடற்ற மரியாதி
19. இரட்டிவாரம் கொள்ளக்கடவதாகவும் இப்படிக்கு பிராமணம் பண்

20. ணிக் குடுத்தோம் உலகலங்காரப் பூபாலராயர்க்குப் பாலை

21. யூர் நாட்டு நாட்டவரும் தானத்தாருமோம் இப்படிக்கு நாட்டவ

22. ரும் தானத்தாரும் நியமித்தமைக்கு இன்னாட்டுக் கண

23. க்குச் செல்லன் பெரியநாட்டு வேளான் எழுத்து. இப்படிக்

24. கு புலியன் பெரிய வேளான் எழுத்து

— புதுக்கோட்டை மாநிலக் கல்வெட்டுக்கள் எண். 820

## 11

இடம் : ஆளப்பிறந்தான் பூமீசுரநாதர் கோயில் கருவறை வடபுறச்சுவர்

அரசர் : ஏகப்பெருமாள் தொண்டைமானார்

காலம் : 28.11.1482

செய்தி : தேவராயத் தொண்டைமானார் நாளில் நடந்தபடி வரி வாங்கவும் நிதி செலுத்தவும் ஆணை பிறப்பித்தது

### கல்வெட்டு

1. ஸ்வஸ்திஸ்ரீ சகாப்தம் 1404ன் மேற் செல்லா நின்ற சோப
2. கிறிது வருஷம் கார்த்திகை மாசம் 30 தேதி உடையவர் திருவாசல் காரியத்துக்குக் கடவா
3. ற்கு அறந்தாங்கிப் பற்று விளய்மாணிக்கப் பற்று அரையர்குளப் பற்று நாட்டவரும்
4. பிள்ளைப் பேரும் இசைவுபண்ணிக் குடுத்தபடி முன்னாள் தேவ ராயத் தொண்டைமானார் நாளிப்
5. நடந்த முறையிலே நடத்திக் கொள்ளவும் ஒருவன் குற்றம் செய்தால் அவனை
6. இராசகுற்றம் கேட்குமளவில் அவன் உற்பத்தி இன்ன மரியாதி என்று வாங்கி அந்
7. த முதலிலே ஒன்றுபாதி முதல் பண்டாரத்தில் அவனைச் சிறையிட்டு வாங்கியும் அவன்
8. பேரில் நியமித்த முதலுக்கு இறுக்க ஆற்றாமல் ஓடிப் போனால் புணைநின்றபேர் உத்தரம்
9. சொல்லக் கடவாராகவும் முன்னாள் உண்டான இறைமுறையை மண்மதிள்
10. ஊழியம் கடமை காணிக்கை முன்புண்டான நேரிலே நடத்திக்கொள் ளவும் நாய
11. ன்மார் பக்கல் கொண்ட காணியாட்சி சாதனத்தின்படி நிலத்துக்குக் கடமை யிறுப்பித்துக்

12. கொள்ளவும் பிள்ளைப்பேர்க்கும் சாதனத்தின்படி உண்டான நிலம் காணியாட்சியாக

13. அனுபவித்துக் கொள்ளவும் சாதி சாதி கையில் ஒற்றி விலை கொண்டநிலத்து

14. க்கும் அவர்களுக்குற்ற மரியாதி கடமை குடிமை நடத்திக் கொள்ளவும் சாதி சாதியான ம

15. னித்தற்கு முன்புற்ற மரியாதி நடத்திக்கொள்ளவும் இப்படி நடத்திக் கொள்வது யாவனொ

16. ருவன் பயந்துபோய்க் கள்ளப்பற்றிலே நின்று பயந்தீர்ந்து நாலுபேரழைத்து வந்து கா

17. ண்பிக்கக் கடவோமாகவும் இது ஏறியிலே உடையவர்க்கு வெறுத்த இராசாக்கள் அ

18. ன்னியயிடத்திலே போனால் அவன் காணியும் ஆளுடைய தம்பிரானார்க்கு தேவதானமா

19. கல்வெட்டி நாட்டி உற்ற முறையிலும் கட்டாயம் கழியச் செய்யக்

20. கடவோமாகவும் இப்படி சம்மதித்துக் கல்வெட்டிக் குடுத்தோம்

21. உடையவர் திருவாசல் காரியத்துக்குக் கடவாற்கு முன் பேசின நாட்டாரும்

22. பிள்ளைப் பேருமோம் சத்யம் உடையவர் ஏகப்பெருமாள் தொண்டைமானார்

23. அருளிச் செயல்படிக்கு திருவம்பலமுடையார் காலிங்கராயர் எழுத்து.

-- கல்வெட்டு ஆண்டறிக்கை 1930 எண். 233

# 12

இடம் : வாளவர்மாணிக்கம் கைலாசநாதர் கோயில் வடபுறச் சுவர்

அரசர் : ஏகப்பெருமாள் தொண்டைமானார்

காலம் : 1497

செய்தி : மகன் தீராவினை தீர்த்தானுக்குக் காணியாட்சி கொடுத்தது

## கல்வெட்டு

1. ஸ்வஸ்திஸ்ரீ சகாப்தம் 1419ன் மேல்
2. செல்லாநின்ற பிங்கள சம்வத்சர
3. த்து கும்பரவி பூருவபட்சத்துப் பஞ்சமி
4. யும் சனிவாரமும் பெற்ற ரேவதி நாள்
5. அறந்தாங்கி அரசு ஏகப்பெருமாள்
6. தொண்டைமானார் நம்முடைய மகன்
7. தீராவினை தீர்தாற்குக் காணிஆட்சி ஆ
8. க குடுத்த மிழலைக் கூற்றத்து மேல்
9. கூற்று மீபாம்பாற்றுநாட்டு வாளைய
10. மாணிக்கப்பற்றுப் பெரிய கோட்டை
11. புரவில் நம்முடைய காணி ஆன மே
12. லைச்செங்கரை நான்கெல்லைக்கு
13. உட்பட்ட நஞ்சை புஞ்சை நத்தம் திடர் மா
14. வடை மரவடை குளவடை மற்றும் உண்
15. டு ஆனதும் காணியாக சந்திராதித்யவ
16. ரை செல்ல ஆண்டு அனுபவித்துக்
17. கொள்ளவும் இப்படிக்கு உடையார்

18. கற்பித்தபடிக்கு சீரங்கராசன் எழுத்து

19. இப்படிக்கு தென்னவதரையன் எழுத்து

20. வாளைய மாணிக்கத்தில்

21. நம்முடைய மனை ஆன செட்டித் தெரு

22. கல்லுக்கு ஒரு மனையும்

23. சந்திராதித்யவரை அனுபவித்துக் கொள்ளவும்

-- புதுக்கோட்டை மாநிலக் கல்வெட்டுக்கள் 830

# 13

இடம் : பிள்ளைவயல் கிராமத்தில் வடபுறம் நடராசன் என்பவர் நிலத்தில் நடப்பட்டுள்ள குத்துக்கல்லின் நான்கு புறம்

அரசர் : ஏகப்பெருமாள் தொண்டைமானார்

காலம் : 1498

செய்தி : பிள்ளைவயலான பாண்டிப் பெருமாள் நல்லூரைக் குத்தகை எடுத்தவர்கள் குத்தகை கொடுக்க முடியாமல் திருப்பி அளித்ததை மீண்டும் தக்க ஏற்பாடு செய்தது.

## கல்வெட்டு

### முதல் பக்கம்

1. ஸ்வஸ்திஸ்ரீ ச
2. காப்தம் 1420
3. ன் மேல் செல்
4. லாநின்ற காள
5. உத்தி வருஷம் ஆ
6. டி மாதம் மிழலைக் கூ
7. ற்றத்து திருப்பெ
8. ருந்துறை நாயனார்
9. ஆளுடைய தம்பிரானார் கோ
10. யில் திருநாள் அறந்தாங்கி
11. தொண்டைமானார்
12. பையமாக நடந்து
13. வருகிற இதுக்கு உ
14. டையார் சூரிய தே
15. வர் தொண்டைமா
16. னார் கடமை கல்
17. வெட்டிக் குடுத்த பி
18. ள்ளை வயலான பா
19. ண்டிப் பெருமா
20. ள் நல்லூர் பலரும்
21. ஒற்றி விலைகொண்
22. டு நிற்கச்சிதே இரா
23. யார் மதுரை கொண்
24. டு இந்ததேசத்துக்
25. கு உடையார் யே
26. கப் பெருமாள் தொ
27. ண்டைமானார் க
28. ப்பம் பொறுத்து

## இரண்டாம் பக்கம்

29. தண்டு க
30. ச்சிதே மு
31. க்குறுணி
32. விலை தர்
33. மமாய் இ
34. வ்வூர் ஒற்
35. றி விலை
36. கொண்டு
37. நின்றவர்
38. கள் ஆற்றா
39. மல் கா
40. ணியான
41. ன் மெய்
42. தீஞ்சது
43. கொண்
44. டு ஒற்றி வி
45. லை ஒலை
46. யானது கோ
47. விலிலே
48. கொண்டு
49. வந்து போ
50. ட்டு தம்பி
51. ரானார் பண்
52. டாரத்திலு
53. ம் நாமும்
54. ஆக முதல்

## மூன்றாம் பக்கம்

55. குடுக்கையில்
56. இவ்வூர்க்கு மு
57. ன்னாள் சூரிய
58. தேவர் தொண்
59. டைமானார் ப
60. ட்டயப் படிக்
61. கு எல்லை ஆவ
62. து கீழ்பாற்கெ
63. ல்லை புதுவய
64. லுக்கு ஏந்தலுக்கும்
65. மஞ்சக்கரைக் குள
66. த்துக்கு மேற்கும் தெ
67. ன் பாற்கெல்லை
68. கூற்றங்குடிக்கு
69. ளத்துக்கும் வ
70. டக்கும் மேல்பா
71. ற்கெல்லை திருப்
72. பை வயலுக்கு கி
73. ழக்கும் வடபாற்
74. கெல்லை கலைய
75. ன் வயலுக்கும் து
76. த்தாக்குடி குளத்து
77. க்கும் தெற்கு இந்த

78. நான்கெ
79. ல்லைக்குட்
80. பட்ட முன்
81 னாளை திருநா
82. மத்துக் கா
83. ணி நீங்க
84. லாக சறுவ
85. மும் நாளது
86. முதல் சந்தி
87. ராதித்தவற்
88. செல்ல திரு
89. நாமத்துக் கா
90. ணி ஆக ந
91. டக்க தி
92. ரு நாமத்து
93. காணிக்கு
94. அயிதம் ப
95. ண்ணின
96. வன் கெ
97. ங்கைக் க
98. ரையிலே பி
99. தாவையும்
100. மாதாவை
101. யும் கோ
102. வையும் கு
103. ருவையும்
104. பிராமண
105. ரையும்
106. கொன்ற பா
107. வத்திலே
108. போகக் க
109. டவானாகவும்

# 14

இடம் : எட்டியத்தளி அகத்தீசுவரர் கோயில் கருவறை வடக்கு, மேற்குப்புறச் சுவர்

அரசர் : பொன்னம்பலநாதத் தொண்டைமானார்

காலம் : 7.6.1535

செய்தி : தவறாகக் கொடுத்த காணியாட்சியை மீண்டும் உரியவர்கட்குக் கொடுத்தது

## கல்வெட்டு

1. மன்மத வருஷம் ஆனிமாசம் 10 தேதி ஸ்ரீமது பொன்னம்பல
2. நாதத் தொண்டைமானார் திருத்தாள் தென்னவதரையர்
3. க்கு வரக்காட்டின காரியம் இட்டியூர்த்தளி கோவில் கணக்கு உ
4. ன்னிடம் காணியாட்சி என்கிற விபறம் அறியாதபடியினாலே பூ
5. பாலராயன் மகனுக்குக் குடுத்தோம் உனக்கு பூறும் இட்
6. டியூர்த்தளி நாட்டுமங்கலம் கரையூர் உன்னிடத்தின் கா
7. ணியாட்சி என்கிற விபரம் கேட்டோம் ஆகையாலே நாம்
8. அவனுக்குக் குடுத்த காணியாட்சியும் ஓலையும் கொண்டு அ
9. வனுக்கு பரமில்லை பூர்வம் போலே இட்டியூர்த்தளி நாட்டு ம
10. ங்கலம் கரையூர் உன்னிட தனிக் காட்சியாகவே
11. பற்றிச் சந்திராதித்தவர் செல்ல அனுபவித்துக் கொள்ளவும்

--கல்வெட்டு ஆண்டறிக்கை 1916 எண். 118

# 15

இடம் : பரமந்தூர் ஆதிகேசவப் பெருமாள் கோயில் கருவறை வடபுறச்சுவர்

அரசர் : பொன்னம்பலநாதத் தொண்டைமானார்

காலம் : 1537

செய்தி : ஆதிகேசவப் பெருமாள் கோயிலில் "பொன்னம்பல நாதன் சந்தி" வழிபாட்டுக்குக் கொடை அளித்தது.

## கல்வெட்டு

1. ஸ்வஸ்திஸ்ரீ சகாப்தம் 1459
2. இதன்மேல் செல்லாநின்ற ஹே
3. விளம்பி சம்பவத்சரத்து தட்சிணாய
4. னத்து ஸ்ராவண மாசத்து பூர்வப
5. ட்சத்து துவாதசியும் ஆதித்த வாரமும்
6. திருவோண நட்சத்திரம் பெற்ற இற்றைநாள்
7. பராசரன்பத்தூர் பெருமாள் ஆதிகே
8. சவப் பெருமாளுக்கு அறந்தாங்கி
9. அரசு அச்சமறியாதான் அலைவில்
10. அஞ்சாதான் ஆவுடைய தம்பிரானார்
11. ஸ்ரீபாதபக்தன் ஏகப்பெருமாள் தொ
12. ண்டைமானார் புத்ரன் பொன்ன
13. ம்பலநாதத் தொண்டைமானாரோ
14. ம் பொன்னம்பல நாதன் சந்திக்கு
15. விட்ட ஊராய் பனைங்கய நாட்டு அ
16. ரையர்குளப் பற்றுப் புரவில் செருடன்
17. வயலும் இடையன்வயலும் இதுக்கு
18. ள்பட்ட பெருநான்கு எல்லையும் இவ்வூரி

19. ல் உள்ள குடிகளும் உள்பட திருநாம
20. த்துக் காணியாகக் குடுத்தபடியால்
21. செருடன்வயல் திருநாமத்துக் காணியி
22. லே சந்திராதித்த வரையு
23. ம் செல்ல சர்வமா
24. னியமாக அனுபவித்து
25. க் கொள்ளவும் இந்த தர்ம
26. த்துக்கு அசிதம் பண்ணி
27. னவன் கெங்கை கரை
28. யில் குருவையும் மாதா பிதா
29. வையும் கபிலையையும் பி
30. ராமணரையும் கொன்ற பா
31. வத்திலே போகக்கடவரா
32. கவும் சத்யம் பொன்னம்பல ந
33. த தொண்டைமானார் காரிய
34. த்துக்குக் கடவார் கற்பூரக் கா
35. லிங்கராயர் எழுத்து

-- இந்தியக் கல்வெட்டு ஆண்டறிக்கை 1925 எண். 515

## 16

இடம் : குறும்பூர் சித்த நாதீசுவரர் கோயில் முன்மண்டபம்

அரசர் : அலைவிலஞ்சாத தொண்டைமானார்

காலம் : 16ஆம் நூற்றாண்டு

செய்தி : திருமாளிகை கட்டிய விபரம் கூறப்பட்டுள்ளது

### கல்வெட்டு

1. ஸ்வஸ்திஸ்ரீ இத்திரு
2. மாளிகை பண்ணி
3. னான் அலைவில் அஞ்
4. சாத தொண்டைமானார்
5. தன்மம்

# 17

இடம் : ஆவுடையார் கோயில் மூன்றாம் பிரகாரம் தியாகராச மண்டபம் முத்துவிநாயகன் சன்னதி அருகில் உள்ள கல்வெட்டு

அரசர் : முத்துவணங்காமுடித் தொண்டைமானார்

காலம் : பிங்கள வருடம் ஆனி மாதம் 23ஆம் நாள், 1737

செய்தி : அச்சுத பூபாலமண்டபம் குறைப்பணியை முடித்தல்

## கல்வெட்டு

1. பிங்கள வருஷம்
2. ஆனி மாசம் 23 தேதி
3. ஸ்ரீமது யிறந்
4. த காலமெடுத்த வ
5. ணங்காமுடி மு
6. த்து தொண்டைமானா
7. ரவர்கள் நாளையி
8. ல் பிரதானி தனமு
9. த்துவீரப்பிள்ளை மு
10. ன்னிலையில் அச்சுத பூ
11. பால மண்டபம் திருப்
12. பணி குறை சங்
13. கிலி பா கல்லு
14. முதல் தெற்கு
15. பெரிய படங்கு
16. ராசகோபால சுவா
17. மி நாட் கூடம்
18. முடித்துவிட்டவர் வா
19. சல் முத்துவி
20. னாயகன் கோ
21. வில் சுபரபாகி தூ
22. ண் உள்பட முடி
23. த்து முன் மண்ட
24. பமும் பாகல் பதி
25. த்து திருப்பணி
26. மணியம் சிதம்ப
27. ரம் பிள்ளை ஆண்டிய
28. ப்ப முத்து பிள்
29. ளை கணக்கு சதா
30. சிவ அப்பன் க
31. ணக்கு ராமலிங்
32. கம் பிள்ளை ஆவு
33. டையப்ப ஆசாரி
34. வயித்தி ஆசாரி
35. அருணாசலம் ஆசா
36. ரி கற்பூரக் கொத்
37. தன் சிதம்பரக்கொ
38. த்தன் இப்படிக்கு
39. இது வினாயகன்
40. துணை

# அறந்தாங்கித் தொண்டைமானார் செப்பேடுகள்

## 1. மஞ்சக்குடிச் செப்பேடு

இருக்கும் இடம் : திருவாவடுதுறை ஆதீனம்

அரசர் : உய்யவந்தான் திருநோக்கழகியான் தொண்டைமானார்

காலம் : 2.2.1327

### மூலம்

1. ஸ்வஸ்திஶ்ரீ கோ மாறபன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் ஶ்ரீகுல சேகர தேவற்க்கு யாண்டு பதின்னா
2. லாவது கும்பநாயற்று பூர்வபக்கத்து நவமியும் சோமவாரமும் பெற்ற ரோகணிநாள் மிழலைக் கூ
3. ற்றத்து பிரம்மதேசம் தனியூர் திருப்பெருந்துறையான பவுத்திர மாணிக்க சதுர்வேதி மங்கல
4. த்து ஆளுடைய தம்பிரானார் தேவகம்மிகளுக்கு கீழ்க்கூற்று மஞ்சக்குடி யுடையான் உய்யவ
5. ந்தான் திருநோக்கழகியார் தொண்டைமானேன் இற்றைநாள் பிடிபாடு பண்ணிக்கு
6. டுத்த பரிசாவது ஆளுடைய தம்பிரானார்க்குத் தலத்தில் திருவந்திக் காப்புத் திருவிளக்கு அமுதுபடி
7. கரியமுது வேண்டும் நித்ய நிமன்தஞக்கும் இக்கோயிலில் திருவாதவூரரை என் பிறந்த நா
8. ள் மாதாமாதம் யித்தீவத்துநாள் எழுந்தருளபண்ணவும் திருமுன்பு திருவாசகமு ஓதி நிச்செயி
9. த்த நியமத்துக்கும் தானமாக குடுத்த ஊராவது வடவெள்ளாறான சுந்திர பாண்டிய வழனாட்

10. டு நான் கொண்டு அனுபவித்து வருகிற ஏயூர்மங்கலம் காராண்மையாகக் குடுத்தவூரில் சதுசீமை

11. யில் எப்பேற்பட்ட சர்வமும் சர்வ மாந்யமாக சந்திராதித்யவற்ச் செல்ல கல்லிலும் செம்பிலும்

12. வெட்டிக் கொள்ளவும் இப்ப(டி) சம்மதித்து பி[டி]பாடு பண்ணிக்குடுத் தேன் ஆளுடைய பரமசாமி

13. தேவ கம்மிகளுக்குத் தொண்டைமானேன் இப்படிக்கு திருநோக்கழகியரான தொண்டைமா

14. ன்னார் எழுத்து அம்பலக்கா[ர]ர் எழுத்து

## 2. பொன்னம்பல நல்லூர்ச் செப்பேடு

இருக்கும் இடம் : திருவாவடுதுறை ஆதீனம்

அரசர் : பொன்னம்பலத் தொண்டைமானார்

காலம் : 10.8.1516

### மூலம்

1. ஸ்வஸ்திஸ்ரீ சகாப்தம் 1438ன் மேல் செல்லாநின்ற தாது சம்வத்சர
2. த்து தக்ஷிணாயநத்து வ[ரு]ஷ ரிதுவில் சிம்மநாயற்று பூர்வபட்சத்து திரயோதசியும் ஆதித்ய வாரமும் ஸ்ர
3. வண நக்ஷதரத்து நாள் மிழலைக் கூற்றத்து நடுவிற் கூற்றம் தனியூர் திருப்பெருந்துறையா
4. ன பௌத்திர மாணிக்க சதுர்வேதி மங்கலத்துநாயனார் ஆளுடைய பரமசுவாமிகளுக்
5. கு அறந்தாங்கி அரசு பொன்னம்பலத் தொ[ண்]டைமானாரோம் நமுடையதேகத்திலே வந்த மர
6. ணரோகம் சத்ய ச்ராத்தமாக உதகபூர்வாக குடுத்த வடவெள்ளாறான சுந்தர பாண்டிய வ
7. ளநாட்டு பனைங்கய நாட்டு வத்தன்னூ ரான பொன்னம்பலநல்லூர் சதுசீர்மையும் ச
8. கிரண்ணியஉதக தாராபூர்வமாக ஆசந்த்ராக்க த்யாகிஆக சர்வ மான்யமாக அனுபவித்துக் கொள்ளவும்
9. யிவூற்கு யிசைந்த பெருனாற் கெல்லையாவது கீழ்பாற்கெல்லை மஞ்சள்க் கரை எல்லைக்கு மேற்
10. கு, தென்பாற்கெல்லை மேலைப்பட்டு எல்லைக்கு வடக்கு, மேல்பாற் கெல்லை திருப்பை வய
11. ல் எல்லைக்கு கிழக்கு, வடபாற்கெல்லை மேப்படியூர்க்கு தெற்கும் ஆக இசைய்ந்த பெருனா

12. ந்கெல்லை உட்பட்ட சகல சமுதாயபிராப்திகளும் சர்வ மானியமாக அனு[பவித்து]க் கொள்ளவு

13. ம் நிதி நிட்சேப ஜல பாஷாண கூப தடாகாஷ்ட போக ஸ்வாமியங்களும் சந்திராதித்யவற் செ

14. ல்ல சர்வமும் சர்வமாந்யமாக அனுபவித்துக் கொள்ளவும். இந்த தம்ம[த்து]க்கு அகிதம் பண்ணின

15. வர்கள் கங்கைக்கரையில் கபிலையும் கராம்பசுவையும் பிராமணரையும் சிசுவையும் மாதாபி

16. தாவையும் கொன்ற பாவத்துலே போவார்களாகவும். சுபம் உ

## 3. திருப்பெருந்துறைச் செப்பேடு

இருக்கும் இடம் : திருவாவடுதுறை ஆதீனம்

அரசர் : பொன்னம்பலத் தொண்டைமானார்

காலம் : 4.5.1519

### மூலம்

1. ஸ்வஸ்திஸ்ரீ சகாப்தம் 1448ன் மேல்ச் செல்லானின்ற பிரமாதி சம்வத் சரத்து உத்தராயநத்து வஸ
2. ந்தரிதுவான ரிஷபநாயற்று பூர்வபக்ஷத்து சஷ்டியும் புதவாரமும் பெற்ற புஷ்யம் நட்க்ஷதிரத்
3. து மிழலைக் கூற்றத்து நடுவிற்க்கூற்று பிரமதேயம் தனியூர் திருப்பெருந் துறையான பவி
4. த்திர மாணிக்கச் சதுர்வேதிமங்கலத்து நாயனார் ஆளுடையபரம சுவாமிகளுக்கு வ
5. டவெள்ளாறான சுந்திரபாண்டிய வழன்னாட்டு இளங் கோநாட்டு அறந்தாங்கி அரசு
6. பொன்னம்பலத் தொண்டைமானார்ரேன் நாமுன்னாள் கோயிற் பண்டாரத்தில் கடனாக வாங்கின பொ
7. ன் 7000 பொன் உ. கலியுகராமன் பொன் 700. ஆக இந்த வகைப்படி பொன்னுக்கு சுக்கில வருஷ
8. முதல் நாளதுவரைக்குப் பல வ[கை]யாலும் கோயிற் பண்டாரத்தில்க் குடுத்த பொன் 2
9. 883 பொன்னும் பணம் 9 உ. இத/ற்/குச் செல்லவேண்டும் பொன் 4116 பொன்னும்
10. பணம் 1 உ. கலியுக இராமன் பொன் 700. இதுக்கு யிந்நாள் இப்பொன்னுக்கு விலைப்பிறமான
11. ம் பண்ணிக்குடுத்த யூராவது வடவெள்ளாற்றுநாட்டு மைய்யூருக்கு பெருநான்

12. கெல்லையாவது, கீழ்பாற்கெல்லை சனாத்தனூர் எல்லைக்கு மேற்கு, தென்பாற்கெல்லை

13. வானவநல்லூர்ப் புரவுக்கு வடக்கு, மேல்பாற்கெல்லை வானவநல்லூர் எல்லைக்கு

14. ம் அமஞ்சாத்த வயலுக்கும் கிழக்கு, வடபாற்கெல்லை தென்னூர் வயலுக்கு வடக்கு ஆக

15. இசையிந்த பெருநான்கெல்லைக் குட்பட்டதும் களக்குடிக்கு பெருநான் கெல்லைக்கு

16. கீழ்பாற்கெல்லையாவன தென்னூர்க் குளத்து வெளிக்குங் கீட் குளத்து வயல் எல்லைக்

17. கும் மேற்குத் தென்பாற்கெல்லை வானவர்நல்லூர் எல்லைக்கும் பாக்கத்தில் எல்லைக்குங் கரு

18. ங்குழிக் குளப்பரப்புரவுக்குங்கீழ் நெடுங்குளப் புரவுக்குங் குடிக்கு மேல் பாற்கெல்லை கருங்

19. குழி நெடுங்குளப் புரவுக்குங் கிழக்கு, வடபாற்கெல்லை விரைப் பரவுக்குந் தெற்கு ஆக இசை

20. ந்த பெருநான்கெல்லைக்கு உட்பட்டதும் பனைஞ்சய நாட்டு மருந்து வய

21. லான ஏகப்பெருமாள் நல்லூ ர்க்கு பெருநான்கெல்லையாவன கீழ்பாற் கெல்லை குறு

22. ங்கரக் கோட்டைப் புரவுக்கும் குருவிப்பட்டுப் (பட்டுப்) புரவுக்கும் மேற்குத் தெ

23. ன்பாற்கெல்லை மண்ணகுடிபுரவுக்கு வடக்கு, மேல்பாற்கெல்லை சுந்திர பாண்

24. டியன்நல்லூர் எல்லைக்கு கிழக்கு, வடபாற்கெல்லை அரையர் குளத்து எ

25. ல்லைக்கு தெற்கு ஆக இசைந்த பெருநான்கெல்லைக்கு உட்பட்டனவும்

26. மேலை விஜைபுரத்துக்கு பெருநான்கெல்லைக்கு உட்பட்டதுக்கு (பொ)

27. மேலை விஜையபுரத்துக்குப் பெருநான்கெல்லையாவன கீழ்பாற்கெ கல்லை த

28. ம்பிரானார் திருநாமத்துக் காணிக்குங் கீழை விஜயபுரத்துக்கு மேற்கு, தென்பாற்கெல்லை கலுங்

29. கரையன் தோட்டப்புரவுக்கு வடக்கு, மேல்பாற்கெல்லை ஆண்டான்புரவுக்குக் கிழக்கு,

30. வடபாற்கெல்லை பள்ளிக்காட்டு எல்லைக்கு தெற்கு ஆக இசைந்த பெருநான்கெல்லைக்கு உட்ப

31. ட்ட நிதி நிக்ஷேப ஜல பாஷாண அக்ஷிணியாகாத்மி ஸித்த ஸாத்யங்களும் இந்த வந்த[னை]படி பொன்னுக்கு

32. ஒக்கூர்ப் புரவில் முட்டவிற்றபொன் உ 4116, பணம் 1க்கும், கலியுக ராமன் பொ

33. ன் 700க்கும். இந்த ஊர்களும் ஒக்கூர் விபோகமும் இந்தப் பொன்னுக்கு விலையாக சந்திராதித்தவல்ச்

34. செல்ல திருநாமத்துக்காணியாக ஸகல ஸமுதாய ப்ராப்திகளும் சர்வ மான்யமாக ஸஹி

35. ரண்யோதக தாராபூர்வமாக உதகம்பண்ணிக்குடுத்தபடி சர்வம் சர்வ மான்யமாக சந்திராதித்ய

36. வற்ச் செல்லத் திருநாமத்துக்காணியாக பற்றி அனுபவித்துக் கொள்ளவும். இப்படி விற்ற ஊரார்களு

37. க்கு அஹிதம் பண்ணினவர்கள் கங்கைக்கரையிலே குராலையும் கராம் பசுவையும்

38. குருவையும் பிராமணரையும் மாதா பிதாவையும் கொண்ண பாவத்திலே போவார்க

39. ளாகவும்

## 4. காணியாட்சிச் செப்பேடு

இருக்கும் இடம் : திருவாவடுதுறை

அரசர் : வணங்காமுடி ஆதொண்டைமானார்

காலம் : 16.5.1530

### மூலம்

1. உ ஆளுடைய பரமசுவாமியாற் துணை உ ஸ்சமஸ்தமன் மகாமண்டலேசுர
2. ன், ஆரியதள விபாடன், பாசைக்கு தப்புவராத கண்டன், மூவராயிர கண்டன், க
3. ண்டநாடு கொண்டு கொண்டனாடு குடாதான், பாண்டிமண்டலத் தாபனாசா
4. ரியன், சோழமண்டல பிறதிட்டாபலாசாரியன், தொண்டமண்டல பிற சண்டன்,
5. பூறுவ தெட்ஷண பச்சிம உத்தர சமுத்திராதிபன், யீளமும் கொங்குமி யாழ்ப்
6. பாண பட்டணமழித்து கெசவேட்டை கண்டருளிய ராசாதிராசன், ராச பர
7. மேசுரன், ராசகெம்பீரன், பரராசசிங்கம், தேவபதியான், தரியலர் களிடியேறு, தாலி
8. க்குவேலி, சொரிமத்திரள்படை துலைத்திடு சிங்கம், சிங்ககொடியான், சினப்புலி, வீர
9. தண்டையான், கற்றவர் புகளும் கலியுக ராமன், ரவிகுல தீரன், முன் காயம் வாங்கி மு
10. னை செயிவார் கண்டன், அன்னசத்திர சோமன், ஜவாய்ப்புலி, எவ்விருது முடையோ
11. ன், சமரிர்ச் சறுக்காத கண்டன், பரிமேல் நகுலன், கரிமேலுதையன் யின்னமும் அநே
12. க பிறதிட்டா பரிபாலகன், கச்சிப் பதியான், ரவிகுல துரந்தரன், ரா வணங்காமுடி

13. ஆதொண்டமானாரவர்கள் மனுநீதி முறமை தப்பாமல் செங்கோல் செலுத்தி பிறு

14. திவிராச்சிய பரிபாலனம் பண்ணியருளாநிண்ட சாலிவாகன சகாற்த்தம் 14

15. 52ற்மேற் செல்லாநிண்ட விகாரி ஸு ஆடி மீ 17 உ யெனது குருவான மிழலைத்

16. தத்து துஞ்சனூர் உடையான் குமுளூர் உடையான் ஆன ரா அச்சுதப்பால ஆதொ

17. ண்டமானாரவர்கள் குடிஆகிய குமுணப் பிளைக்கி அமர(ட்)டக்கி மங்கலம் பொன்(()ப

18. த்திஉடையான், மறிக்கவொண்ணான் ஆவிண நயினான் உலகுஉய்ய வந்த பெருமாள்

19. சின்ன ஆவிண நயினான் உள்பட்டாரோம் காணியாட்சி தாம்புரசாதன பட்டயம் செங்கால்

20. பிள்ளையவர்கள் மண்டிலேற்றி ஆற்ப்பனாத சுவாமி முன்ம்பாக ரா ரெகுனாத பூபால

21. ஆதொண்டமானாரவர்கள் மண்டபத்தில் மலையாந் தவமுனியவர்கள் முன்னிலை நா

22. ம் சித்தூர் ஏத்தி பண்ணிகுடுத்த பரிசாவது, நாங்கள் விக்கிண்ட கிறாமம் அமரடக்கிை

23. யசேந்த பருவூருபத்தில் கோனாப்பட்டி உள்க்கடை உள்பட தாளைஏந்தல் கிறாமம் 1,

24. கானுக்குறிச்சி உள்க்கடை உள்பட பரிவீருமங்கலம் கிறாமம் 1, மரபனைகிறாமம் 1, சின்ன

25. மரபனை கிறாமம் 1, மேல்க்கானடு கிறாமம் 1, ஏம்பல் கிறாமம் 1, புள்ளான்ஏந்தல் கி

26. றாமம் 1 ஆக ஏழு கிறாமமும் நாங்கள் சகல சன சம்மதியாயி விற்ப்போம்எண்டு வி

27. ற்ப்பதர்க்கி [ை]சந்து அவர் கொள்வோம் எண்டு கொள்வதர்க்கி [ை]சந்து நால்வர்முன்

28. பாக சாவி விலை நிட்ஷெயித்தது சுலிமின்னல்பொன் 650 இந்த அறுனூத்தி அன்ம்

29. பது பொன்னும் ஒரு கிளிப்பட காட்டி யேத்தி கயிச்சிலவறப் பத்திக் கொண்ட ப

30. டியினாலே யிந்த ஏழு கிறாமத்துக்கும் னால்பாக்கெல்லைக் குள்பட்ட ஆவ(ர்)

31. ரை கொளுஞ்சி அறுகு த்தாளிவயிப்பு செப்பு மாவடை மரவடை மேனோக்

32. கிய விருட்சம் கீனோக்கிய கிணறு கோவில் குளம் பெருநீர்நிலை சிறுநீர் நிலை நீர்வ

33. ரும் ஆறு தான்போகும் குளக்கால் பறமை வலமை பதிணென் சிவந்திரமு

34. ம் அம்[ப]லம் உம்பளம் சொல் சுவந்திரம் சகலசமுதாய பிராத்தியளும் கல்லும்

35. காவேரியும் புல்லும் பூமியும் சந்திராதித்த வரைக்கும் புத்திரர் பவுத்திர ப

36. ாரம்பரைக்கும் ஆண்டும் அனுபோவித்தும் சீதனம் குடுத்தும் சினேகத

37. ானம் பண்ணியும் வித்தும் ஒத்திவயித்தும் உபய[ங்]குடுத்து ஆண்டு அனுபவித்

38. துக்கொள்ளக் கடவராகவும், இந்தப்படிக்கி ஏழு ஏந்தலும் கிறயசாதனம் பண்

39. ணிக் குடுத்துயிருப்பதால் நெரிஞ்சி தூத்துக் குடியேத்தி திரவியப்பிறயிர

40. ாமாயி கிறாம பரிபாலனம் பண்ணிக்கொள்ளக் கடவராகவும். யிந்தப்

41. படி நாங்கள் அனைவரும் குமுணப்பிள்ளைக்கி கிறயசாதன ப[ட்]டயம்பண்ணிக்

42. குடுத்தோம். யிந்தபடி சாட்சி பொன்னமங்கல பத்துடைய கூ

43. ரியபிள்ளை விளத்துப் பத்துடைய வெகுமானிராயர் இந்தபடி செ

44. ங்கால் பிள்ளை மண்டில் கூடிய அனவரும் கொள்கிண்ட பேர் விக்கி

45. ண்ட பேர்களும் சொல்ல எழுதினேன் மலையாந் தவமுனி காரியத்து

46. க்கு கற்றனான சின்ன ஆவுடையப்பன் கையி நெட்டெழுத்து. யிப்

47. படிக்கி-ரா-துரையவர்களுட உத்தரவின் பேரில் அறந்தாங்

48. கியிலிருக்கும் அறுனாசல பத்தர் மகன் சுப்பிரமணியன் வெட்டெ[ட]ளுத்து ஆதிகேசவர் துணை.

49. மறிக்கவொண்ணான்

50. ஆவண நயினான்

51. சின்ன ஆவண நயினான்

52. உலகுஉய்ய வந்தான்

## 5. நந்தகோபாலர் செப்பேடு

இருக்கும் இடம் : திருவாவடுதுறை ஆதீனம்

அரசர் : இரகுநாதத் தொண்டைமானார்

காலம் : 14.1.1563

### மூலம்

#### முதல் பக்கம்

1. ஸ்வஸ்திஸ்ரீமந் மகாமண்டலேஸ்வரந் அரியராயதள வி
2. பாடந், பாஷைக்குத் தப்புவராயிர கண்டன், மூவராயர்
3. கண்டன், கண்டநாடு கொண்டு கொண்டநாடு குடாதா
4. ன், பூர்வ தக்ஷண பச்சிம உத்தர ஸப்த ஸமுத்திராதிபதி, எம்
5. மண்டலமுங் கொண்டு [ஈ] ழந் திறகொண்டருளிய ரா
6. ஜாதிராஜந், ராஜபரமேஸ்வரந், ராஜமாத்தாண்டந், ரா
7. ஜகெம்பீரந், ராஜாக்கள் தம்பிரான், சகலகுண சம்
8. பந்நந், சப்தபாஸராயந், சகலகலா ப்ரவீணன், ஸங்கீத
9. சாயுஜ்ய வித்யாவினோதன், கெடிகோட்டு மல்லன், கெடி கோ
10. ட்டு ராயந், துலுக்கர்தள விபாடன், துலுக்கர் மோகந் தவிழ்
11. த்தான், வடவரசர் மணவாளர், இளைவரசர் குலைகாறன், ராஜ
12. ாதிராசன், ராஜபரமேஸ்வரன், மேதினியீஸ்வர கண்டந்,
13. கட்டாரி சாளுவன், ஒட்டியர்தள விபாடன், ஒட்டியர்மே
14. ாகந் தவிழ்த்தான், வீரப்ரதாபன், அதல விதல ஸுதல
15. நிதல ரசாதல மகாதல பாதாள வேழு லோக பிரக
16. ண்டன், பாண்டிமண்டல பத்மாசனத்தோன், சோழமண்
17. டல ஸ்தாபனாசாரியன், தொண்டமண்டல பிரதிஷ்டாபனாச
18. ாரியன், மத்தகெஜ பரி சுத்த நகுலன் கிரிதுர்க்க வனதுர்க்க
19. ஜலதுர்க்க பராசகேஸரி அஸ்வபதி கெசபதி தனபதி

20. நரபதியான குமார மல்லிகார்சுன ராயர், விருபா

21. க்ஷிராயர், குமார மகாராயர், அதிபல ராயர், ஸ்ரீ கி

22. ஷ்ண ராயர், தேவ ராயர் அச்சுததேவ மஹாராயர், தம்ம

23. ராயர் ஸதாசிவ ராயர், கிருஷ்ணதேவ மஹாராயர், ராமதே

24. வ மஹாராயர், பிருதிவி ராஜ்யம்பண்ணி அருளாநின்ற

25. சகாப்தம் 1505 இதன்மேல்ச் செல்லாநின்ற பிர

26. மோதூ த்த ஞு  தைய் மீ 17 உ குருவாரமும் அனுஷ ந

27. க்ஷத்திரமும் பஞ்சமியும் சுபநாம யோகமும் பெற்ற

28. சுபதினத்திலே ராயர் காரியத்துக்கு கற்த்தரான அச்

29. சுதப்ப நாயக்கர்அய்யனவர்கள், ஆதொண்டைமா

30. னார் வங்கிஷத்தில் ரெகுனாதத் தொண்டைமானாரவர்க

31. ள் ராஜ்யம்பண்ணி வருகுற னாளையில் அம்ன்பத்தாறு

32. தேசத்தில் இருக்கப்பட்ட பாவமில்லாத குலத்தார், மா

33. யனை வளத்தவர், ஆயகுலத்தோர், யகதிகவி கொ

## இரண்டாம் பக்கம்

34. ண்டவர், ஆ[ய]ற்பாடித் த[ல]லவர், பொங்கிய மதுரையில்ச் சங்

35. கத்தை வென்றவர், முல்லைக்கதிபர், முல்லையந்தார் மா

36. ர்பர், (கெருடக்) கெருடக்கொடி யாதிபர், அவ்வை பாடல் செ

37. காண்டோர், துற்கைபாத சேகரர், முருகனுக்கு குலவை ய

38. ளித்தவர், அரசர் மூவருக் கன்னங் கொடுத்தவர், சோழனு

39. க்கு முடிசூட்டினவர், தக்கனுக்குக் கிறவிடை கொடுத்தவர்,

40. கோகுலம் காவலராகிய அன்பத்தாறு ராஜ்யத்தில் இருக்கு

41. ற நந்த கோபாலர் அனைவரும் பேர்விண்டமாரும் சதுர்வேத மங்

42. கலம் சிவபுரமான திருப்பெருந்துறையிலிருக்கும் நயினாரடியாரில்

43. ஏகாம்பர பிறைசூடும் பண்டாரத்துக்கு தற்ம்ம சாதனப்பட்டை

44. யம் குடுத்த பரிசாவது சகல உறவின்முறையார் புண்ணியமா

45. க செழுமலற் குருந்தில் எழுந்தருளிஇருக்கப்படான்ற ஆவுடைய பர

46. மசுவாமியார்க்கு அபிஷேகம் நெய்வேத்தியம் திருமாலை திருவிளக்கு திருக்க

47. ட்டளை திருமண்டபம் திருனந்தவன திருமடமும் கட்டளையிட்ட படியினாலே

48. ல நடக்கும் சுவத்தியத்துக்கு குடிக்கு ஒருபணமும், எழுத்தாணிக்கு ஒருப

49. ணமும், கவுறு கலசம் பிடித்தவன் அரைப்பணமும், பெரிய

50. வாசல் பல்லக்குக்கு சனுத்துக்கு ஒருபணமும், சில்லறைவாசல்

51. அஞ்சுபணமும், பாளையக்காறர் வாசல் பத்துபணமும், திருக்கலியா

52. ணத்துக்கு மாப்பிள்ளை ஒருபணமும், பெண்வீடு ஒருபணமும், சோ

53. பனத்துக்கு ஒருபணமும், சீமந்த கலியாணத்துக் கொருபணமும் இ

54. ந்தப்படிக்கு சகலரும் குடுக்கக் கடவராகவும். இந்தப்படிக்கு தி

55. ருமாலை (திருமாலை) திருவிளக்கு திருநந்தவனம் திருமண்

56. டபம் திருமடமும் சந்திராதித்த வரைக்கும் புத்திற பவுத்துற பா

57. ரம்பரையும் நடப்பிச்சுக் கொள்ளக் கடவராகவும். இந்ததற்ம

58. மத்தை யாதாமொருவர் பரிபாலனம் பண்ணன பேர்கள்

59. அறுவத்து மூவரும் மாணிக்கவாசகரும் சண்டேசரப் பிள்

60. ளையாரும் பன்னி(த்தி)ரு ஆழ்வாரும் பெற்றபேறு பெறக்கடவர

61. ாகவும். இந்த தற்மத்துக்கு விகாதம் பண்ணின பேர்கள் காசி
62. கெங்கை பிரயாகை திருவேணி சங்கமத்தில் சேது தனுஷ்க்
63. கோடியில் காராம்பசுவையும் பிராமணரையும் மாதாபித
64. ாவையும் குருக்களையும் கொன்ற தோஷத்திலே போக கட
65. வோராகவும். இந்தபடிக்கு நந்த கோபாலாரும் போவிண்
66. டமாரனைவருஞ் சொல்ல இந்த தற்ம சாதனப் பட்டையம்
67. எழுதினேன் திருப்பெருந்துறை மாணிக்கக்கூத்த முதலி
68. யார் எழுத்து. உ சுபமஸ்து. இந்த பட்டையப் படிக்கு யெ
69. ங்கள்ச் சாதி புத்திரான் கண்டியத் திருக்கோடி தேவரம் ப
70. ம் குடாத பேரையும் தற்ம்மத்திலே யீதை பாதை
71. வராமல் நடப்பிக்கவும் உ

## 6. கணக்கன்வயல் செப்பேடு

இருக்கும் இடம் : திருவாவடுதுறை ஆதீனம்

அரசர் : இரகுநாதத் தொண்டைமானார், ஏகாம்பரத் தொண்டைமானார்

காலம் : 15.6.1654

### மூலம்

### முதல் பக்கம்

1. உ சகாப்த்தம் 1575 இதன்மேல் செல்லாநின்ற செய ஷு ஆனி மீ 17உ ஸ்ரீமது திரு
2. மலைச்சேதுபதி காத்ததேவரவர்கள் காரியத்துக்கு கத்தரான மணலூரில்லிருக்கும் அட்டவணை
3. வேலப்பபிள்ளை மகன் குமாரசுவாமிக்கு அறந்தாங்கியிலிருக்கும் பிள்ளைப் பேரில்
4. கூன்காரித்தேவனும் சிந்தான் புலியத்தேவனும் இருவகைபேரும் எங்கள் காணியாவுது
5. கணக்கன்வயல் விலைப்பிறமானம் பண்ணிக்குடுத்த பரிசாவுது. ஊரது புரவு பெருநா
6. ன்கெல்லை பேசமங்கலகுளத்துக்கு மேற்கு வடபாற்க்கெல்லை ஆயித்தப் பட்டிக்கு தெற்கு மேற்பாக்
7. கெல்லை னாயிலிவயலுக்கு கிழக்கு தென்பாக்கெல்லை நெட்டி ஏம்பல் கருங்குழிதாவுக்கு வடக்கு இந்த பெ
8. ருநான்கெல்லைக்குள்ப்பட்ட நஞ்சை புஞ்சை உள்பட கொள்வாருளரோ கொள்வாருளரோவென்று
9. நான் முற்க்கூற அவர் பிற்க்கூற என்மொழிகேட்டு எதிர்மொழி மொழிந்து விற்பதுக் கிசைந்து
10. அறந்தாங்கி நாட்டார் முன்பாகவும் திருப்பெருந்துறை பலநடுவர் முன்பாகவும் விலைநிட்சம் பண்
11. ணின மதுரைமி[ன்]னல் பொன் 76. இந்த பொன் எழுபத்தாறு பொன்னும் ஏகாம்பர தொண்டைமானார்

12. க்கு வாங்கி குடுத்தது பொன் 50. கூன்காரித்தேவனும் சிந்தான் புலியனும் வாங்கினது பொன் 26. ஆக பொன்

13. 76 பொன்னும் காட்டி ஏத்தி ஒருமுதலாக என்கய் கீளும் அவர்கை மேலாகவும் பத்திக்கொண்ட

14. படியினாலே யிதுவே ஓலையும் சாதனமாக ஆண்டும் அனுபவித்தும் வித்தும் ஒத்திவைய்

15. த்தும் சீதனப்பிறாத்தி கொடுத்தும் சந்திராதித்தவரைக்கும் ஆண்டு கொள்ளக் கடவதா

16. கவும் இதாளுமிடத்தில் தடையிடை வந்தால் நானே தடை தீத்துக் குடுப்போமாகவும்

17. இந்தபடிக்கு ஆடியபாத பண்டாரத்தின் கட்டளைக்கு காரிய கத்தரான ராவுத்த பண்டாரத்தின்

18. பாரிசமாக திருவனந்த கட்டளைக்கு சேத்து கட்டளை யிட்டோம். இந்தபடிக்கு அட்டவணை வே

19. லப்பபிள்ளை மகன் குமாரசுவாமியா பிள்ளைக்கு கூன்ங்காரித் தேவனும் சிந்தான்புலியத்

20. தேவனும் சம்மதித்து கிறாமம் சாதனம் பண்ணிக்குடுத்தேன். இந்த சாதனம் எழுதின

21. து வீரப்பபிள்ளை ஆவான் எழுத்து. இந்தபடிக்கு சாஷ்ச்சி மலையந்த முதலியார். அறந்தா

22. ங்கியிலிருக்கும் காமாட்சித்தேவன். ஆவுடையார்கோவில் செல்லப் பெருமாளய்யன்.

23. இந்த கிறாமத்துக்கு யாதாம் ஒருத்தர் தடைகிடை பண்ணினால் திருமலை சேதுபதி காத்த தேவர்

24. காரியத்துக்கு கத்தரான அட்டவணைபிள்ளைமாரும், ரெகுனாதத் தொண்டைமானாரவர்

25. கள் காரியத்துக்குகத்தரான பாண்டித்தேவனும் தன்மத்துக்கு இடக்கடவதாகவும். இந்த தன்மம்

26. ஆவுடைய பரமசுவாமியார்க்கு திருவனந்தல் கட்டளைக்கு கட்டளை யிட்டோம்

## இரண்டாம் பக்கம்

27. இந்ததன்மம் யாதாம் ஒருவர் பரிபாலம் பண்ணினவர் நூறு லிங்கப்பிற திட்டையும் நூறு

28. கண்ணியாதானமும் நூறு கோதானமும் நூறு பூதானமும் பண்ணினபலன் அடைவார்

29. கள். இந்த தன்மத்துக்கு யாதாம்ஒருவர் அகிதம் பண்ணினவர்கள் கெங்கைக்கரையிலே

30. காராம்பசுவையும் மாதாபிதாவையும் குருவையும் கொண்ண தோஷத்திலே போகக

31. டவராகவும்

## 7. ஏனாதிச் செப்பேடு

இருக்கும் இடம் : அரசு அருங்காட்சியகம், சென்னை

அரசர் : அருணாசல வணங்காமுடித் தொண்டைமானார்

காலம் : 12.4.1716

### மூலம்

### முதல் பக்கம்

### ஸ்ரீராம ஜயம்

1. ஸ்வஸ்தி
2. ஸ்ரீமன் மகாமண்டலேசுரன், அரிய ராயரதள விபாடன், பாஷைக்குத் தப்புவராத
3. மூவ ராயிர கண்டன், கண்டனாடு கொண்டு கொண்ட னாடு குடாத மண்டலீகர் க
4. ண்டன், எம்மண்டலமுங் கொண்டு யீழந் திறைகொண்டருளிய ராசாதிராச
5. ன், ராசமாற்தாண்டன், ராசகெம்பீரன், ராசவேசியர் புசங்கரன், ராசாக்க
6. ள்தம்பிரான், துலுக்கர்மோகந் தவிழ்த்தான், ஒட்டியர்தள விபாடன்,
7. ஒட்டியர்மோகந் தவிழ்த்தான், அசுவபதி கெசபதி நரபதி ராமராயர், கிஷ்
8. ணராயர், ராமதேவ மகாராயர், திருமலைராயர், கோவிந்தராயர், அச்சுதராய
9. ர், செலுவிதராயர் இவர்கள் ராச்சிய பரிபாலனம் பண்ணிச் செல்லா நின்ற ஸ்வஸ்தி
10. ஸ்ரீ சாலிவாஹந சகாப்தம் 1638 இதன்மேல்ச் செல்லாநின்ற தும்மு
11. ஹி நாம ஸம்வத்ஸரமும் உத்தராயணமும் வசந்தருதுவும் சைத்ரமாஸமும்

12. அபரபக்ஷமும் பதினாலாந்தேதியும் ஸௌம்யவாஸரமும் சர்வமாவா
13. ஸ்யையும் அஸ்வதி நக்ஷத்ரமும் ப்ரீதிநாமயோகமும் நாகவாகரண
14. மும் கூடின இப்படிக்கொத்த சுபதிநத்தில் சூர்யோபராக புண்ய
15. காலத்தில் மறுமன்னியாபிகர் கண்டன், துஷ்ட்டரில்த் துஷ்
16. ட்டன், துஷ்ட்டர்மோகந் தவிழ்த்தான், வங்கிநாறாயணன்
17. வெட்டிலும் பச்சை வெதுப்பிலுங் கோணல், கோணலி
18. ல்க் கோணல் இருமுடி கோணல், துஷ்ட்டராட்டந் த
19. விழ்த்தான், தலைமலைகண்டான், பிணமலைகண்டான்
20. ஆத்தியும் புத்து மசையிலு மசையாதான், ஈழந்திறைகொண்ட
21. ருளிய ராசாதிராசன், திருவேங்கடவர் கய்யில்த் திருச்சக்கர
22. ம் பெத்தவன் அருங்குளநாத ரடியிணை தொழுவோன், பழம்பதி
23. நாதர் பாத மறவாதான், ஆதிகேசவர்பாத மனுதின மறவாதவன்,
24. ஆவுடையார்பாதம் அடியிணை தொழுவோன், மலையாந்தவமுனி
25. வர்பாத மறவாதான், இளங் கோனாடு மிழலைக்கூத்தத்தில் வெ
26. ள்ளாறுடையவன், ஆட்டுக்கு யானை குடுத்தவன், அனுமக்கொ
27. டி புலிக்கொடி கெருடக்கொடி விருது உடையவன், ஆதண்டை
28. மாலை யணிந்தோன், ஆழ்வார்பாட லவ்வை தமிழ்க் கொண்ட
29. வன், கச்சி மயிலை மல்லை ஆறை ஆதிபன், தொண்டமண்ட
30. ல ஸ்தாபனாசாரியன், சூரிய வங்கிச திலகன், அறந்தாங்கித்
31. தொண்டை அரசர் ஆண்டவராய ரெகுநாத ஆவுடைத் தொண்

32. டைமானார் புத்திரன் ஸ்ரீமது அருணாசல வணங்காமுடித் தொ

33. தாண்டைமானாரவர்கள் நாநா கோத்ரத்து நாநாசூத்ரத்து நாநாச

34. ாகாத்யாயராந ஸேது மார்க்கத்தில் ஏனாதிக்கி ப்ரதிநாமம

35. ான அருணாசல ஸமுத்ரம் அசேஷ வித்வந் மஹாஜநங்களுக்கு

36. ஸஹ்ரண்யோதக தாராபூர்வமாக பூதாந தர்ம்ம சாஸ

37. ந பட்டயம் பண்ணிகுடுத்தபடி. இத்தனாள்த் தங்களுக்குக் கட்ட

38. ளையிட்ட கணாஸங்கை பாகம் 50. இந்த பாகம் அன்பது

39. க்கு அஞ்சுரெண்டுசீமை யிக் கொடிவளநாட்டில் ஏனாதி, ஒ

40. ச்சகுடி, காட்சிகுடுத்தான்வயல், மேல்ப்படி உள்வாய் ராவுத்த

41. ன்வயல், பள்ளகுடியேந்தல், மேல்படி யுள்வாயேந்தல் சுள்ளு

42. க்குஞ்சி[வ]யல், நென்மேலி இதற்கு எல்லையாவது சமுத்திரத்துக்குமேற்

43. கு, பெருங்கோளியாத்துக்கு வடக்கு, ராவுத்தன்வயல்த் தெற்குப்ப

44. ாடோடிக்கும் பள்ளுகுடிவயல்த் தெற்குப் பாடோடிக்கும் வடக்கு, அ

45. ரும்பழிச்சி அய்யனார் கோவிலுக்கும் நன்மருங்கூர் வயல் எல்லைக்கு

46. ம் கிழக்கு, ஒட்டச்சாத்தன் வயலுக்குக் கிழக்கு, அழகன்வயலுக்குக்கி

47. ழக்கு, காரியுடையான் வடவாய்க்கால்ப் பாடோடிக்குத் தெற்

48. கும், நென்மேலிக்கெல்லையாவது திருவப்பாடிக்கு மேற்கு, லக்க

49. மங்கலம் வாய்த்தலைக்கு வடக்கு, திருமான்சோலைக்கும் ஏகப்பெரு

50. மாள்நல்லூ ருக்கும் கிழக்கு, அத்தாணி புத்தகுளம் தென்கரைக்குத் செ

51. தற்கு, இன்னான்கெல்லைக்குள்ப்பட்ட நஞ்சை புஞ்சை மாவடை மர

52. வடை நத்தம் படுகை செய்த்தலை திடல் மேல்னோக்கியமரம் கீழ்

53. நோக்கிய கிணறு எப்பொருள்ப்பட்ட சகல சமுதாய ப்ராப்தியும்

## இரண்டாம் பக்கம்

54. நிதி நிக்ஷேப ஜல தரு பாஷா ணாக்ஷிண்ய ஸித்த ஸாத்யமென்று செ

55. சால்லப்பட்ட அஷ்டபோக தேஜ ஸ்வாமியங்களுக்கும் தாநாதி விநிமய

56. விக்ரயங்களுக்கு யோக்யமாக ஆசந்திரார்க்க ஸ்தாயியாக புத்ர பௌத்ர ப

57. ாரம்பரைக்கும் ஸர்வமானியமாக அநுபவித்து கொள்ள கடவராகவும். இ

58. ந்தபடிக்கு அருணாசல சமுத்திரம் அசேஷ வித்வந் மஹாஜநங்களுக்கு அரு

59. ணாசல வணங்காமுடி தொண்டமானாரவர்களோம். இந்த தற்

60. மத்தை பரிபாலனம் பண்ணினவர்கள் காசியிலேயும் ஸேதுவி

61. லேயும் கோடி சிவலிங்க ப்ரதிஷ்டையும் கோடி ப்ரம ப்ரதிஷ்

62. டையும் கோடி விஷ்ணு ப்ரதிஷ்டையும் யக்ஞா திருதிகள் பண்ணின

63. பலங்களையும் அடைவாராகவும். ஸ்வதத்தாத்வி குணம் புண்யம் பரதத் த

64. ாநு பாலநம் பரதத்தாப ஹாரேண ஸ்வதத்தம் நிஷ்பலம் பவே

65. து: தாந பாலந யோர்மத்யே தாநா ஸ்ரயோநு பாலநம் தா

66. நாத் ஸ்வர்க்க மவாப்நோதி பாலநாதச்சுதம் பதம்: ஏகைவ ப

67. ஹிநி லோகே ஸர்வேஷா மேவ பூபுஜாம் நஹோராஜ்யா நகர

68. க் ரஹ்யா விப்ர தத்தா வஸ-ந்தரா: இந்த தற்மத்துக்கு யாதாமொ

69. ருத்தர் அஹிதம் பண்ணினவகள் கெங்கைக்கரையிலே கார

70. ாம் பசுவைக்கொண்ண தோஷத்திலேயும் பிரமஹத்யாதி மஹா

71. பாதகங்களையும் பண்ணின தோஷத்தில் போகக்கடவர்.

72. இந்த தற்[ம]த்தை பரிபாலனம் பண்ணினவர்கள் ஸகல சாம்ராஜ்யா

73. திபத்யத்தையும் ஸகல விஜயத்தையும் அடையக்கடவராகவும்.

74. ஸத்யம்

75. தஞ்சாவூர் சில்பாசாரி

76. னாறாயணன் கையி

77. யெழுத்து

78. பூமிம்ய: ப்ரதிக்ருண்ணாதி பூமிம்யஸ்துப்ரய

79. ஸ்வதி தாவுபௌ புண்ய கர்ம்மாணௌ வம்சந்தி பா

80. லந பாலநௌ

## 8. கீழ்ப்பாப்பனூர்ச் செப்பேடு

இருக்கும் இடம் : திருப்பனந்தாள் காசிமடம்

அரசர் : அருணாசல வணங்காமுடித் தொண்டைமானார்

காலம் : 16.9.1728

### மூலம்

### முதல் பக்கம்

### ஸத்யம்

1. உ ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாஹன சகாப்தம் 1651 யிதன்மேல்ச் செல்லாநி
2. ன்ற கொல்லம் கீலக ஷு புரட்டாசி மீ 16 உ சுக்கிரவாரமும் அஷ்ட்டமியும் மூலாநஷ்செ
3. த்திரம் சுபயோக சுபகரணமும் கூடின சுபதினத்தில் சுவஸ்திஸ்ரீமன்
4. மகாமண்டலேசுரன், அரியராயதள விபாடன், பாஷைக்கு த
5. ப்புவராய கண்டன், மூவராய கண்டன், கண்டநாடு கொண்டு கொண்ட
6. நாடு கொடாதான், பாண்டிமண்டல ஸ்தாபனாசாரியன், சோழமண்
7. டலா திஷ்ட்டாபநாசாரியன், ஈழமுங் கம்பளமும் யாட்பாணராயன் பட்டண
8. மும் எம்மண்டலங்கொண்டு கெசவேட்டையாடி அருளிய ராசாதிராசன்,
9. ராசபரமேசுரன், ராசமாத்தாண்டன், ராசகெம்பீரன், ஒட்டியர்தள விபாடன், ஒ
10. ட்டியர்மோகந் தவிள்த்தான், துலுக்கர்தள விபாடன், துலுக்கர்மோகந் தவிள்த்தான்,
11. அசுவபதி கெசபதி நரபதி தனபதி ஸ்ரீ பூபதிராயர், ஸ்ரீபுசபெலராயர், ஸ்ரீராமராயர்,

12. ஸ்ரீகிஷ்ணராயர் யிப்படிப் பிறிதிவிராச்சியம் பண்ணி அருளாநின்ற

13. தொண்டமண்டல பரிபாலநாகிய மல்லை மயிலை கச்சி ஆறையம்பதி

14. யான், பாலார்உடையோன், பாக்கியசம்பன்னன், வம்மலையுடையோன், சங்

15. கு சக்கரம் தரித்தோன், கெருடக்கொடி அநுமக்கொடி புலிக்கொடி சிங்கக்

16. கொடியுடையோன், அத்தியும் புத்தும் அசையினும் அசையான் அலையில் அஞ்

17. சாதவன், ஆதொண்டை மாலை புனைவோர், கலிங்கத் திறைகொண்டா கருணாகர

18. ன், சேமனை வென்ற செயதுங்கன், ஆட்டுக்கானை அளித்தவன், புத்தியில் யூகி, பொரு

19. மையில் தருமன், கொடைக்கு கர்ன்னன், குதிரைக்கு நகுலன், அவ்வை

20. பாடல் அன்புடன் பெத்தோன், ஆள்வார் பாடலில் அநுதினம் வந்தோன்,

21. சூரிய குலத்தில் தோன்றிய வள்ளல் ஸ்ரீமது அருணசல வணங்காமுடி

22. தொண்டைமானாரவர்கள் தருமபுரம் திருஞான சம்மந்த பண்டாரமர்

23. கள் சீஷரான காசிவாசி தில்லைநாயக தம்பிறான் பாரிசமாக

## இரண்டாம் பக்கம்

24. காசியிலே நம்முடைய மடத்திலே அன்னதானம் பண்ணி

25. வரச்சொல்லி தாம்பிற சாதன பட்டையம் கட்டளையிட்டது. கிராமமா

26. வது வெள்ளாம்பத்தில் மிழலை நாட்டில் வெள்ளூர்மாகாணத்தில் சேர்ந்

27. த கீள் பாப்பனூர் ஊரது புரவு நஞ்சை புஞ்சை திட்டு திடல் மாவட மரவ

28. ட உள்பட்ட நாங்கெல்லையும் சறுவமானியமாக கட்டளையிட்ட படியினாலே

29. காசியில் நம்முட மடத்திலே பிராமண போசனம் மயேசுரபூசை னந்தவ

30. ானமும் சகலமும் தாஷ்சி வாறாமல் தர்மம் பரிபாலனம் பண்ணிக் கொண்டு

31. சுகத்திலேயிருக்கவும். யிந்த கிறாமத்தில் பெட்டி சொன்னாதாயம் உள்பட்ட சறுவம

32. ானியமாக கட்டளையிட்டபடியினாலே சந்திராதித்தர் வரைக்கும் கல்லுங்க

33. ாவேரியும் புல்லும் பூமியும் உள்ளவரைக்கும் ஆண்டு அனுபவித்துக் கொண்

34. டு தர்மம் பரிபாலனம் பண்ணிக்கொண்டு சீஷ பாரம்பரையாய்

35. வரக் கடவோமாகவும். உ யிந்த தற்மத்துக்கு யாதாமொருத்தர் யிதவு பண்ணி பரி

36. பாலனம் பண்ணினவர்கள் கோடி சிவலிங்கப் பிறதிஷ்டை கோடி பிற்ம

37. பிறதிட்டை பண்ணின பலத்தை அடைவராகவும். யிந்த தன்மத்துக்கு யா

38. தொருத்தர் அதிதம் பண்ணின பேர்கள் காசியிலேயும் சேதுவிலேயும் காறாம்

39. பசுவையும் பிறாமணரையும் வதைபண்ணின தோஷத்திலே போவாராக

40. வும். உ

41. ஸ்வதத்தாத்வி குணம் புண்யம் பரதத்தாது பாலநம் பரதத்தாப ஹாரேண

42. ஸ்வதத்தம் நிஷ்பலம் பவேது. ஸ்வதத்தாம் பரதத்தாம் வயோகரேத் வசுந்

43. தரா ஷஷ்டி வர்ஷ சகஸ்ராணி விஷ்டாயா ஜாயதே கிரிமி

44. யிந்தப்படிக்கு தாம்பிற சாதனம் பட்டையம் கட்டளையிட்டோம் ஸ்ரீமது அருணா

45. ச்சல தொண்டைமானாரவர்கள் காசிவாசி தில்லை நாயக தம்பிரானுக்கு

46. சுபமஸ்து

## 9. மணமேல்குடிச் செப்பேடு

இருக்கும் இடம் : திருவாவடுதுறை ஆதீனம்

அரசர் : அருணாசல வணங்காமுடித் தொண்டைமானார்

காலம் : 26.10.1731

### மூலம்

#### ஸத்யம்

1. சொஸ்துஸ்ரீமன் மகாமண்டலேசுவரன், அரியராயிரதள விபாடன், பாஷைக்குத் த
2. ப்புவராத கண்டன், மூவராயிர கண்டன், கண்டனாடு கொண்டு கொண்ட னாடு கொட
3. ாதான், பாண்டிமண்டலத் தாபானாசாரியன், சோழமண்டலத்திஷ்டாப னாசாரி
4. யன், ஈளமுங் கம்பளமும் யாட்பாணராயன் பட்டணமும் எம்மண்டலமுங் கொண்
5. டு கெசவேட்டையாடியருளிய ராசாதிராசன், ராசபரமேசுவரன், ராசமாத்த
6. ான்டன், ராசகெம்பீரன், ஒட்டியர்தள விபாடன், ஒட்டியர்மோகந் தவிர்த்தா
7. ன், துலுக்கர்தள விபாடன், துலுக்கர்மோகந் தவிர்த்தான், அசுபதி கெசபதி நரபதி தன
8. பதி ஸ்ரீராமராயர், ஸ்ரீகிருஷ்ணராயர் இப்படிப் பிறிதிவிராச்சியம் பண்ணி அருளாநி

9. ன்ற சகாத்தம் உ 1654 இதின்மேல்ச் செல்லாநின்ற கொல்லம் வி

10. ரோதிகிறுதி ஸு அற்பசி மீ 24உ மங்களவாரமும் சத்தமியும் திருவோண ந

11. ட்செத்திரமும் சுபயோக சுபகரணமுங் கூடின சுபதினத்தில் தொண்டை

12. மண்டல பரிபாலன், மல்லை மயிலை கச்சி ஆறையம்பதியான், பாலாறு டையோன்,

13. பாக்கிய சம்பன்னன், ஆதொண்டை மாலை யன்புடன் புனைந்தோன், சங்கு

14. சக்கரமுந் தான்பெற்றுயர்ந்தவன், கெருடக்கொடி சிங்கக்கொடி புலிக்கொ

15. டி அனுமக்கொடி யுடையோன், அவ்வை பாடல் செவ்வித

16. ாய்ப் புனைந்தோன், ஆழ்வார் பாட லன்புட னுகந்தோன், கலிங்கந் தி

17. றை கொண்ட கருணாகரன், மழவரை வென்றோன், தலைகண்டோன், ஆத்தியும்

18. புத்தும் அசையினு மசையான், சேமனைவென்ற செயதுங்கன், கொடையி

19. ல்க் கற்னன், குதிரைக்கு நகுலன், பொறையில்த் தருமன், புத்தியில் யூகி, அரங்குள

20. னாதர் பதம்பணிந்தேற்றுவோன், பழம்பதினாதர் பாதம்பணிவோன், ஆருரர்பாதம் அனு

21. தினம் பணிவோன், ஆவுடையார்பதம் அனுதினம் மறவோன், சூரியகுலத்தில்த் தோ

22. ன்றிய வள்ளல் ஸ்ரீமது அருணாசல வணங்காமுடித் தொண்டைமானாராவர்கள் திருவா

23. வடுதுறைப் பண்டாரமவர்களுக்கு மயேசுர பூசைக்குக் கிராமத்துக்குப் பட்டையம் கு

24. டுத்தபடி கிறாமமாவது மணமேல்க்கொடி மாகாணத்தில் மணமேல்க்கொடி

25. க்குத் தெற்கு, ஆயிப்பட்டணக்கு மேற்கு, மண்ணச்சிபட்டணம் வெட்டும் பெருமாள் Ⓒ

26. காட்டைக்கு வடக்கு, மூலைவயலுக்குக் கிழக்கு தப்பாதான்வயல் நஞ்சை புஞ்சை தி

27. ட்டுத் திடலுள்பட ஊரதுபுரவு குளப்பிறமாணப்படிக்குச் சறுவமானியமா

28. கக் கட்டளையிட்டபடியினாலே இதுவே பட்டையமாகக் காட்டிக்கொண்டு கீழ்நோக்கி

29. ய கிணறும் மேல்நோக்கிய விருட்சமும் உள்ளவரைக்கும் சந்திராதித்தவரைக்கும் ஆண்டனுபவித்துக் கொண்

30. டு மயேசுரபூசை நடத்திவிச்சுக்கொண்டு சுகத்திலேயிருக்கவும். இந்தத் தற்மத்தை யா

31. தாமொருத்தர் பரிபாலனம் பண்ணினபேர்கள் அனேகம் கோதான பூதான கன்னிகாதானம்

32. அக்கிறாகரப் பிரதிஷ்ட்டை பண்ணினபலன் பெற்றுக் கயிலாசிவாசியா யி

33. ருப்பார்கள். இந்தப்படிக்கு இந்தப் பட்டையம் எழுதின நன்மைக்கு அட்டவனை வீரப்பன்

34. கைய்யெழுத்து. உ

## இரண்டாம் பக்கம்

35. இந்தத் தன்மத்தை யாதாமொருவர் பரிபாலனம் பண்ணி

36. னபேர் கோடி கன்னிகாதானம் பண்ணினபலன் பெறுவா

37. ர்கள். அகுதம் பண்ணினபேர் கெங்கைக் கரையிலே கார

38. ம் பசுவையும், சேதுக்கரையிலே பிராமணனைக் கொன்ற

39. தோஷத்திலே போவாராகவும். உ ஆவுடையார் துணை.

40. இந்த பட்டையம் யெளுதி[ன]வன் ஆவு[டை]யார் கோவில்யிருக்கும்

41. மகிழ்ராவணம் ஆசாரி -உ

## 10. அழுஞ்சியேந்தல் செப்பேடு

இருக்கும் இடம் : திருவாவடுதுறை ஆதீனம்

அரசர் : முத்து வணங்காமுடித் தொண்டைமானார்

காலம் : 17.1741

### மூலம்

### ஆவிடையாரே துணை

1. சொஸ்தஸ்ரீவன் மகாமண்டலேசுரன், அரியராயிர தள விபாடன், பாஷை
2. க்குத் தப்புவராத கண்டன், மூவராயர கண்டன், கண்டநாடு கொண்டு
3. கொண்டநாடு கொடாதான், பாண்டிமண்டல ஸ்தாபனாசாரியன், சோழம
4. ண்டலத்தில் தாபனாசாரியன், ஈளமுங் கம்பளமும் யாள்ப்பாணப் பட்டணமும்
5. யெம்மண்டலமுங் கொண்டு கெசவேட்டையாடியருளிய ராசாதிராசன், ரா
6. ச பரமேசுரன், ராசமாத்தாண்டன், ராசகெம்பீரன், ஒட்டியர்தள விபா
7. டன், ஒட்டியர்மோகந் தவிர்த்தான், துலுக்கர்தள விபாடன், துலுக்கர்
8. மோகந் தவிர்த்தான், அசுபதி கெஜபதி நரபதி தனபதி ஸ்ரீராமராயர், ஸ்ரீகி

9. ஷ்ணராயர் இப்படிப் பிருதிவி ராச்சியம் பரிபாலனம் பண்ணியருளாநின்ற

10. சகாற் தம் 1663 இதன்மேற் செல்லாநின்ற துன்மதி ௵ ஆடி மீ 1 உ

11. புதன்கிழமை தெட்சணாயனத்தில்க் கிரிஷ்மரிதுவில் அமாவாசையும்

12. புணர்பூச நட்செத்திரமும் விதிபாதநாம யோகமுஞ் கவுளிகரணமு

13. ஞ் சுபயோக சுபதினத்திற் கூடின புண்ணியகாலத்திற் பெற்ற தின

14. த்தில்த் தொண்டைமண்டல பரிபாலனன், மல்லை மயிலை கச்சி ஆறையம்

15. பதியான், பாலாறுடையான், பாக்கியசம்பன்னன், ஆதொண்டை மாலை

16. யன்புடன் மிளைந்தோன், சங்கு சக்கரமுந் தான்பெற்றுயர்ந்தோன், கெரு

17. டக்கொடி சிங்கக்கொடி புலிக்கொடி அனுமக்கொடி யுடையோன்,

18. அவ்வை பாடலது செவ்விதாய்ப் புனைந்தோன், ஆள்வார் பாடலை யன்பு

19. டனுவந்தோன், கலிங்கந் திறைகொண்ட கருணாகரன், மழவரை வென்

20. றோன், தலைகண்டோன், அத்தியும் புத்து அசையினுமசையான், சேம

21. னை வென்ற செயதுங்கன், கொடைக்குக் கற்னன், குதிரைக்கு நகுலன், பொறு

22. மையிற் றருமன், புத்தியில் யூசி, அரங்குளநாதர் பதம்பணிந்துறுவோன்,

23. பழம்பதிநாதர் பதம்பணி பெறுவோன், ஆவுடையார்பாதமனு

24. தினம் பணிவோன், சூரிய குலத்தில்த் தோன்றிய வள்ளல் ஸ்ரீம

25. து முத்து வணங்காமுடித் தொண்டைமானாரவர்கள் திருவாவடுது

26. றைப் பண்டாரச் சன்னதி யவர்களுக்கு மஹேசுர பூசைக்குக்

27. கிறாமத்துக்குப் பட்டையங் கொடுத்தபடி கிறாமமாவது வெ

28. வள்ளாம் பத்தில்க் கீழ்கரைக்குத் தெற்கு வேட்டகாறன் வயலுக்கு

29. வடக்குத் திருநாராயண மங்கலத்துக்கு மேற்கு கட்டுக்கரைக்கு

30. க் கிழக்கு இன்னான்கெல்கைக் குள்பட்ட அமுஞ்சியேந்தல் நஞ்

31. சை புஞ்சை திட்டுத் திடலுள்பட ஊர்ப்புரவுநிலங் குளப்பிரமாண

32. ம்படிக்குப் பெட்டிவரி சொற்னாதாயம் பலவரியுள்படச் சறுவமா

33. னியமாகத் தாம்பிர சாதனங் கட்டளையிட்டபடியினாலே கீழ்நோக்

## இரண்டாம் பக்கம்

34. கிய கிணறு மேல்நோக்கியவிருட்சமும் நிதி நிட்சேப முள்படச்

35. சந்திராதித்தர் வரைக்கும் ஆண்டனுபவித்து அன்னதானம் ந

36. டத்திவிச்சுக்கொண்டு சுகத்திலேயிருப்பார்களாகவும்.

37. இந்தத் தர்மத்தை யாதாமொருவர் பரிபாலனம் பண்ணி

38. ணபேர்கள் அனேக கோதானம் பூதானங் கன்னிகாதானம்

39. அனேக சிவப்பிறதிஷ்டை பண்ணின பலன் பிறந்து சுகத்

40. திலேயிருப்பார்கள். இந்தத் தற்மத்தை யாதாமொருவ

41. ர் விகாதம் பண்ணின பேர்கள் கெங்கைக் கரையிலே அ

42. னேக கோடி காராம் பசுவையும் அனேக கோடி பிராம

43. ணரையும் மாதா பிதாவையும் வதைத்த தோஷத்திலே

44. ல போவார்களாகவும். இந்தத் தாம்பிர சாதனப் பட்டை

45. யம் அட்டவனைச் சிதம்பரநாதன் கையெழுத்து.

# அறந்தாங்கி அரசு தொண்டைமானார் பற்றிய ஆவணங்கள்

## கல்வெட்டு ஆண்டறிக்கைகள்

1. இந்தியக் கல்வெட்டு ஆண்டறிக்கை 1914 எண் 312, 313
2. இந்தியக் கல்வெட்டு ஆண்டறிக்கை 1916 எண் 118-129; 132
3. இந்தியக் கல்வெட்டு ஆண்டறிக்கை 1924 எண் 201
4. இந்தியக் கல்வெட்டு ஆண்டறிக்கை 1925 எண் 511, 512, 513, 515, 519
5. இந்தியக் கல்வெட்டு ஆண்டறிக்கை 1926 எண் 114, 115
6. இந்தியக் கல்வெட்டு ஆண்டறிக்கை 1930 எண் 232-235; 237, 238, 240
7. இந்தியக் கல்வெட்டு ஆண்டறிக்கை 1936 எண் 116
8. இந்தியக் கல்வெட்டு ஆண்டறிக்கை 1942 எண் 211, 213, 215, 216, 217, 220, 221, 222, 223, 224, 226, 227

### தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி

எட்டாம் தொகுதி எண் 434 ஆண்டறிக்கை எண் 146 ஆண்டு 1903

### புதுக்கோட்டை மாநிலக் கல்வெட்டுக்கள்

எண்கள் 728, 737, 750, 784, 794, 820, 823, 830, 832, 844, 845, 849, 850, 874, 895

### செப்பேடுகள்

1. உய்யவந்தான் திருநோக்கழகியார் தொண்டைமானார் 1328
2. சூரியதேவர்த் தொண்டைமானார் 15 நூ.
3. பொன்னம்பலத் தொண்டைமானார் 1516, 1518, 1519, 1526, 1534

4. வணங்காமுடி ஆதொண்டைமானார் 1530

5. இரகுநாதத் தொண்டைமானார் 1563

6. மெய்நின்ற பெருமாள் தொண்டைமானார் 16 நூ.

7. ஆளுடைய ரகுனாத வணங்காமுடித் தொண்டைமானார் 1607

8. இரகுநாதத் தொண்டைமானார் 1654

9. அழகப்பத் தொண்டைமானார் 1680

10. ஆண்டவராய வணங்காமுடித் தொண்டைமானார் 1696

11. அருணாசல வணங்காமுடித் தொண்டைமானார் 1716, 1726, 1728, 1731

12. வணங்காமுடித் தொண்டைமானார் 1739

13. முத்து வணங்காமுடித் தொண்டைமானார் 1740, 1741

14. முத்துத் தொண்டைமானார் 1740

15. விசைய அருணாசல வணங்காமுடித் தொண்டைமானார் 1759

செப்பேடுகளுக்குத் "தொண்டைமான் செப்பேடுகள்". தஞ்சாவூர், தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு, டிசம்பர் 2004; தொகுப்பாசிரியர்; புலவர் செ. இராசு.

## தொண்டைமானார்கள் கொடை பெற்ற கோயில்கள்

இன்றைய புதுக்கோட்டை மாவட்டத்தில் திருமயம், ஆலங்குடி, அறந்தாங்கி, ஆவுடையார் கோயில் ஆகிய நான்கு வட்டங்களில் பல கோயில்கட்குக் கொடையளித்துள்ளனர்.

1. திருவரங்குளம், அரதீர்த்தேசுவரர் கோயில்
2. வளவர்மாணிக்கம், கைலாசநாதர் கோயில்
3. பழங்கரை, புராதனபுரீசுவரர் கோயில்
4. தாஞ்சூர், அகத்தீசுவரர் கோயில்
5. மணியம்பலம் தீராவினை தீர்த்தீசுவரர் கோயில்
6. குளவாய்ப்பட்டி, அடவேசுவரர் கோயில்
7. கோவிலூர், பாலபுரீசுவரர் கோயில்
8. ஆவுடையார்கோயில், திருப்பெருந்துறையுடையார் கோயில்
9. ஆளப்பிறந்தான், பூமீசுவரர் கோயில்
10. எட்டியத்தளி, அகத்தீசுவரர் கோயில்
11. கீரமங்கலம், பிரதியகேசுவரர் கோயில்
12. குறும்பூர், சித்தநாதீசுவரர் கோயில்
13. சிலட்டூர், பொன்னம்பல நாதீசுவரர் கோயில்
14. பரமண்டூர், ஆதிகேசவப் பெருமாள் கோயில்

இவையனைத்தும் அறந்தாங்கியரசு தொண்டைமானாரின் ஆட்சிக்கு உட்பட்ட ஊர்களில் உள்ள கோயில்களாகும். இவையல்லாமல் தன் ஆட்சிக்கு அப்பால் உள்ள கோயில்கட்கும், திருமடங்கட்கும் பல கொடைகளையளித்துள்ளனர்.

சேதுநாட்டில் உள்ள பெருவயல் சுப்பிரமணியர் கோயில், பெருவயல் பரமசிவன்கோயில், திருவாரூர்த் தியாகராசர் கோயில் ஆகியவற்றிற்கும் கொடையளித்துள்ளனர்.

திருவாவடுதுறை மடத்திற்கும், திருப்பனந்தாள் காசிமடத்தின் சார்பில் காசியிலும் அன்னதானம் அளிக்கப் பல ஊர்களைக் கொடையாக அளித்துள்ளனர்.

பிரான்மலை மங்கைநாதர் கோயிலுக்கும் கொடையளித்துள்ளனர். சைவ-வைணவக்கோயில்கட்கு வேறுபாடு இன்றிக் கொடைகள் வழங்கப்பட்டுள்ளன.

## அறந்தாங்கிக் கல்வெட்டு

அறந்தாங்கிக் கோட்டை விசுவநாதர் கோயில் மேற்குச்சுவர்.

1. "ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவர்த்தி கோனேரின்மை கொண்டான்

முத்தூற்றுக் கூற்றத்துப் பொய்கை நல்லூர்
திருச்சோமீசுவரமுடைய நாயனார் தேவதானம் . . . ற்கு
இவ்வூர் நான்கெல்லைக் குட்பட்ட நிலம் மாளவச்
சக்கரவர்த்தி பக்கல் தாங்கள் பெற்றுடையராய் இத்தேவற்கு
நெற்கடமையால் வந்த நெல்லுக்கு நிச்செயித் திறு . . . .
வரச்செய்யாதே யிக்கோயில் தானத்தாரிவ்

2. வூரில் ஒன்பதில் இரண்டு பத்துமாக் காணி நிலம் திருச்சென்னடைப்

புறமாய்க் காரண்மையாகச் சொல்லி
கல்வெட்டுப்படி கொண்டு வந்து காட்டினமையில் . .
இப்படியாலு . . . கும் வரியிலார் நிச்சயித்தபடி
யாண்டொன்றுக்கு ஊர்க்காலால் நெல்லு இரு நூற்றி
நாற்பதின் கலமும் மூன்றாவது முதல் கொள்வதாக
இக்கோயில் தானத்தார்க்கு ந . . . சொன்னோம் இவ்வாண்டு
முதல் இப்படி யி

3. றுத்து இவ்வூர் அந்தராயமும் வினியோகமும் மற்றும் எப்பெயர்ப்

பட்டனவும் தங்களுக்கு மடப்புறமாகக்
கைக்கொண்டு இவ்வாண்டு முதல் இப்படி அனுபவிக்க
இப்படி சந்திராதித்தவல் செல்வதாகக் கல்லிலும்
செம்பிலும் வெட்டி . . . யாண்டு 3 நாள்315 இவை நெற்காய
நாட்டு மெனச்சியான தரணி விச்சாதிர நல்லூர் சொக்கன்
ஆளுடை நாயனான கொங்கராஜன் எழுத்து
இவைஅண்டநாட்டுப் பெருமணலூர் மந்திரி இராமனான
. . . இது பன்மாகேசுவரர் ரட்சை”

என்பது அக்கல்வெட்டின் வாசகமாகும்.

## புதுக்கோட்டைத் தொண்டைமான்கள்

புதுக்கோட்டை மாவட்டப் பகுதியில் ஆலங்குடியைச் சுற்றியுள்ள கறம்பக்குடி, பிலாவிடுதி, கல்லாக்கோட்டை, நெல்வேலி, அம்மணிப்பட்டு முதலிய ஊர்களில் குடியேறிய தொண்டைமான் மரபினரில் அறந்தாங்கித் தொண்டைமான்களின் கால்வழியைச் சேர்ந்த ஆவுடைராயத் தொண்டைமான் கறம்பக்குடிப் பகுதியில் வாழ்ந்து வந்தார்.

விசயநகரப் பேரரசன் மூன்றாம் வேங்கடராயர் (1635-1642) இராமேசுவரம் யாத்திரை வரும்போது அவர் யானைக்கு மதம்பிடித்து அடங்காமலிருந்தது. கறம்பக்குடி ஆவுடைராயத் தொண்டைமான் அதை அடக்கி மன்னர் பாராட்டைப் பெற்றார். சில விருதுகளும் பெற்றர். 1661இல் அவர் இறந்தார்.

அவர் மகன் இரகுநாதராயத் தொண்டைமான்,கிழவன் சேதுபதியான இரகுநாத சேதுபதிகாத்த தேவர் மதுரை நாயக்கர் அரசுக்காகச் செய்த போரில் பேருதவி செய்தார். இரகுநாதராயத் தொண்டைமான் நட்பைப் பெற்ற கிழவன் சேதுபதி தொண்டைமானின் தங்கை காதலி நாச்சியாரைத்* திருமணம் செய்து கொண்டார். மைத்துனருக்குச் சம அந்தஸ்துக் கொடுக்க நினைத்த கிழவன் சேது "பல்லவன் சீமை" என்று அழைக்கப்பட்ட புதுக்கோட்டைப் பகுதிக்குத் தலைவராக இருந்த சிவந்தெழுந்த பல்லவராயரை நீக்கிவிட்டுப் புதுக்கோட்டைக்கு அரசராக 1686இல் இரகுநாதராயத் தொண்டைமானை நியமித்தார். 1686இல் தான்

---

* இப்பெயர் இராமேசுவரம் இராமலிங்கசுவாமி கோயில் அம்மன் மலைவளர் காதலி என்பதன் நினைவாக இட்ட பெயர் (திருஞான சம்பந்தர் தேவாரம் 3:101:3) சிறப்புமிக்க இப்பெயரைக் 'கதலி' என்றும் (சிரஞ்சீவி, சேதுபதி வரலாறு

புதுக்கோட்டை தொண்டைமான் ஆட்சி தொடங்குகிறது. *1948 வரை அவர்கள் ஆட்சி நீடித்தது.

1. இரகுநாத ராயத் தொண்டைமான் 1686-1730
2. விசயரகுநாதராயத் தொண்டைமான் 1730-1769
3. இராயரகுநாதத் தொண்டைமான் 1769-1789
4. விசயரகுநாதத் தொண்டைமான் 1789-1807
5. விசய ரகுநாத ராயத் தொண்டைமான் 1807-1825
6. இரகுநாதத் தொண்டைமான் 1825-1839
7. இராமச்சந்திரத் தொண்டைமான் 1839-1886
8. மார்த்தாண்ட பைரவத் தொண்டைமான் 1886-1928
9. இராசகோபாலத் தொண்டைமான் 1928-1948

---

ப.63 : மீ. மனோகரன், கிழவன் சேதுபதி, ப72), காத்தாயி என்றும் (தமிழக வரலாறு, மணிமேகலைப் பிரசுரம்), காட்டேரி என்றும் (நரசிம்மநாயுடு, தட்சிண இந்திய சரித்திரம்), காத்தாயி ஆயி என்றும் (ஜெ.ராஜா முகமது, புதுக்கோட்டை மாவட்ட வரலாறு, ப.63) பிழையாகக் கூறுகின்றனர். 20.11.1709இல் அளிக்கப்பட்ட கிழவன் சேதுபதி செப்பேட்டில் "காதலி நாச்சியார்" என்ற பெயர் உள்ளது (செ. இராசு, தொண்டைமான் செப்பேடுகள்)

*1640-1686க்கு உட்பட்ட காலத்திலும் புதுக்கோட்டைத் தொண்டைமான் ஆட்சி நடைபெற்றதாக ஜெ.ராஜா முகமது கூறுவது தவறு. தஞ்சை, இராமநாதபுரத்தில் அலுவல் பொறுப்பில் பல ஆண்டுகள் தங்கியிருந்த அவர்கள் புதுக்கோட்டைப் பல்லவன் சீமையில் தனியாட்சி செலுத்தியிருக்க இயலாது.

இந்திய உள்துறை அமைச்சர் சர்தார் வல்லபாய் பட்டேல் அவர்களுடன் புதுக்கோட்டை சமஸ்தானத்தின் எதிர்காலம்பற்றிப் பேச்சுவார்த்தை நடத்த அமைச்சர் அழைப்பின்படி புதுடெல்லி சென்ற இராசகோபாலத் தொண்டைமான் 3.3.1948 அன்று அமைச்சர் விருப்பப்படி தனிப் புதுக்கோட்டை சமஸ்தானத்தை இந்திய அரசுடன் இணைக்கும் ஒப்பந்தத்தில் தன் விருப்பமுடன் கையெழுத்திட்டார்

## புதுக்கோட்டை அறந்தாங்கித் தொடர்பு

புதுக்கோட்டைத் தொண்டைமான் மரபில் முதல்வராக வரலாற்றில் நமக்குத் தெரிபவர் ஆவுடைராயத் தொண்டைமான். இப்பெயர் ஐயத்திற்கு இடமின்றி 'திருப்பெருந்துறை ஆவுடையார்' தொடர்பான பெயரேயாகும். ஆவுடையார் கோயிலுக்கு உரியவர்களும், 'ஆவுடைய தம்பிரானார் ஸ்ரீபாதபக்தர்' என்று கூறிக் கொண்டவர்களும், 'ஆவுடைநாதர் அனுக்கிரகம் பெற்றோன்' என்று தம் மெய்க்கீர்த்தியில் கூறிக் கொண்டவர்களும், 'ஆவுடையாரே துணை' என்று கையெழுத்திடுபவர்களும் அறந்தாங்கித் தொண்டைமான்களேயாவர்.

திருநெல்வேலிப் பெருமாள் தொண்டைமானார் என்ற அறந்தாங்கி மரபினர் ஒருவர் குறும்பூர், எட்டியத்தளி போன்ற ஊர்களுக்குக் கொடையளித்துள்ளார். 'நெல்வேலி' என்ற பழம்பெரும் ஊர் புதுக்கோட்டைத் தொண்டைமான் ஆட்சிக்கு உட்பட்ட பகுதியில் உள்ளது.

அறந்தாங்கித் தொண்டைமான் மரபினரின் ஒன்பது செப்பேடுகள் உள்ளன. அறந்தாங்கித் தொண்டைமான் மரபில் ஆவுடை நாயனார் தொண்டைமானார் என்ற பெயர்கள் காணப்படுகின்றன. அறந்தாங்கி மரபினர் "இந்திரன் ஏழடி எதிர்கொளப் பெற்றோன்" என்று கூறிக் கொள்வதற்கு ஏற்பப் புதுக்கோட்டைத் தொண்டைமான்களும் தங்களை

இந்திரகுலத்தார் என்று கூறிக்கொள்கின்றனர். காஞ்சிபுரத்திற்கு உரியவர்கள் என்று அறந்தாங்கித் தொண்டைமான்கள் கூறிக்கொள்கின்றனர். புதுக்கோட்டைத் தொண்டைமான் செப்பேடு ஒன்று காஞ்சிபுரத்திற்கு உரியது. எனவே தொன்மையான அறந்தாங்கித் தொண்டைமான் கால்வழியில் வந்தவர்களே புதுக்கோட்டைத் தொண்டைமான் மரபினர் என்பது உறுதியாகிறது.

## குளத்தூர் தொண்டைமான்கள்

புதுக்கோட்டை அரசராக இரகுநாதராயத் தொண்டைமான் 1686இல் நியமிக்கப்பட்ட காலத்தையடுத்துச் சில ஆண்டுகளில் மதுரை நாயக்கமன்னர் ரங்க கிருஷ்ண முத்து வீரப்ப நாயக்கர் (1682-1689) திருநெல்வேலிப் பாளையக்காரர்களை அடக்கப் போர் செய்தார். அப்போரில் புதுக்கோட்டை மன்னராக நியமிக்கப்பட்ட இரகுநாதராயத் தொண்டைமானின் சகோதரர் நமணத் தொண்டைமான் நாயக்கருக்காகப் போர் செய்து வெற்றிபெறக் காரணமாக இருந்தார்.

நாயக்க மன்னர் நமணத் தொண்டைமானைக் குளத்தூர்ப் பாளையக்காரராக நியமித்தார். நமணத் தொண்டைமான் தன் பெயரோடு நாயக்க மன்னர் பெயரையும் சேர்த்துக் கொண்டு ரங்க கிருஷ்ண முத்து வீரப்ப நமணத் தொண்டைமான் என்று பெயர்வைத்துக் கொண்டு நிர்வாகம் செய்தார். 1750 வரை குளத்தூர் தொண்டைமான்களின் நிர்வாகம் நீடித்தது.

1. ரங்க கிருஷ்ண முத்துவீரப்ப நமணத் தொண்டைமான் 1688-1713
2. விசயரங்க சொக்கநாத ராமசாமித் தொண்டைமான் 1713-1735
3. நமணத் தொண்டைமான் 1735-1750

குளத்தூர்ப் பாளையம் விசயரகுநாதராயத் தொண்டைமான் (1730-1769) காலத்தில் புதுக்கோட்டை சமஸ்தானத்துடன் இணைக்கப்பட்டது.

தொண்டைமான் மரபினரின் சில தெலுங்கு மொழித் தொடர்புச் சொற்களையும், மிகச்சில தெலுங்கு ஆவணங்களையும் கொண்டு இவர்கள் தாய்மொழி தெலுங்கு என்று புதுக்கோட்டை மாவட்ட வரலாற்றில் ஜெ.ராஜாமுகம்மது அவர்கள் எழுதியுள்ளார்கள்.

தமிழகக் குறுநில மன்னர்கள், பாளையக்காரர்கள் அனைவருமே மதுரை நாயக்கர் ஆட்சிக்காலத்தில் தங்கள் நிர்வாகத்தில் பல நிலைகளில் தெலுங்கைக் கையாண்டனர். அம்முறையில் தொண்டைமான்கள் தெலுங்கைப் பயன்படுத்தினரே தவிர இவர்கள் தெலுங்கர்கள் அல்லர்.



செப்பேட்டில் மாணிக்கவாசகர்

**உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்**
**சென்னை - 600 113**

## அண்மை வெளியீடுகள்

| | ரூ.பை. |
|---|---|
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி. 901 - கி.பி. 1300 | 100.00 |
| தொல். பொருள். (அகம்-புறம்)-ஆங்கில மொழிபெயர்ப்பு | 50.00 |
| தமிழ் ஆய்வு இதழ்கள் | 50.00 |
| வேதாத்திரியத்தில் சமூகவியல் இறையியல் சிந்தனைகள் | 130.00 |
| உலகத் தமிழிலக்கிய வரலாறு கி.பி. 1851 - 2000 | 180.00 |
| இதழாளர் பெரியார் | 160.00 |
| மகாவித்துவான் ரா. ராகவையங்கார் | 30.00 |
| தமிழ் இதழ்கள் - விடுதலைக்குப் பின் | 40.00 |
| பாவாணரின் ஞாலமுதன்மொழிக் கொள்கை | 45.00 |
| பெண்ணியப் படைப்பிலக்கியம் | 75.00 |
| தமிழக வானவியல் சிந்தனைகள் | 35.00 |
| பள்ளு இலக்கியம் மறுவாசிப்பு பிரதிக்கு வெளியே | 75.00 |
| இருபதாம் நூற்றாண்டுத் தமிழ்க் கவிதை | 80.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள்-நாட்டுப்புறவியல்,கலை,பண்பாடு | 90.00 |
| தொல்காப்பியம்-எழுத்ததிகாரம் மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 200.00 |
| வாழிய செந்தமிழ் | 140.00 |
| பேராசிரியர் அ.மு.பரமசிவானந்தம் | 40.00 |
| தமிழக எல்லைப் போராட்டங்கள் | 60.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி - I | 90.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி - II | 90.00 |
| திருப்புகழ் ஒளிநெறி பகுதி - III | 80.00 |
| தொல்காப்பியம்-சொல்லதிகார மூலமும் சேனாவரையருரையும் | 200.00 |
| தொல்காப்பியம்-பொருளதிகார மூலமும் நச்சினார்க்கினியர் உரையும் | 325.00 |
| தொல்காப்பியம் - பொருளதிகார மூலமும் பேராசிரியர் உரையும் | 300.00 |
| Economic Heritage of the Tamils | 115.00 |
| மலேசியத் தமிழரும் தமிழும் | 100.00 |
| மொழி, சமய, சமுதாயத் தளங்களில் பாவாணர் பங்களிப்பு | 50.00 |
| தமிழ்ப் புனைகதைகளில் உளவியல் | 35.00 |
| தமிழியல் ஆய்வுச் சிந்தனைகள் - தொல்லியல், வரலாறு, சமூகவியல் | 100.00 |
| கவிதையியல் | 50.00 |
| கதைப் பாடல்களில் கட்டுப்பாட்டு மீறல்கள் | 95.00 |
| Bibliography on Translations | 175.00 |
| **சங்க இலக்கிய ஆய்வு தெ.பொ.மீ.யும் மேலை அறிஞரும்** | **60.00** |
| **602 அறந்தாங்கித் தொண்டைமான்கள்** | **45.00** |